ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சனர் பதில்

(ஒன்பதாவது சதகம்)

['கீதாசார்யன்' பத்திரிகையில் வெளிவந்தது]

## மதங்கள், சாஸ்திரங்கள், இலக்கியங்களில் வாசகர்களின் 100 ஐயவினாக்களுக்கு ஆசிரியரின் விளக்கங்கள்




பதிப்பாசிரியர் & கிடைக்குமிடம்

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ஸுதர்சனர்)

அட்வகேட்

'ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம்' ஆசிரியர்

8B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 17



ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.



டிரஸ்டிகள்:

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A., B.L., அட்வகேட்

S. ராம அய்யங்கார், B.Sc., B.L., அட்வகேட்



விலை ரூ. 5.00] 1987 [தபால் ரூ. 0.75

[கேள்விகளுக்கு விஷயமான பத்திரிகை, பேச்சாளர், எழுத்தாளர் பெயர்கள், கேள்விகளின் எண்ணும் கீழே தரப்படுகின்றன]

1. ஞானபூமி — 10, 11, 12, 13, 14, 23, 39, 53, 57, 58, 59, 83, 91.
2. இந்துமதம் அழைக்கிறது — 17,
3. இதயம் — 19, 45, 54,
4. விகடன் — 24, 36,
5. ஓம் சக்தி — 32, 63, 64, 65,
6. கல்கி — 35, 43, 46, 52, 88, 89, 95, 99,
7. ராணி — 37,
8. தினமலர் (வாரமலர்) — 38,
9. குமுதம் — 40, 50,
10. தினமணி — 44, 67,
11. ஸட்தகிரி — 47, 51, 71,
12. இந்தியன் எக்ஸ்பிரஸ் — 49, 75,
13. கலைமகன் — 60 72, 85, 86, 87, 94, 96,
14. விஜயபாரதம் — 66,
15. துக்ளக் — 73,
16. ஹிந்து — 74, 76, 77,
17. தாய் — 84,
18. ஸ்ரீக்ருஷ்ண ஹப்ரியா — 97,
19. கிருபானந்தவாரியார் — 13, 73,
20. புலவர்கீரன் — 93
21. சாண்டில்யன் — 15
22. சென்னை தொலைகாட்சி நிலையம் — 18, 82, 98
23. மு மு இஸ்மாயில் — 50, 55,
24. தொழிலதிபர் நா. மகாலிங்கம் — 63, 65,
25. ஸ்ரீ ராகவேந்திரர் திரைப்படம் — 68,
26. காமகோடி பீடாதிபதிகள் — 72, 76, 85, 86 87, 99,
27. வராகூர் கல்யாணசுந்தரசாஸ்திரி — 81,

[[illegible] 478, 479 இரு இதழ்களில் முறையே வெளியான '[illegible]', 'விளம்பர மாயை உடைகிறது' என்ற இரு கட்டுரைகளும் இந்த சதகத்தில் அநுபந்தமாக முதலில் இணைக்கப்படுகின்றன]

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

ஜோதி-40] [ஒளி-10

## விளம்பர மடாதிபதிகள்.

[ஸுதர்சனர்]

தமிழ்நாட்டில் பல மதங்களைச் சேர்ந்த பல மடங்கள் உள்ளன. வெளிமாநிலங்களிலும் பல மடங்கள் உள்ளன. மற்ற மடங்களுக்கெல்லாம் கிடைக்காத அளவுக்குமீறிய விளம்பரம் காமகோடிமடத்துக்கே சென்ற முப்பது வருடங்களுக்கு மேலாகக் கிடைத்து வருகிறது. இதன் வரலாற்றைச் சிறிது ஆராய்வோம். கி. பி. 1950 ம் வருடத்திற்கு முன் காமகோடி மடத்தில் சந்த்ரசேகரர் ஒருவரே மடாதிபதியாயிருந்தார். அப்பொழுது அந்த மடத்துக்குப் பத்திரிகைகளில் (இப்போது போல) அதிகமாக விளம்பரம் கிடையாது. பாரத தேசத்தில் நாலு திசைகளிலும் உள்ள ஜோஷிமட், துவாரகை, பூரி, சிருங்கேரி என்னும் நாலு இடங்களிலுமிருக்கும் நாலு சங்கராசார்யர்களும் தங்களுடைய நாலு மடங்களே ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்டவை என்று கூறி வந்தார்கள். சிருங்கேரிமடத்திலிருந்து மனஸ்தாபப்பட்டுக் கொண்டு ஒரு சில நூற்றுண்டுகளுக்குள் வெளிவந்த ஒரு ஸந்யாஸி கும்பகோணத்தில் மடம் கட்டிக்கொண்டு வாழ்ந்தாரென்றும், அந்த மடத்தில் மடாதிபதியாயிருந்தவர்கள் பிற்காலத்தில் காஞ்சீபுரத்தில் ஒருமடத்தைக் கட்டிக்கொண்டு அதற்குக் காமகோடி பீடம் என்று பெயர்வைத்து "இவ்விடத்திலேயே ஆதிசங்கரர் ஸர்வஜ்ஞ பீடத்தில் ஏறி இந்த மடத்தை

ஸ்தாபித்தார், கடைசியில் இங்கேயே ஸித்தி அடைந்தார்" முதலான பொய்க்கதைகளைக் கற்பித்து அதற்குத் தக்கபடி ஆதிசங்கரரிலிருந்து மூவாயிர வருஷங்களுக்கு ஒரு குரு பரம்பரை நூலையும் கற்பித்துக்கொண்டு உலவிவரும் போலிமடமே காமகோடி மடம் என்றும் சிருங்கேரிமடத்துக் காரர்கள் சொல்லி வந்தார்கள். காமகோடி மடத்துக்கும் சிருங்கேரிமடத்துக்கும பல வழக்குகளும் நடந்துவந்தன இந் நிலையில் மஹா ராஜதந்திரியான சந்த்ரசேகரர் காமகோடி மடத்தை விளம்பரத்தின் மூலம் பாரததேசமெங்கும அறியச் செய்து "அதுவே தலைசிறந்த ஆதிசங்கராசார்ய மடம்" என்று பொதுமக்களை நம்பவைக்க உறுதி கொண்டார். அதற் காகப் பத்திரிகைகள், பணக்காரர்கள், அரசியல்வாதிகள் முதலிய அனைவரையும் தம் வசப்படுத்திக்கொள்ளத் தொடங்கினர்.

"எல்லா ஜீவர்களும் ப்ரஹ்மமே; உலகம் பொய்த் தோற்றமே" என்னும் அத்வைத மதம் பொதுமக்களிடம் விலை செல்லாது என்று உணர்ந்த சந்த்ரசேகரர் "எல்லா தெய்வங்களும் ஒன்று; குறிப்பாக அரியும் சிவனும் ஒன்று; அறியாதவன் வாயில் மண்ணு" என்னும் சிவ விஷ்ணு ஸாம்ய வாதத்தைப் பரப்புவதே தமக்குப் பாமரமக்களிடம் மிகுதியான விளம்பரத்தைத் தரும் என்று கண்டார். 1957-58ல் சென்னையில் முகாமிட்டு "விஷ்ணுவுக்கும் தமோ குணம் உண்டு; சிவனுக்கும் ஸத்வ குணம் உண்டு; ஆகையால் இருவரும் ஒன்றே" என்னும் சாஸ்த்ர விருத்த வாதத்தை எல்லாப் பத்திரிகைகளிலும் வெளியிட்டார். இந்தப் பிரசாரத்தை வலுப்படுத்துவதன் மூலம் வைஷ்ண வத்தை அழித்துவிடலாம் என்றும் அவர் கனவு கண்டார். ஆனால் ஸுதர்சனத்தின் மூலம் இந்தப் பொய்ப் பிரசாரத் திற்கு அசைக்கமுடியாத மறுப்பு "ஸாத்விகவிஜயம்" என்னும் நூலாக வெளிவந்தது. அதற்குப் பத்திரிகைகள் மூலம்

பதில் உரைக்கத் தொடங்கிய சந்த்ரசேகரர் "ஸாத்விக விஜய ஸந்தேஹ பரிஹாரம்" என்னும் பதிலைப்பெற்று, அதற்கு எந்த பதிலையும் சொல்ல இயலாமல், பத்திரிகைகளில் பொய்ப்பிரசாரம் செய்வதன் மூலமும், வைஷ்ணவப் பிரமுகர்களையும், தனிகர்களையும், வித்வான்களையும் பணம் முதலானவற்றாலே தம் வசப்படுத்திக் கொள்வதின் மூலமும் வைஷ்ணவத்தை அழித்துவிட உறுதி கொண்டார். அதற்காகப் பத்திரிகைகளில் தமது கட்டுரைகள் மூலமும், தமக்கு வேண்டியவர்களான எழுத்தாளர்களின் நாவல்கள், சினிமாக்கள் முதலான பிரசாரஸாதனங்களின் மூலமும் விஷ்ணு வைஷ்ணவ துவேஷப்பிரசாரத்தை முழுமூச்சாக முடுக்கிவிட்டார். சிவவிஷ்ணு கோயில் பணத்தைக்கொண்டு அறநிலைய இலாக்காவின் ஆதரவோடு எல்லாக் கோயில்களிலும் திருப்பாவை திருவெம்பாவை மகாநாடுகள் நடத்துவதன் மூலமும் வைஷ்ணவத்தை அழிக்க அரும்பாடுபட்டார். ஆனால் ஸுதர்சனத்தின் இடைவிடாத எதிர்முயற்சிகளால் சந்த்ரசேகரரின் அஸுர ராக்ஷஸ பலத்துடன் கூடிய வைஷ்ணவ விரோத முயற்சிகள் அவருக்கு முழுவெற்றியை அளிக்கவில்லை.

ஆயினும் பத்திரிகைகள், வானொலி, சினிமா, நாவல்கள் முதலானவற்றின் மூலம் வைஷ்ணவ விரோதப் பிரசாரங்களை முடுக்கிவிடுவதிலும், வைஷ்ணவ வைதிக வித்வான்களுக்கு ஸம்மானம் செய்து அவர்களை வசப்படுத்துவதிலும். பல கபட நாடகங்களை ஆடி அரசியல் வாதிகள் மூலம் வைணவத்திற்குத் தீங்கிழைப்பதிலும் சந்த்ரசேகரர் ஓரளவு வெற்றி கண்டார் என்பதை மறுக்கமுடியாது.

இத்தகைய பகவத் பாகவத அஸஹ்யாபசாரங்களால் கடும் சீற்றமுற்ற கபடநாடக ஸூத்ரதாரியான எம்பெருமான் கடந்த ஒருமாத காலமாகக் காமகோடி மடத்திற்குத்

தக்க தண்டனையை வழங்கியுள்ளான் என்பதை உலகு அறியும். திடீரென்று ஒருநாள் சந்த்ரசேகரரின் சிஷ்யரான ஜயேந்திரர் காணாமல் போகிறார். அதுபற்றிப் பல வதந்திகள் நாடெங்கும் பரவுகின்றன. விளம்பரமடாதிபதிகளான இவர்களை நடமாடும் தெய்வமாக்கி வந்த பத்திரிகைகள் முதலான பிரசாரஸாதனங்கள் அனைத்தையும இந்தச் செய்தியே ஆக்ரமித்துக்கொள்கிறது. "ஜயேந்திரர் காரில் ஹிமாலயம் நோக்கி அதிவேகமாகச் செல்கின்றார்" என்றும், அவரை ஆந்திரக் காடுகளில் போலீஸ் படைகள் பின்தொடருகின்றன என்றும், 'அவனை ஒன்றும் செய்யவேண்டாம்' என்று சந்த்ரசேகரர் கேட்டுக் கொண்டிருப்பதாகவும காமகோடி பக்தப் பத்திரிகைகளில் நவரச நாடகச் செய்திகள் வருகின்றன. மற்றபத்திரிகைகளிலும் சென்னைச் சுவரொட்டிகளிலும் பல விபரீதமான வதந்திகள் வெளியிடப்படுகின்றன. இதற்கிடையே தலைக் காவேரியில் ஜயேந்திரர் கண்டுபிடிக்கப்படுகிறார். "சாதுர் மாஸ்யத்தின் நடுவில் தண்ட கமண்டலங்களை விட்டுச் சென்றதால் அவருக்கு இனி பீடாதிபதியாயிருக்கத் தகுதியில்லை. அவர் ஒரு பைராகி ஸந்யாஸியே" என்று காம கோடி பக்தப் பத்திரிகைகளிலேயே செய்திகள் வருகின்றன. மடத்திற்குத் தீராத அவமானத்தை விளைத்துவிட்டுத் தன் சிஷ்யர் ஓடிவிட்டதைக்கண்டு கண்ணீர் விட்டுக் கதறிய சந்த்ர சேகரர் அப்போதே மேஜரான விஜயேந்திரருக்குப் பீடாதிபதிப் பட்டத்தைக் கட்டுகிறார். இதற்கிடையே தலைக் காவேரியிலிருந்து ஜயேந்திரர் "நான் நாடெங்கும் பிரசாரம் செய்து புதிய இயக்கத்தைத் தோற்றுவித்து ஜாதிமதங்களையெல்லாம் ஒழித்து இந்துக்களை ஒன்றுக்கிவிடப் போகிறேன்" என்று அறிக்கை விடுகிறார். "ஆஹா! மற்றொரு விவேகாநந்தர் தோன்றி விட்டார்" என்று காமகோடி பக்தர்களெல்லாம் ஆரவாரம் செய்கிறார்கள். இந்த ஆரவாரத்தில் சாதுர் மாஸ்யத்தின் இடையில் தண்டகமண்டலங்களை விட்டுச் சென்ற ஸந்யாஸதர்ம விருத்தமான செயல் அமுங்கிவிடு

கிறது. 'நான் தண்டத்தை என் உடலினுள் ஆகர்ஷணம் செய்துகொண்டே கிளம்பினேன்' என்று ஜயேந்திரர் அறிக்கைவிடுகிறார். திடீரென்று ஒருநாள் அவர் தண்டத்துடன் காட்சியளிக்கிறார், ஒரு பக்தப்பத்திரிகை ''ஜயேந்திரர் ஆதிசங்கரர் சிலைக்குப் பக்கத்திலிருந்த ஒரு தண்டத்தை எடுத்துக்கொண்டே சென்றார்'' என்று கதைகட்டிவிடுகிறது. துவாரகை சங்கராசார்யர் ''காமகோடிமடம் ஆதிசங்கரர் ஸ்தாபித்ததல்ல'' என்று பத்திரிகைகளில் அறிக்கை விடுகிறார். ''ஜயேந்திரர் மடத்துக்குத் திரும்பலாம்'' என்று காஞ்சி மடத்திலிருந்து அழைப்பு அவருக்குச் செல்கிறது. உடனே அவர் மடத்துக்கு வருகிறார். அதைப்பற்றிப் பத்திரிகைகளிலும் தொலைக்காட்சியிலும் அளவுக்கு மீறிய விளம்பரங்கள்! ஜயேந்திரர் திருப்பதி செல்கின்றார். அங்கு ஒரு வருஷத்திலேயே இரண்டாவது முறையாக அவருக்கு மடாதிபதிகளுக்கு உரிய மரியாதைகள் செய்யப்படுகின்றன. வழக்கத்தைமீறிய இச்செயல்பற்றிக் கேள்விகேட்பார் ஆருமில்லை. மறுபடியும் காஞ்சீமடத்துக்குத் திரும்புகிறார் ஜயேந்திரர். எவரும் எதிர்பாராதவிதமாக 'அவரே மறுபடியும் காமகோடி மடாதிபதியாக ஆக்கப்பட்டார்' என்னும் செய்தி வருகிறது. ''சாதுர்மாஸ்யத்தின் இடையில் தண்டகமண்டலங்களைவிட்டுச்சென்ற பைசாகி ஸந்யாஸிக்கு எந்த ப்ராயச்சித்தமும் செய்யாமல் மறுபடியும் அவரைப் பீடாதிபதியாக்கினது முறையல்ல'' என்பது வெளிப்படையாக விளங்குகிறது. காமகோடி மடத்திலிருந்துகொண்டே இவர் ஜாதி மதங்களையெல்லாம் ஒழித்து இந்துக்களை ஒன்றாக்கி மற்றொரு விவேகாநந்தராகப்போகிறார் போலும்! 20—9—87 விகடன் பேட்டியில் தண்டத்தைவிட்டுச் சென்றதுபற்றிக் கேள்வி கேட்டபோது, ''ஒருநிலை வரும்போது, ஒரு பக்குவம் என்று வரும்போது எதுவும் அவசியமில்லை என்று ஆகிவிடும்'' என்று பதில் கூறியிருக்கிறார் இவர். அப்படியானால் இவருக்குக் காவித் துணி எதற்கு என்று நமக்குப் புரிய

வில்லை. அக்டோபர் 2ல் அரசியலையும் மதத்தையும் தனியாகப் பிரிந்து இந்தியர்கள் அனைவரையும் சாதிமதப் பிளவுகளிலிருந்து காப்பாற்றி ஒற்றுமைப்படுத்தும் திட்டம் ஒன்றை வெளியிடப் போவதாகவும், அதற்கு அகில இந்திய விளம்பரம் ஏற்படுவதற்காகவே காஞ்சி மடத்தைவிட்டு வெளியேறியதாகவும், தம்முடைய இயக்கம் அரசியல்வாதிகளிடமிருந்து நாட்டை மீட்கும் இயக்கம் என்றும் விகடன் பேட்டியில் இவர் கற்பனைக் கோட்டைகளைக் கட்டுகிறார். இன்று நாடு இருக்கும் நிலையில் இது பகற்கனவாக முடியும் என்பது சிறிது அறிவுள்ளவர்க்கும் விளங்கும்.

ஆனால் ஒன்று நிச்சயம். பொய் விளம்பரங்களின் மூலம் சிலரைச் சிலநாள் ஏமாற்றலாம். அனைவரையும் எல்லாக் காலத்திலும் ஏமாற்றிவிட முடியாது. விளம்பர மடாதிபதிகள் விஷயத்திலும் இவ்வுண்மையைக் காலம் நிரூபிக்கும்.

## நவதிருப்பதி நிர்வாகம்

ஆழ்வார்திருநகரி முதலான நவதிருப்பதிகளின் நிதிநிலைமை சீர்குலைந்திருப்பதால் அவற்றைத் திருச்செந்தூர் முருகன் கோவில் நிர்வாகத்தின்கீழ் கொண்டுவரவேண்டும் என்று அறநிலையத்துறை ஆலோசிப்பதாக ஒரு செய்தி கூறுகிறது. இது முறையற்றது. நெல்லைக்கருகில் ஆழ்வார் திருநகரி செல்லும் வழியிலுள்ள சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த கிருஷ்ணாபுரம் பெருமாள் கோயில் திருச்செந்தூர் முருகன் கோவில் நிர்வாகத்தின்கீழ் கொண்டுவரப்பட்டதாகவும். அதற்குப்பின் அங்கு உத்ஸவங்களில் முருகன் விளம்பரங்கள் மிகுதியாகச் செய்யப்படுவதாகவும் அறிகிறோம். "மற்றை தெய்வம் நாடுதிரே" என்று முழங்கிய ஆழ்வாரின் அவதார ஸ்தலமும் அவர் மங்களாசாஸனம் செய்த திவ்ய தேசங்களும் மற்றொரு தெய்வத்தின் ஆலய நிர்வாகத்தின்கீழ் வருவதற்கு வைஷ்ணவ சமூகம் அநுமதிக்கக்கூடாது. தங்கள் எதிர்ப்புக் குரலை அனைவரும் அறநிலையத்துறைக்குத் தெரிவிக்க வேண்டும். அத்துடன் வைஷ்ணவ மடாதிபதிகளும், சபைகளும், தனவான்களும், பிரமுகர்களும் ஒன்றுசேர்ந்து நவதிருப்பதிகளில் நலிந்த நிலையிலிருக்கும் சில திவ்ய தேசங்களின் நிதிநிலைமையைச் சீர்படுத்தவும் முன்வர வேண்டும்.

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-40] [ஒளி-11

## விளம்பர மாயை உடைகிறது.

(ஸுதர்சனர்)

சென்ற இதழில் நமது தலையங்கத்தில் காமகோடி மடாதிபதிகளின் (விளம்பர) முகத்திரையைக்கிழித்து, அவர்களது உண்மை ஸ்வரூபத்தை வெளிப்படுத்தியதற்காக ஏராளமான அன்பர்கள் நேரிலும் கடிதம் மூலமும் நம்மைப்பாராட்டியுள்ளனர். ஒரு வாசகர் மட்டும் "காமகோடிமடம் நாட்டுக்குப் பல நன்மைகள் செய்திருக்கும்போது, அதைக் கண்டித்து எழுதலாமா?" என்று கேட்டிருக்கிருர். ஒருமடம் சில நன்மைகளைச் செய்ததால், அது செய்துவரும் பல தீமைகளும், அதற்குக் கொடுக்கப்படும் அதீதவிளம்பரமும் நியாயமாகிவிடமாட்டா. காமகோடி மடத்தைவிட மிகுதியான நன்மைகளைச் செய்து தீமையொன்றும் செய்யாத சைவ வைஷ்ணவ அத்வைதமடங்களுக்கும் ஸந்நியாஸிகளுக்கும் ஏன் இத்தகைய விளம்பரம் கொடுக்கப்படுவதில்லை என்பதை ஆராய்வதே நமது கட்டுரையின் நோக்கம். நிர்.

எல்லாப் பத்திரிகைகளிலும் த்வாரகை சங்கராசார்யர் காமகோடி மடத்தைக்குறித்து வெளியிட்ட அறிக்கையைக் கண்டித்து 3-9-87 தேதியிட்ட "ஹிந்து" பத்திரிகையில் இரு முன்னாள் உயர்நீதிமன்ற நீதிபதிகளின் கடிதம் வெளிவந்தது. பல ஆதாரங்களைக்கொண்டு பங்களூர்-69ல் வாழும் திரு V. ராஜகோபால் சர்மா [1000, East End 'A' Main Road, Jayanagar East (IX Block)] அவர்கள் "ஹிந்து"வுக்கு ஓர் கடிதம் எழுதினார். விளம்பர மடாதிபதிகளுக்கு விரோதமானதாகையாலே அக்கடிதம் 'ஹிந்து'

யில் வெளியிடப்படவில்லை. அக்கடிதத்தை அச்சிட்டு அவர் பலருக்கு அனுப்பியிருக்கிறார். நமக்கும் அனுப்பியுள்ளார். அன்பர்கள் உண்மையை உணர்ந்துகொள்ள உதவுமாகை யால் அடுத்த பாராவில் அதன் கருத்தை அளிக்கிறோம்.

## காமகோடிமடம் — ஒரு பொய் அம்பலமாகிறது

23-8-87 அன்று ஸ்ரீஜயேந்த்ரஸரஸ்வதிஸ்வாமி மர்மமான முறையில் எவருக்கும் சொல்லாமல் சாதுர்மாஸ்யத்தின் இடையில் மடத்தைவிட்டு திடீரென்று வெளியேறியதை ஹிந்துவில் கடிதம் எழுதியவர்கள் "யாத்ரை" என்று வருணித்திருப்பது பொருந் தாது, வ்யாஸ பூஜையில் 'சாதுர்மாஸ்யகாலம் முடியும் வரையில் அவ்விடத்திலேயே இருப்பேன்' என்று ஸங்கல்பம் செய்துகொண் டிருக்கையில், தண்டி ஸந்யாஸிகள் அவ்விடத்திலிருந்து வெளி யேறுவது சாஸ்த்ரத்தில் தடுக்கப்பட்டுள்ளது. இப்படி வெளி யேறுவது ஸந்யாஸிதர்மத்திற்கு முரணானது, 'தண்டவிஸர்ஜன' கர்மத்தைச்செய்யாமல் அவர் தண்டத்தை மடத்தில் விட்டுச் சென்றதும் சாஸ்த்ரவிருத்தமானது. ஆகையால் த்வாரகை சங்கராசாரியரின் அறிக்கையில் இதைக் கண்டித்தது சரியானதே யாகும். "காமகோடிபீடம் ஆதிசங்கராசார்யரால் ஸ்தாபிக்கப் பட்ட மடமல்ல" என்று த்வாரகை சங்கராசார்யர் அறிவித்ததற்கு ஆதாரங்கள் பின்வருமாறு:- (1) 1963-வது வருடத்தில் வாரணாஸி யைச் சேர்ந்த R. சர்மா எழுதிய "ஸ்ரீமத் ஜகத்குரு சங்கரமட விமர்சம்" "காமகோடிமட விவாதம்" என்னும் இருபுத்தகங்களில் காஞ்சிமடம் வெளியிட்டுள்ள எல்லா வெளியீடுகளையும் ஆராய்ந்து அம்மடம் ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்டதல்ல என்னும் விஷ யத்தைப் பல ஆதாரங்களைக்காட்டி அசைக்கமுடியாதபடி நிலை நாட்டப்பட்டுள்ளது. அந்நூல் புத்தகத்திற்கு முன்னாள் ஜனாதிபதி Dr. ராஜேந்த்ரப்ரஸாத்தும், Dr. ஸம்பூர்ணாநந்தும் மற்றும் பல ரும் முகவுரையளித்துள்ளனர், இந்நூலில் நாலு திசைக்குமுரிய நாலு சங்கராசார்யர்களுடைய அபிப்ராயங்களும், Dr. S. ராதா கிருஷ்ணன், பண்டித ஜவஹர்லால் நேரு, ஸர். C. P. ராமஸ்வாமி அய்யர் முதலான பல அறிஞர்களின் கருத்துக்களும் வெளியிடப் பட்டுள்ளன. (2) முற்கூறிய R. சர்மா 1971-ல் வெளியிட்ட "ஸத்யாந்வேஷணம்" என்னும் புத்தகத்திலும் காஞ்சிமடம் ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்டதல்ல என ஐயத்திற்கு இடமின்றி நிலைநாட்டியுள்ளார். (3) 1876ல்

ஸ்ரீவேங்கடரத்னம்பந்துலு "சங்கரமடதத்வப்ரகாசிகா" என்னும் தமது நூலில் காஞ்சிமடம் செய்துவரும் பொய்ப்பிரசாரங்கள் அனைத்தையும் அம்பலப்படுத்தியிருக்கிறார். (4) பட்டஸ்ரீ நாராயண சாஸ்திரி தமது "ஆசார்யசரிதவிமர்சம்" எனும் நூலில் காஞ்சி மடத்தின் பொய்வாதங்களுக்கு மரணஅடி கொடுத்திருக்கிறார். பம்பாய் உயர்நீதிமன்றம் தனது தீர்ப்பிலும், முற்கூறிய சங்கரமட விமர்ச நூலிலும் 1886ல் வாரணாஸியில் கூடிய பண்டிதஸதஸ் ஆதிசங்கரர் நாலு மடங்களையே ஸ்தாபித்தார் என்று முடிவு செய்துள்ளது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இந்திய அரசு 147-66-S/II எண்ணிட்ட 28-5-66 தேதியிட்ட கடிதத்தில், ஆந்திர ஆராய்ச்சிக்குழுவின் ஆதிசங்கரர் ஆம்னாயமடங்களை சிருங்கேரி, த்வாரகை, பத்ரி, பூரி என்னுமிடங்களிலேயே ஸ்தாபித்தார் எனக்கூறியுள்ளது. அந்த மடங்களது சங்கராசார்யர்களும் தங்கள் ஸ்ரீமுகங்கள் மூலம் காஞ்சிமடத்தின் கற்பனையான வாதங்களைத் தரைமட்டமாக்கினர். (விமர்ச நூல் காண்க). 1986ல் வெளியான ஸௌந்தர்ய லஹரி நூலின் முகவுரையில் திரு. P. M. பகவதி வெளியிட்ட சொந்தக் கருத்துக்கள் தவறானவை என்னும் விஷயத்தில், பின்வரும் தீர்ப்புகளை வாசகர்கள் காணவேண்டும்:- (1) பாட்னா உயர்நீதிமன்றம் 1986ல் வழங்கிய பூரிமடம் வழக்கின் தீர்ப்பு. (2) தாரகேச்வரமடம் வழக்கில் கல்கத்தா உயர்நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பு (3) த்வாரகாமடம் வழக்கில் பம்பாய் உயர்நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பு (4) 19-ம் நூற்றாண்டில் ஏற்பட்ட சில பிரிவி கௌன்சில் தீர்ப்புகள் (5) 1974ம் வருஷத்தில் ஜோஷிமடம் வழக்கில் டில்லி உச்சநீதிமன்றம் வழங்கியதீர்ப்பு. நாட்டின் சட்டமாகிவிட்ட இத்தீர்ப்புகளில் ஆதிசங்கரர் சிருங்கேரி, த்வாரகை, ஜோஷி, பூரி ஆகிய நாலு திசைகளிலுள்ள நாலுமடங்களையே நாலு வேதங்களிலும் உள்ள நாலு மஹாவாக்யங்களுக்காக நிறுவினார் என முழங்கப்பட்டுள்ளது. (திரு. P. M. பகவதி முதலானவர்களுடையதைப்போல்) போகிறபோக்கில் சொல்லப்பட்ட கருத்துக்கள்ல்ல இவை. சேலம் அட்வகேட்டான திரு. சுவாமிநாத ஐயர் "A Legal View" [ஓர் சட்டநோக்கு] என்னும் புத்தகத்தில் இதுபற்றி மேலும் பல விஷயங்களை வெளிப்படுத்தியுள்ளார். காமகோடிபீடம் என்பது ஆதிசங்கரருக்கு முன்பே இருந்த

தேவயோனியான சக்திக்குரிய உபாஸநாபீடமாகும். ஆதிசங்கரர் ஸ்தாபித்தவை மனிதர்களான மடாதிபதிகள் வாழவேண்டிய நாலு மடங்களே; அவை "ஆம்நாயபத்ததி" எனப்படும் மடாம்நாயங்களால் பிணைக்கப்பட்டவை. மனிதர்கள் வாழ வேண்டிய மநுஷ்யயோனியான காஞ்சிமடத்தை தேவயோனியான காமகோடிபீடத்தோடு ஒன்றுக்கி நாம் குழப்பிக்கொள்ளக் கூடாது. செங்கல்பட்டு கலெக்டரான Mr, A. Freeze என்பவரும் ஸ்ரீநிவாஸராவ் என்னும் காஞ்சி அமில்தாரும் 1837ல் கும்பகோணம் மடாதிபதியைக் 'காஞ்சிக்குப் புதிதாக வந்தவர்' என்றே தெளிவாக வர்ணிக்கிருர்கள். 1839ல், அப்போது கும்பகோணம் மடாதிபதியாயிருந்தவர் அரசு உத்தரவுபெற்றுக் காமாட்சி கோயிலுக்குக் கும்பாபிஷேகம் செய்வித்தார். அப்போது அந்த மடாதிபதி கிழக்கிந்திய கம்பெனியைத் தன்னைக் காமாட்சி கோயிலுக்கு தர்மகர்த்தாவாக நியமிக்கும்படி வேண்டினுர். 5-11-1842ல் கலெக்டர் அவ்வண்ணமே அவரை தர்மகர்த்தாவாக நியமித்தார். மதராஸ் ரெவினியூபோர்டார் கேட்ட கேள்விக்கு, "கும்பகோணம் மடாதிபதியைக் காமாட்சி கோயிலுக்கு தர்மகர்த்தாவாக நியமித்து நான் உத்தரவிட்டது அந்த மடாதிபதியின் செல்வத்தையும் சொத்துக்களையும் கருதியே; ஆகையால் அந்த மடாதிபதிக்கு அக்கோயிலின்மேல் எந்த அதிகாரமும் உரிமையும் கிடையாது" என்றே கலெக்டர் பதில் எழுதியிருக்கிருர்.—V. ராஜகோபால் சர்மா, பங்களூர்-69.

அன்பர்களே! அத்வைதியான ஒருவர் காஞ்சிமடத்தின் பூர்வநிலையைப்பற்றி ஆதாரங்களுடன் எழுதியிருக்கும் இக்கடிதத்திலிருந்து அம்மடத்தின் முந்தைய வரலாறு தெளிவாக விளங்குகிறது. சந்திரசேகரர் மடாதிபதியாக வந்தபிறகு அம்மடத்தின் ,வரலாற்றையும், ஜயேந்திரரால் அம்மடத்திற்கு ஏற்பட்ட தீராத அவமானத்தையும், அதை மூடிமறைக்கப் பத்திரிகைகள், தொலைக்காட்சி முதலான விளம்பரசாதனங்கள் செய்யும் முயற்சிகளையும் "விளம்பரமடாதிபதிகள்" என்னும் தலைப்புள்ள சென்ற இதழ்த் தலையங்கத்தில் கண்டோம். இனி, சந்திரசேகர [illegible] தனக்கு அதிக விளம்பரம் ஏற்பட வேண்டும் [illegible] ஜயேந்திரர் 2-10-87ல் தொடங்கி

யிருக்கும் "ஜந கல்யாண்" (மக்கள் நலம்) "ஜநஜாக்ரண்" (மக்கள் விழிப்புணர்வு) என்னும் இயக்கம்பற்றி இவரது பக்தர்களால் நடத்தப்படும் பத்திரிகைகளின் விமர்சனங்களைப் பார்த்தாலே அதன் தன்மை தெளிவாகும்.

இவரைப் புகழ்பாடிவந்த பத்திரிகைகளின் விமர்சனத்தின் படியே இந்த இயக்கத்தின் நோக்கங்களும், கொள்கைகளும், திட்டங்களும் ஆட்சேபத்திற்கு உரியவையாயுள்ளன. காமகோடிபக்தர்களால் நடத்தப்படும் ஹிந்து. இந்தியன் எக்ஸ்பிரஸ் முதலான பல பத்திரிகைள் இவ்வியக்கம்பற்றி ஒன்றும் கூறுமலிருப்பதே இது நடைமுறைக்கு ஒவ்வாத இயக்கம் எனக் காட்டுகிறது. காமகோடி பக்தர்களால் நடத்தப்படும் தினமணி இவ்வியக்கத்தின் பல அம்சங்களைத் தெளிவாகவே கண்டித்துள்ளது; 'விகடன்' பத்திரிகை "எப்படி செயலாற்றப் போகிறார்" என்னும் தலையங்கத்தில் இது செயலாற்ற முடியாத இயக்கம் என்பதைச் சொல்லாமல் சொல்லுகிறது. கல்கி பத்திரிகை 6-9-87 தலையங்கத்தில் மடாதிபதிகள் அரசியலில் ஈடுபடக்கூடாது என்று இவரது இயக்கத்தை கண்டித்தது.அதற்குப் பரிஹாரமாக 4-10-87 இதழில் "ஒரு இரவு நேர கிசுகிசுப்பு" என்னும் காமரஸப் புதுக்கவிதையை அடுத்து, "தேசியநோக்குடன் ஓர் ஆன்மீக இயக்கம்" என்னும் தலைப்பில் முன்னுக்குப்பின் முரணான குழப்பப் பேச்சுக்கள் நிறைந்த இவரது பேட்டியை வெளியிட்டுள்ளது. "நூறு விவேகானந்தர்களுக்குமேலே நான் போய் விட்டேன்" என்றும், "தண்ட விஷயத்தைப்பற்றிப் பேசுவதையே மிகவும் தண்டமாகத்தான் நான் நினைக்கிறேன்" என்றும் இவர் கூறியிருப்பதைக் 'கல்கி' வெளியிட்டிருப்பது பரிஹாஸத்திற்கே இவரை இலக்காக்குகிறது. நிற்க. இவரது இயக்கம் பற்றி "தினமணி" "விகடன்" விமர்சனங்களின் பகுதிகளை வெளியிட்டு, இத்தலையங்கத்தை நிறைவுபடுத்துகிறோம்.

## "தினமணி" விமர்சனம் (பகுதிகள்)

ஹிந்து சமுதாயத்தினரிடையே இறையுணர்வையும் ஒற்றுமையையும் மேலும் வளர்க்க இத்திட்டம் உதவும் என்றாலும் இதிலுள்ள சில அம்சங்கள் சர்ச்சைக்குரியனவாகவும் அரசியல் நோக்கம் கொண்டுள்ளனவாகவும் அமைந்து மக்களிடையே

ஓரளவு வியப்பையும் திகைப்பையும் ஏற்படுத்தியுள்ளன. நாம் இங்கு குறிப்பிடும் அம்சங்களாவன:- பசுவைத் தேசிய விலங்காக அறிவிக்கவேண்டும்; இந்தியாவை ஹிந்துஸ்தான் என்று அழைக்கவேண்டும்; சம்ஸ்கிருதத்தை தேசிய மொழியாக்க வேண்டும்; 'சத்யமேவ ஜயதே' என்ற வாசகத்துடன் 'தர்மோ ரக்ஷதி ரக்ஷிதஹ' என்ற வாக்யமும் அரசு இலச்சினையில் இடம் பெறவேண்டும்; அனைவருக்கும் பொதுவான சிவில் (குடும்ப) சட்டங்கள் இயற்றப்படவேண்டும் என்பனவாகும்.

இவற்றில் முதல் நான்கும் வெறும் அடையாள அளவில் ஏற்படும் மாற்றங்களேயாகும்; இவற்றால் மக்களுக்கு நடைமுறையில் யாதொரு பயனுமில்லை. கடைசியாகக் குறிப்பிட்ட அம்சம் ஆழ்ந்த அரசியல் பின்னணியைக் கொண்டது என்று அரசியல் பிரக்ஞையுள்ளவர்களுக்குத் தெரியும். இந்த அம்சங்களை உற்று நோக்கினால் விசுவ ஹிந்து பரிஷத், ஹிந்து முன்னணி போன்ற தீவிர மதவாத இயக்கங்களின் கொள்கையின் தாக்கம் இத்திட்டம் மீது ஏற்பட்டுள்ளது தெளிவாகத் தெரிகிறது.

பசுவதையைத் தடை செய்யக்கோரும் நாட்டில் பசுக்கள் பட்டினியால் சாகின்றன என்பதுதான் கசப்பான உண்மை. மக்கள் தொகையைக் கட்டுப்படுத்துவது போன்று கால்நடைகளின் தொகையையும் கட்டுப்படுத்தி, அவற்றின் பராமரிப்புக்குத் தேவையான தீவனம், மருத்துவவசதி, கோசாலைகள் முதலியவற்றை ஏற்படுத்தப் பொருளியல் அடிப்படையில் திட்டங்கள் தீட்டவேண்டும். பசுவைத் தேசிய விலங்காக அறிவித்துவிட்டால் மட்டும் கால்நடைகளின் பராமரிப்பு மேம்பாடு அடைந்துவிடும் என்று சொல்வதற்கில்லை.

ஹிந்துஸ்தான் என்ற பெயர் முஸ்லிம் படையெடுப்பிற்குப் பிறகுதான் வழக்கில் வந்தது, இந்தியா என்ற பெயர் ஐரோப்பியர் வந்தபிறகு உண்டானது. நம்நாட்டின் பழம்பெரும் பெயர் பாரதம். இப்பெயர் நமது அரசியல் சட்டத்தில் ஏற்கனவே இடம்பெற்று உள்ளது. இந்நிலையில் "ஹிந்துக்களின் நாடு" என்ற பொருள்படும் 'ஹிந்துஸ்தான்' என்று நாட்டின் பெயரை மாற்றினால் ஏனைய மதத்தினருக்கு இந்த நாடு சொந்தமில்லை என்று சுட்டிக்காட்டுவது போலாகிவிடும். இது சுவாமிகளின் கருத்தாக இருக்கமுடியாது என்று நம்புகிறோம்.

சம்ஸ்க்ருதம் இந்நாட்டின் சிறப்புமிக்க தேசிய மொழிகளில் ஒன்று என்பதில் ஐயமில்லை. நமது பண்பாட்டின் அடித்தளமாகவும் ஆணி வேராகவும் இம்மொழி என்றும் நிலைத்திருக்கும்.

சட்டபூர்வமாகத் தேசிய மொழி என்று அறிவிப்பதால் இம்மொழிக்கு மேலும் கௌரவம் கூடிவிடப்போவதில்லை, சம்ஸ்க்ருதத்தை அரசு மொழியாக்க இத்திட்டம் முதற்படி என்று கருத இடமளிப்பது நல்லதன்று. பேச்சு வழக்கற்றுப்போன சம்ஸ்க்ருத மொழியை அரசுமொழியாக்குவது நடைமுறையில் சாத்தியமுமன்று; விரும்பத்தக்கதுமன்று: ஜனநாயக அரசு மக்கள் அன்றாடம் பேசும் மொழிகளில்தான் அமைந்திருக்கவேண்டும்.

'சத்யமேவ ஜயதே' (வாய்மையே வெல்லும்) என்று அரசு இலச்சினையில் பொறித்த பிறகு அரசாண்மையிலும், அரசியலிலும் பொது வாழ்விலும் வாய்மை அதிகரித்துவிட்டதாக எவரும் கருதுவதற்கில்லை. இந்நிலையில் 'தர்மோ ரக்ஷதி ரக்ஷிதஹ' (தர்மத்தைக் காத்தால் அது நம்மைக் காக்கும்) போன்ற நீதி வாக்கியங்களை நம் மனத்தில் இருத்திக்கொள்வதோடு நின்று, அரசின் இலச்சினையிலும் பொய்யாக ஆணைகளிலும் பொறிப்பதன் மூலம் அவற்றின் புனிதத்தன்மையைக் கெடுக்காமல் இருப்பது நலம்.

எல்லோருக்கும் ஒரே சட்டம் என்ற திட்டம் மேலார்ந்த வாரியாகப் பார்க்கும்பொழுது கவர்ச்சிகரமாகத் தோன்றலாம், ஆயினும் இம்முறை நம்நாட்டிற்குப் பொருந்தாது. நம் நாடு மிகப் பரந்தது, இதில் வாழும் 80 கோடி மக்கள் பற்பல மொழிகளையும் பற்பல மதங்களையும் பற்பல பழக்கவழக்கங்களையும் உடையவர். ஹிந்து சமுதாயதிற்குள்ளேயும் எண்ணற்ற சம்பிரதாயங்களும் வழிபாட்டு முறைகளும் இருக்கக்காண்கிறோம். அப்படியிருந்தும் நாம் அனைவரும் இன்று ஒரே சமுதாயமாகப் பிணைந்திருக்கிறோமென்றால் வேற்றுமைகளில் ஒற்றுமையைக்காணும் இந்தியப் பண்பாடுதான் அதற்குக்காரணமாகும். அரசியல், தொழில்கள், ஊராட்சி, குற்றவியல் போன்ற பொதுவான துறைகளில் ஏற்கனவே ஒரேமாதிரியான சட்டங்கள் இருக்கின்றன. ஆனால் விவாகம், விவாகரத்து, ஜீவனாம்சம், சுவீகாரம், சொத்துரிமை போன்ற குடும்பச் (CIVIL) சட்டங்கள் அவரவர் மதநம்பிக்கைகளின் அடிப்படையில் தனித்தனியாக அமைவதில் தவறேதும் இருப்பதாக எமக்குத் தெரியவில்லை.

ஆதிசங்கரரின் பரம்பரையைச் சார்ந்த ஆச்சார்யர்கள் மத விஷயங்களில் மட்டும் கவனத்தைச் செலுத்தி அரசியலுக்கு அப்பாற்பட்டு நின்று இறைத் தொண்டும், மக்கள் தொண்டும் புரிவதே சாலச் சிறந்தது என்ற எம் கருத்தைப் பணிவுடன் தெரிவிக்கிறோம்.

## "விகடன்" விமர்சனம்

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் புதிய இயக்கம்பற்றிய அறிக்கை வந்துவிட்டது. மிகுந்த பரபரப்புடன் எதிர்பார்க்கப்பட்ட அறிக்கை இது.

அவரது அறிக்கையில், 'பாரதநாட்டுக்கு ஹிந்துஸ்தான் என்று பெயரிட வேண்டும். தேசியப் பிராணியாகப் பசு அறிவிக்கப்பட வேண்டும்' என்ற கோரிக்கைகளுடன், 'மாற்று மதத்தினருக்கு வெளிநாடுகளிலிருந்து பண உதவி வருகிறது. அதை ஏழைகளுக்குப் பயன்படுத்தாமல் மதமாற்றத்திற்கே பயன்படுத்தித் தங்கள் எண்ணிக்கையைப் பெருக்க முயல்கின்றனர்' என்ற குற்றச் சாட்டும் இடம் பெறுகிறது.

எடுத்த எடுப்பில், 'இது ஓர் இந்து மத இயக்கம்' போல் தோன்றும் அறிக்கையில், மதச்சார்பற்ற பரந்த கண்ணோட்டமும் தெரிகிறது. 'நாம் ஒவ்வொருவரும் மனிதனை மனிதனாக நேசிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும் . . அதன் பின்னர்தான் மதம், குலம், ஜாதி என்பவை . . . மத உரிமை போன்ற வழக்குகளை நீதிமன்றத் தீர்ப்புக்கு விட்டுவிட வேண்டும் . . . அதில் அரசியல் தலையிடக் கூடாது' என்றும் குறிப்பிடுகிறார்.

மதச்சார்பில்லாமல் இந்தியர் எல்லோரையும் இந்த இயக்கத்தின்கீழ் கொண்டுவர நினைக்கும் அவரது எண்ணத்தை எப்படிச் செயலாற்றப்போகிறார் என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

### முடிவுரை

காமகோடி பக்தப் பத்திரிகைகளின் இவ்விமர்சனங்களிலிருந்தே விளம்பரமடாதிபதிகளின் விளம்பரமாயை உடையத் தொடங்கிவிட்டது என விளங்குகிறது, ஜயேந்திரர் தம் இயக்கத்தைச் செயலாற்றினால் இது மேலும் உடையும். சைவத்திற்கும், வைஷ்ணவத்திற்கும் குரங்கு மத்யஸ்தம் செய்யும் செயலைச் செய்து கொண்டு சந்திரசேகரர் புகழடைந்ததுபோலே, இந்து முஸ்லிம் கிறிஸ்தவர்களிடையே குரங்கு மத்தியஸ்தம் செய்து புகழடையப் பார்க்கிறார் ஜயேந்திரர். சைவ வைஷ்ணவர்களிற் பலர் ஏமாளிகளாகவும், மதவுணர்ச்சியற்ற சுயநலக்காரர்களாகவுமிருந்தபடியால் பெரும்பான்மை ஆதரவையே குறியாகக்கொண்ட அரசியல்வாதிகள் பொதுஜனப் பத்திரிகைகளின் ஆதரவுடன் சந்திரசேகரரால் ஓரளவுக்கு வெற்றி காணமுடிந்தது. கிறிஸ்தவ முஸ்லிம்களில் ஏமாளிகளும், மதவுணர்ச்சியில்லாதவர்களும் மிகுதியாக இல்லாமையால், அரசியல்வாதிகள் பொதுஜனப் பத்திரிகைகளின் ஆதரவையிழந்து ஜயேந்திரரின் இயக்கம் படுதோல்வியடைந்து அவருக்கு அபகீர்த்தியையே அளிக்கும். இதை விரைவிலேயே உலகம் காணும்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சனர் பதில் — ஒன்பதாவது சதகம்

5 T திருவேங்கடம், ஸ்ரீரங்கம் (1, 9 கேள்விகள்)

*1. பகவான் நிர்ஹேதுகமாக அருள் செய்கிறுன் என்றுல் பாரபட்சமுடையவன் என்று தேறுகிறது. உண்மையில் நற்குணக் கடலும் தீயகுணம் லவலேசமுமற்றவனுன பகவானிடம் இவ்விழிகுணத்தை ஏறிடுதல் குற்றமன்றோ. அடியவனின் நோக்கால் பகவத்க்ருபை நிர்ஹேதுகம் என்றுலும் பகவான் சில ஸுக்ருதமடியாகவே அருள் செய்வதால் உண்மையில் பகவத்க்ருபை ஸஹேதுகமென்பது வெட்டவெளிச்சமாகவில்லையா?*

கேள்வி கேட்பவர் தென்னுசார்ய ஸம்ப்ரதாயத்தையே புரிந்து கொள்ளவில்லை என்று அவரது கேள்விகளிலிருந்து விளங்குகிறது. பகவானுக்கு நிர்ஹேதுக க்ருபையும் ஸஹேதுக க்ருபையுமுண்டு என்பது தென்னுசார்ய ஸம்ப்ரதாயம். பகவானுக்கு நிர்ஹேதுக க்ருபையே கிடையாது என்று கேள்வி கேட்பவர் கூறுகிறுர். இதுவே முக்கியமான விவாத விஷயம். நம்மாழ்வார்,

"கண்டாயே நெஞ்சே கருமங்கள் வாய்க்கின்று ஓர்
எண் தானுமின்றியே வந்தியலுமாறு.
உண்டானை உலகேழுமோர் மூவடி கொண்டானை
கண்டு கொண்டனை நீயுமே." [திருவாய் 1-10-5]

என்னும் பாசுரத்தில் உலகனைத்தையும் வயிற்றில்வைத்து ரக்ஷித்தது அளந்தது என்னும் செயல்களை எம்பெருமான் எவருடைய அபேக்ஷையுமில்லாமல் நிர்ஹேதுகமாகவே செய்தான் என்று தெளிவாகக் காட்டியிருக்கிறுர். சேதனர்களை உய்விக்க வேண்டும் என்னும் திருவுள்ளத்தாலே எம்பெருமான் செய்யும் ஆலேத் தொழில்களெல்லாம் நிர்ஹேதுக க்ருபையாலே செய்பவையே! என்று ஸகல சாஸ்த்ரங்களிலிருந்தும், ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களிலிருந்தும் தெளிவாக விளங்குகிறது. இதுபோலவே மோக்ஷத்தில் அவனுடைய ஆநந்தத்தையே உத்தேச்யமாகக் கொள்கிற ப்ரபந்நர்களுக்கும் எம்பெருமான் நிர்ஹேதுகமாகவே மோக்ஷத்தை அருளுகிறுன் என்பது தென்னுசார்யர்கள் திருவுள்ளம். மோக்ஷத்தில் தமது

ஆனந்தத்தையும் உத்தேச்யமாகக் கொள்ளும் பக்தர்களுக்கும் ப்ரபந்நர்களுக்கும் பக்தி, ஸ்வகத ஸ்வீகாரம் ஆகியவற்றை உபாயமாக எண்ணிக் குறைவற அனுஷ்டித்த பின்பே ஸஹேதுக க்ருபையைச் செய்து அவர்களுடைய (ஸ்வார்த்தமான) ஆனந்தத்துக்கும் உறுப்பான மோக்ஷத்தை அருளுகிறான் என்றும் அவ்வாசார்யர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். மோக்ஷத்தில் தங்களுடைய ஆனந்தத்தைக் குறிக்கோளாகக் கொள்ளாமல் எம்பெருமானுடைய முகமலர்த்தியையே உத்தேச்யமாகக்கொண்டு இவ்வுலகிலும் அவனுக்கேயான வாழ்க்கையை நடத்தும் ப்ரபந்நர்கள் விஷயத்தில் எம்பெருமான் உபாயாநுஷ்டானமாகிற நிர்பந்தத்தை எதிர்பார்க்க மாட்டான் என்பது எளிதில் விளங்கும். பகவான் நிர்ஹேதுகமாக மோக்ஷத்தை அருளுகிறான் எனக் கூறும்போது பகவான் எந்த உபாயத்தையும் எதிர்பாராமல் தகுதியையே பார்த்து அருள் செய்கிறான் என்பதே தென்னாசார்யர்களின் திருவுள்ளம். 'எம்பெருமானுக்காகவே இருக்கை' என்னும் அதிகாரம் (தகுதி) உள்ளவர்களுக்கு எம்பெருமான் நிர்ஹேதுகமாக மோக்ஷத்தை அருள் செய்கிறான். மோக்ஷத்தில் தங்கள் ஆனந்தத்தையும் குறிக்கோளாகக் கொள்பவர்களுக்கு உபாயாநுஷ்டானமாகிற ஹேதுவைப் பார்த்துப் பலனளிக்கிறான் என்றே அவ்வாசார்யர்கள் திருவுள்ளம் பற்றுகையால் அவனுக்கு வைஷம்யம் (பக்ஷபாதம்) என்னும் தீயகுணம் லவலேசமும் விளையாது. பகவான் ஸுக்ருதமடியாக இவ்வுலகப் பலன்களையே கொடுக்கிறான். மோக்ஷத்தை முற்கூறியபடி ஸாதநாநுஷ்டானமடியாகவோ, நிர்ஹேதுகமாகவோதான் அளிக்கிறான் என்பது நடுநிலையாளர்களுக்கு நன்கு விளங்கும்.

*2. இனி தேவரீர் பகவத்க்ருபை நிர்ஹேதுகம் என்று நிரூபிக்க எடுத்துக்கொள்ளும் உதாரணத்தைக் காண்போம். ஒரு தகப்பன் தன் பிள்ளைகளிடம் ப்ரத்யுபகாரம் ஒன்றும் எதிர்பாராமல் வளர்ப்பதுபோல் பகவானும் அவனது பிள்ளைகளான நம்மிடமிருந்தும் ஒன்றையும் எதிர்பார்ப்பதில்லை என்பது உமது வாதம். இங்கு தகப்பன் தனக்குப் பிள்ளைகளாகப் பிறந்த ஒரு காரணத்தால்தான் பிள்ளைகளுக்கு அருள் செய்கிறான் என்பதை நோக்குங்கால் பகவானும் நம்மிடம்*

ஶரணாகதியை எதிர்பார்க்கிறான் என்பது தேறுதா? ஸர்வ தர்மங்களையும்விட்டு என்னைப் பற்று என்பதன்றோ பகவானின் ஆஜ்ஞை.

நிர்ஹேதுகம் என்பதில் ஹேது சப்தம் உபாயத்தையே குறிக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளாமையால் இக்கேள்வி எழுந்தது. வேலைக்காரனுக்கு வேலை செய்தால் கூலி கொடுப்பது போலே உபாயாந்தரநிஷ்டர்களுக்கு உபாயாநுஷ்டானமாகிற ஹேதுவைப் பார்த்துப் பலனளிக்கையாலே அது ஸஹேதுகக்ருபை எனப்படுகிறது. இப்படி ஒரு வேலை செய்வதை எதிர்பாராமல் ஒரு குடும்பத் தலைவன் உறவையே பார்த்து ரக்ஷிப்பது போலே எம்பெருமானும் தனக்கேயான வாழ்க்கையை நடத்தும் ப்ரபந்நன் விஷயத்தில் அவனுடைய இத்தகுதியையே பார்த்து உபாயாநுஷ்டானத்தை எதிர் பாராமல் மோக்ஷத்தை அருளுகிறான். இது நிர்ஹேதுக க்ருபை எனப்படுகிறது. ''த்வமேவோபாயபூ,தோ மே ப,வேதி ப்ரார்த்த,நாமதி: ஶரணாக,தி:'' [நீயே உபாயமாவாயாக என்று பிரார்த்திக்கும் அறிவே சரணாகதி] என்று சரணாகதி லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறதாகையாலே 'நீயே உபாயமாவாயாக' என்னும் அறிவாயிருக்கும் சரணாகதி தன்னை உபாயமாகக் கொள்ளாது என்பது வெளிப்படை. ஆகையால் சரணாகதி அதிகாரமெனப்படும் தகுதியாகிறதேயொழிய உபாயமாகிறதில்லை. ஆகையால் பகவான் நம்மிடம் சரணாகதியாகிற தகுதியை எதிர்பார்த்தாலும் அது நிர்ஹேதுக க்ருபையேயாகும்.

3. இனி ''கைம்முதலிலேன்'' ''என்நன்றி செய்தேனோ'' ''அதுவுமவனதின்னருளே'' ''வெறிதே அருள் செய்வர்'' என்றெல்லாம் ஆழ்வார்கள் கூறுவதன் அர்த்தமென்னவென்று தேவரீர் வினவக்கூடும். இந்த அருள் வார்த்தைகள் ஆழ்வார்களின் நைச்சியாநுஸந்தானத்தை உணர்த்தியபடியே யன்றி வேறொன்றில்லை. அன்றியும் 'கைம்முதலிலேன்' என்றும், 'என்நன்றி செய்தேனோ' என்றும் கூறுவதிலிருந்தே அவனருள் பெறுவது உய்த்துணரவேண்டியது என்பதை தேவரீர் அறிய வல்லீரல்லீரோ?

ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளை இப்படி கௌணமாகக் கொள்வதைக் காட்டிலும் அவனுக்கேயான வாழ்க்

ஸையை நடத்தும் ப்ரபந்நர்கள் விஷயத்தில் அவன் ஓர் உபாயத்தையும் எதிர்பாராமல் நிர்ஹேதுகமாகவே அருள் செய்கிறான் என்று முக்கியமாகக்கொள்வதே சிறந்ததன்றோ. 'கைம்முதலிலேன்' என்று கூறும்போது உபாஸகர்களுக்கு உள்ளதுபோலவே கர்ம ஜ்ஞான பக்திகளாகிற உபாயங்கள் என்னிடமில்லை என்றே பொருளாகையால் அவன் அருள் பெறுகைக்கு ஒரு கைம்முதல் வேண்டுமென்று தேறாது.

*4. தேவரீர் உச்சிமேல் வைத்துகக்கும் வார்த்தாமாலையில் **123**-ம் வார்த்தையைக் காண்மின்: "எம்பெருமான் உபாயமாமிடத்தில் விஷயஸாபேக்ஷனுமாய், வ்யாபாரநிரபேக்ஷனுமாய் இருக்கும்." இதற்கு தேவரீரது அரும்பதம் "விஷயஸாபேக்ஷன்-சரணமடையும் புருஷனை எதிர்பார்ப்பவன்; வ்யாபாரநிரபேக்ஷன் - அவனுடைய முயற்சியை எதிர்பாராதவன்" என்பது. இதிலிருந்து எம்பெருமான் குணமற்றவன் என்று கூறும் ச்ருதிவாக்யங்களுக்கு 'அவன் ஹேயகுணமற்றவன்' என்று பொருள்கொள்வதுபோல் 'வ்யாபார நிரபேக்ஷன்' என்பதற்கும் தன்னைச் சரணமடைந்தபின் வேறொரு வ்யாபாரத்தை எதிர்பாராதவன் என்று பொருள் கொள்ள வேண்டுமென்று தேறாதா? அதாவது பகவான் அடியவனுக்கு அருள் செய்ய சரணாகதியை அபேக்ஷிக்கிறான் என்பதை மறுக்க முடியுமா?*

கேள்விகேட்பவர் வார்த்தாமாலைக்குக் கூறும் பொருள் அதிலுள்ள பற்பல வார்த்தைகளுக்கு முரண்படுகிறது. வார்த்தாமாலைக்கு அர்த்த நிஷ்கர்ஷம் செய்ய தேசிக ஸம்ப்ரதாயஸ்தரான இவருக்குத் தகுதியில்லை. 'பற்பல தேசிக ஸ்ரீஸூக்திகள் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தையே அரண் செய்கின்றன' என்று சமீபத்தில் பரமபதித்த காஞ்சீ மஹாவித்வான் அண்ணங்கராசார்ய ஸ்வாமி பல நூல்களில் எழுதியிருப்பதற்குப் பதில் கூறிவிட்டல்லவோ இவர் வார்த்தாமாலைக்கு வரவேண்டும். ஒரு ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர் மற்றொரு ஸம்ப்ரதாய க்ரந்தத்திலிருந்து ஒவ்வொரு வாக்யத்தை எடுத்துக்கொண்டு மனம்போனபடி பொருள் உரைக்கத் தொடங்கினால் விவாதம் நீண்டுகொண்டே போகும். ஒரு நிர்ணயமும் ஏற்படாது என்னும் வெளிப்படையான உண்மையை நோக்கியே நாம் மூன்று

நிபந்தனைகளை விதித்திருக்கிறோம். அதன்படி வார்த்தாமாலைக்கு இவர் கூறும் அவப்பொருளை உபேக்ஷித்துவிட்டு மற்ற விஷயங் களுக்குப் பதில் கூறுவோம். ஒருதார்மிகன் "ஏழைகளாய், வேறுகதியற்றவர்களாய் என்னையடைந்தவர்களுக்குச் சோறு போடுவேன்" என்று ஸங்கல்பித்து அப்படியே செய்துவரு கிறான். "அந்த ஏழையின் ஏழ்மைதான் சோற்றுக்கு உபா யம், வேறுகதியற்றமைதான் சோற்றுக்கு உபாயம்; தார்மிகனை அடைந்ததுதான் உபாயம்" என்று எவராவது சொல்லுவார் களா? இவையெல்லாம் அவனுக்குத் தகுதியாகவன்றோ இருக்கின்றன. தார்மிகனேயன்றோ நிரபேக்ஷாபாயமாகிறான். இவர் எடுக்கும் வார்த்தாமாலையிலும் 'விடுகை உபாயமோ, பற்றுகை உபாயமோ' என்னும் கேள்விக்கு "விடுகையும் உபாயமன்று, பற்றுகையும் உபாயமன்று, விடுவித்துப் பற்று விக்கிறவனே உபாயம்" (119ம் வார்த்தை) என்றல்லவோ பதில் உரைக்கப்பட்டிருக்கிறது. சரணாகதியை அபேக்ஷிக் கிறான் என்பதை யார் மறுத்தார்கள்? அது தகுதியா? உபாயமா? என்றல்லவோ விவாதம், வேலை செய்து கூலி வாங்குமிடத்தில் கூலி பெற்றவன் 'வேலையே என்னை ரக்ஷித் தது' என்று கூறலாம். ஏழையாயிருப்பவன் ப்ரபுவால் ரக்ஷிக் கப்படுமிடத்தில் 'எனது ஏழ்மை என்னை ரக்ஷித்தது' என்று கூறுவது பொருந்தாது. "ப்ரபுவே என்னிடம் எந்தக் கைம் முதலையும் எதிர்பாராமல் என்னை ரக்ஷித்தான்" என்று கூறு வதே பொருந்தும்.

*5. ஸ்ரீராமாயணத்தில் போர் ஆரம்பமாவதற்கு முன் ராமன் ராவணன் இப்போது சரணடைந்தாலும் அவனைக் காப்பேன் என்று கூறித் தூது அனுப்புகிறான். உண்மையில் அவன் நிர்ஹேதுகமாக அருள் செய்வதாயிருந்தால் தூதுமேல் தூதாகப் பலரை அனுப்ப வேண்டிய அவஶ்யம் என்னையோ? ராவணன் சரணடைவதை எதிர்பார்த்தன்றோ தூது அனுப் பினான். இங்கு தேவரீர் 'பகவானே வலியச்சென்று ராவணனை அருளப்பார்க்கையாலே அவனுடைய நிர்ஹேதுக க்ருபை வெளியாகிறது' என்று கூறக்கூடும். "உண்மையில் பகவான் நிர்ஹேதுகமாக அருள் செய்வதாயிருந்தால் ராவணன் சரணடைவதை எதிர்பாராமலேயே தூதனுப்பாமலேயே*

*ஸங்கல்பமாத்ரத்தாலேயே அருள் செய்திருப்பனே'' என்று கேட்டால் வாய்திறக்க உண்டோவழி?*

சரணாகதி தகுதியா? உபாயமா? என்பது கேள்வி. ''நீயே உபாயமாவாயாக'' என்னும் அறிவாயிருக்கும் அது உபாயம் என்று வாய்திறக்க வழியில்லை. இதையே ஸகல சாஸ்த்ரஸார ஜ்ஞான அருளாளப்பெருமாள் எம்பெருமானார்,

> ''உள்ளபடி உணரில் ஒன்று நமக்குண்டென்று
> விள்ளவிரகிலதாய் விட்டதே—கொள்ளக்
> குறையேதுமில்லார்க்குக் கூறுவதென் சொல்லீர்,
> இறையேதுமில்லாதயாம்'' [ப்ரமேய ஸாரம் 6]

என்று அழுத்தமாக அருளிச் செய்தார். 'தகுதியாகிற சரணாகதியை ராவணனிடம் எதிர்பார்த்தான்' என்று கூறுவதில் உமக்கு லாபமோ எமக்கு நஷ்டமோ என்ன இருக்கிறது?

*6 பகவான் பக்தர்களை அருளவும், அவர்களது எதிரிகளை அழிக்கவும் அவதாரம் செய்வதாக வசனங்கள் காண்கிறோம். ஸாதுபரித்ராணார்த்தம் பகவதவதாரம் என்றபோதே ஒருவனுக்கு அருள் செய்ய ''ஸாதுவாயிருத்தல்'' என்கிற ஒரு தகுதியை பகவான் எதிர்பார்க்கிறான் என்பது கையிலங்கு நெல்லிக் கனியல்லவா!*

தகுதியை எதிர்பார்க்கிறான் என்பதை யார் இல்லை செய்தார்கள்? தம் ஆனந்தத்தை விரும்புகிறவர்கள் விஷயத்தில் உபாயத்தையே எதிர்பார்க்கிறான் என்பதையும் நாங்கள் இல்லை செய்யவில்லையே. அவனுடைய ஆனந்தத்தையே குறிக்கோளாகக் கொண்டவர்கள் விஷயத்தில் நிர்ஹேதுகமாகவே அருள் செய்கின்றான் என்னும் சாஸ்த்ர ஸாரார்த்தத்தை நீங்களல்லவோ இல்லை செய்கிறீர்கள்?

*7. திரௌபதி சரணாகதிபற்றிச் சில வருடங்களுக்கு முன் நடந்த சர்ச்சையில் தேவரீர் கூறியிருக்கும் மணியான வார்த்தையொன்றும் இங்கு குறிக்கொள்ளத்தகும். திரௌபதியின் சரணாகதி அவளது நாமஸங்கீர்த்தனத்தால் தடைபட்டதாகவும் பின்னர் பாண்டவர்கள் மீண்டும் தன்னைச் சரணடையும்படிச்*

*செய்தே அவர்கள் வெற்றிக்குக் கண்ணன் உதவி செய்த தாகவும் தேவரீர் எழுதியுள்ளீர். பகவான் நிர்ஹேதுகமாக அருள் செய்வது உண்மையானால் பாண்டவர்கள் மீண்டும் தன்னைச் சரணடையும் படியான உபாயத்தை உரைப்பது ஏனோ?*

பஞ்சபாண்டவர்களுடைய சரணாகதி அவர்களது ஆனந்தத்துக்குறுப்பான பலத்தின் பொருட்டுச் செய்யப்பட்ட சரணாகதியாகும். அத்தகைய இடங்களில் 'நிர்ஹேதுகமாக அருளினான்' என்று எவரும் சொல்லுவதில்லை. இது ஸ்வகதஸ்வீகார நிஷ்டையேயாகும். மோக்ஷத்திற்காக உபாய புத்தியோடு செய்யப்படும் சரணாகதியும் ஸ்வகத ஸ்வீகாரமேயாகும். தம் ஆனந்தத்தைக் குறிக்கோளாகக் கொள்ளாமல் எம்பெருமானுடைய ஆனந்தத்துக்காகவே மோக்ஷத்தைப்பெற விரும்பும் பரகதஸ்வீகார நிஷ்டர்கள் விஷயத்திலேயே எம்பெருமான் நிர்ஹேதுகமாகப் பரார்த்த கைங்கர்ய ரூபமோக்ஷத்தை அருள்கின்றான் என்று கூறுகின்றோம். ஆகையால் திரௌபதி பாண்டவர்கள் சரணாகதியை இங்கு எடுப்பது பயனற்றது.

*8. ஆழ்வார்களுடைய பதிகங்களிலும் மற்றுமுள்ள ஸ்தோத்ரங்களிலும் பலச்ருதியைக் காண்கிறோம். உண்மையில் பகவான் நிர்ஹேதுகமாக அருள்செய்வதானால், இப்பாசுரங்களைப் பாராயணம் செய்ததும் பலச்ருதிப்படி நமக்குப் பலன் உண்டாகும் என்பது நிச்சயமில்லை என்று தேறும். இது உண்மையானால் பலச்ருதிகள் எல்லாம் தங்களுடைய ப்ரபந்தங்களுக்கு மகிமை ஏற்பட ஆழ்வார்களும் மற்றையோரும் செய்துகொண்ட வழி என்று தேறுமே. ஆழ்வாராசார்யர்களிடம் அத்யந்த பக்தியுள்ள தேவரீர் இதை ஒப்புக் கொள்கிறீரா?*

ஆழ்வார்கள் பலச்ருதி சொல்லியிருப்பதைப் பார்த்து அந்தப் பலனை விரும்பி அந்தப் பாசுரங்களைப் பாராயணம் செய்பவர்களும் உண்டு, "அவர்களும் பாசுரங்களைப் பாராயணம் செய்து படிப்படியாக உயர்ந்து உஜ்ஜீவிக்கட்டும்" என்னும் திருவுள்ளத்தாலே ஆழ்வார்கள் பலச்ருதியைக் கூறியிருக்கிறார்கள். இப்படிக் கொள்ளாவிடில் இவ்வுலகப் பலன்களையும் அவர்கள் கூறியிருப்பது பொருந்தாமல் போய்

விடும். எம்பெருமானையே உபாயமாகவும் உபேயமாகவும் கொண்ட பரமைகாந்திகள் "ஆழ்வார்கள் பாசுரங்களைப் பாராயணம் செய்து அவ்வப்பலன்களைப் பெறவேண்டும்" என்று ஒருபோதும் நினையார்கள்.

9. இறுதியாக பகவானே அருளியிருக்கும் வசனமொன்றையும் அதற்கு தேவரீரே அருளியிருக்கும் அர்த்தங்களையும் நோக்குமிப்போது, "நாஹம் புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா | கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந ||" [நான் புருஷகாரத்தைக் கொண்டும் கடாக்ஷிப்பதில்லை. வேறெந்த ஹேதுவையிட்டும் கடாக்ஷிப்பதில்லை. என்றைக்கோ ஒருநாள் யாரோவொரு அதிகாரியை என் இச்சையினாலேயே நான் கடாக்ஷிப்பவன்] பகவான் நிர்ஹேதுகமாக அருள் செய்வதாயிருந்தால் இங்கு யாரோ ஒருவன் என்று பொருள் கூறியிருக்கலாம். ஆனால் "யாரோ ஒரு அதிகாரியை" என்றதின் மர்மம் என்ன? பகவான் அருள்பெற ஏதோவொரு அதிகாரம் வேண்டும் என்பதன்றோ. "அதிகாரமுண்டேல் அரங்கரிரங்காரோ அதிகாரமில்லாதார்க்கன்றோ நீ இரங்க வேண்டுவது" என்று ஸ்ரீசைலேசதயாபாத்ரர் கூறியதும் இதை வலியுறுத்தாதா? "அதிகாரமில்லார்க்கு அவ்வதிகாரத்தை உண்டாக்கியருள வேண்டும்" என்றன்றோ மாமுனிகள் வேண்டுவது, "க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யர்" என்று புகழப்படும் எம்பெருமானாரும் ஆசையுடையோர்க்கு மட்டுமேயன்றோ பகவமந்த்ரங்களை உபதேசித்தார். பகவந்மந்த்ரங்களின் விசேஷார்த்தங்களைக் கூறவே பரமதயாளுக்களான ஆசார்யர்களும் 'ஆசை' என்கிற ஒரு ஹேதுவை எதிர்பார்க்கும்போது "பகவானை அடைய ஒரு ஹேதுவையும் அவன் எதிர்பார்ப்பதில்லை" என்று கூறுதல் மனச்சாட்சியோடு பொருந்திய சொல்லாகுமா?

அதிகாரத்துக்கும் உபாயத்துக்கும் வேற்றுமை தெரியாமல் இக்கேள்விகளை தொடுத்திருப்பது மிகவும் வருந்தத்தக்கது. பரமைகாந்திகளுக்கு அதிகாரத்தைப் பார்த்து அருளிறான் என்பது தென்னாசார்ய ஸம்ப்ரதாயம். பரமைகாந்திகளுக்கும் அவர்களிடமுள்ள ஸாத்யோபாயத்தைப்

பார்த்தே டலன் அளிக்கிறான் என்பது தேசிக ஸம்ப்ரதாயம். தம் ஸம்ப்ரதாயத்தையும், எமது ஸம்ப்ரதாயத்தையும் புரிந்து கொள்ளாமலே கேள்விகளைத் தொடுத்திருப்பதும், வீரவாதங்கள் புரிந்திருப்பதும் நகைப்பிற்குரியன. இந்த நமது விளக்கங்களைக் கண்டபின்பாவது உண்மையை உணர்ந்து சாந்தியுடன் இருப்பார் என்று நம்புகிறோம்.

கோவிந்தராஜன், சென்னை 94 (10, 11)

*10 '83 செப்டம்பர் ஞானபூமியில்' 'காசிமுதல் ராமேஸ்வரம் வரையிலுள்ள அனைத்து ஆலயங்களிலும் மூலவரைத்தொட்டு பூஜை செய்யும் அதிகாரம் ஸ்ரீ சிருங்கேரி சாரதாபீடாதிபதிகளுக்கு உண்டு' என்று எழுதப்பட்டிருக்கிறது. இது உண்மையா?*

இது பெரும் பொய். பாஞ்சராத்ரம், வைகாநஸம் என்னும் வைஷ்ணவாகமங்களின்படி பிரதிஷ்டை செய்விக்கப்பட்ட விஷ்ணு கோயில்களில் சிருங்கேரி பீடாதிபதிகளைப் போன்ற பஸ்மதாரிகள் கர்ப்பக்ருஹத்தில் நுழைந்தால் உடனே ஸம்ப்ரோக்ஷணம் பண்ணவேண்டும். சில சிவாலயங்களில் தங்களுடைய செல்வாக்கால் இந்த உரிமையை இவர்கள் பெற்றிருக்கக்கூடும். மிகைப்படுத்தி இப்படி எழுதப்பட்டிருக்கிறது.

*11. '83 செப்டம்பர் ஞானபூமியில் பழனிச்சாமி என்னும் காஷாயம் கட்டாத துறவி ஒருவர் 'வேதத்தை யார் வேண்டுமானாலும் கற்கலாம்' என்றும் 'க்ஷத்திரியரான ராமரும் யாதவரான கிருஷ்ணரும் வேதாப்யாஸம் செய்யவில்லையா' என்றும் கூறி, 'தாம் எல்லாச்சாதிக்காரர்களுக்கும் கிரமப்படி பூணூல் போட்டு வேதம் சொல்லிக் கொடுப்பதாகவும், வேதத்தைத் தமிழில் மொழிபெயர்த்துச் சொல்லிக் கொடுக்கலாம்' என்றும் கூறியிருக்கிறார். சாஸ்திரங்கள் இதை அனுமதிக்குமா?*

எல்லா சாஸ்திரங்களும் முதல் மூன்று வர்ணத்தவர்க்கே வேதத்தைப் பயில அனுமதி அளித்துள்ளன. பழனிச்சாமியால் வேதம் சொல்லிக் கொடுக்கப்பட்டவர்களை மணியருக்குப் பரமகுருவான காமகோடி பீடாதிபதி தமது மடத்தில் வேத பண்டிதராக நியமிப்பாரா? வேதத்தைப் பல

சாஸ்த்ரங்கள் பயின்ற அந்தணர்களிடமிருந்து அதைப் பயிலும் பரம்பரையில் வந்த அந்தணர்கள் கற்றால்தான் ஸ்வரம் சரியாகவரும். ஸ்வரம் தப்பி வேதத்தை உச்சரித்தால் அதன் பயனாக அனர்த்தமே விளையும் என்பதை வ்ருத்ராஸுரன் கதையில் வேதமே சொல்லுகிறது. ராமனும் கிருஷ்ணனும் க்ஷத்திரியர்களாகையாலே வேதம் பயின்றதில் விரோத மில்லை.. இக்காலத்தில் க்ஷத்திரிய வைசியர்கள் வேதாத்யய னத்தை விட்டுவிட்டபடியாலும், வேதாப்யாஸத்தைக்கொண்டு பணம் பண்ண முடியாதாகையாலும் அந்தணரில் ஒரு சிலரே வேதாத்யயனம் செய்கிறார்கள். இந்த உண்மையை மறைத்துப் பொய்யை வெளியிடுவது வேதத்துக்குச் செய்யும் பெரிய துரோகமாகும்.

S. முரளி, அந்தநல்லூர்

*12. 83' செப்டம்பர் ஞானபூமியில் ''மஹாவிஷ்ணுதான் ஸர்வோத்தமர் என மாத்வர்களைப் போலவே வைஷ்ணவர்களும் ஒப்புக்கொள்கின்றனர். ஆனால் மஹாவிஷ்ணுவானவர் நிமித்த காரணமாக மட்டுமின்றி உபாதான காரணமாயும் இருக் கின்றார் என்று வைஷ்ணவர்கள் கருதுகின்றனர். பகவான் மாறுதலற்றவன், நாசமற்றவன், தோஷமற்றவன் (நிர்விகாரோ அக்ஷர: ஶுத்₃த₄:) என்னும் சுருதிக்கு முரண்பாடாக உள்ளது இக்கருத்து. எனவே மாத்வர்கள் இதனை ஏற்பதில்லை. நிமித்த காரணமாக மட்டுமே இருப்பவன் இறைவன் என்பது அவர் களின் கோட்பாடு'' என்று ராமராவ் என்னும் மாத்வர் கூறி யிருப்பது உண்மையா?*

ஸ்ரீராமராவ் அவர்கள் நமது நண்பர். அவர் தமது நூல் களிலும், உபந்யாஸங்களிலும் அத்வைத மதத்தில் பற்பல முரண்பாடுகள் உள்ளன என்று பல இடங்களில் காட்டியிருக் கிறார். நேர்மையோடு அவற்றையும் எடுத்துக் காட்டாமல் விசிஷ்டாத்வைதிகளுக்கும் த்வைதிகளுக்கும் உள்ள ஒரு வேறுபாட்டை மாத்திரம் எடுத்துக் காட்டுகிறது ஞானபூமி. '' ஒரு மண் கட்டியை அறிந்தால் மண்ணாலான அனைத்தையும் அறிந்ததாவது போலவும், ஒரு பொன் கட்டியை அறிந்தால் பொன்னாலானது அனைத்தையும் அறிந்ததாவது போலவும்

ப்ரஹ்மம் ஒன்றை அறிந்தால் அதன் காரியமான எல்லாப் பொருள்களையும் அறிந்ததாகிறது'' என்றும், "ப்ரஹ்மமே தன்னைப் பல சேதனுசேதனப் பொருள்களாகப் படைத்துக் கொண்டது' என்றும் பல இடங்களில் வேதவாக்யங்கள் ப்ரஹ்மமே உலகுக்கு உபாதான காரணமாகின்றது என்று மிகத் தெளிவாகக் கூறியிருக்கின்றன. சேதனுசேதனப் பொருள்கள் அனைத்தும் ப்ரஹ்மத்துக்குச் சரீரம் என்றும், ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களின்போது அந்த சரீராம்சமே ஸ்தூல ஸூக்ஷ்மநிலைகளை அடைகிறது என்றும், ப்ரஹ்மஸ்வரூபம் விகாரம் அற்றதாகவே இருக்கிறது என்றும் வேதவாக்யங்கள் தெளிவாக முழங்குகின்றன. த்வைதிகளோ இந்த அபேத சுருதிகளுக்கும், சரீராத்மபாவ சுருதிகளுக்கும் அமுக்யமாகப் பொருள் கொள்கிருர்கள். அத்வைதிகள் கணக்கற்ற பேத சுருதிகளை அமுக்யமாகக் கொள்கிருர்கள். எல்லா வேதவாக்யங்களையும் முரண்படாமல் ஸமந்வயப்படுத்திப் பொருள் கொள்வது விசிஷ்டாத்வைத மதமொன்றேயாகும்.

5. வேங்கடம், சமயபுரம்

*13. '83 செப்டம்பர் ஞானபூமியில் கேள்விபதில் பகுதியில் "தோற்றமில்லாத ப்ரணவ வடிவமாக இருக்கையால் பிள்ளையார் முதலும் முடிவும் இல்லாத முழுமுதற் கடவுள்'' என்று கிருபானந்தவாரியார் எழுதியிருக்கிருர். இது உண்மையா?*

பிள்ளையார் யானை முகத்தை உடையவராகவும், அதன் துதிக்கை வளைந்திருப்பதாலும் பிள்ளையாரை ப்ரணவ வடிவமாகக் கற்பிக்கிருர்கள் சைவர்கள். இந்தக் கற்பனையைக் கொண்டு அவரை முழுமுதற்கடவுளாக்கப் பார்த்தால் வளைந்த துதிக்கையுடைய எல்லா யானைகளும் முழுமுதற் கடவுளாக வேண்டிவரும். இந்த பதிலில் முதற்பகுதியில் 'சிவகுமாரர்களில் மூத்தவர் பிள்ளையார்'' என்று எழுதுகிருர் வாரியார். சிவகுமாரராக இருப்பவர் எப்படி முழுமுதற்கடவுளாக இருக்க முடியும் என்பதைக்கூட அறியமுடியவில்லை. ஐயோ பாவம்! வேதசாஸ்திரங்களில் முழுமுதற் கடவுளாக முழங்கப்படும் திருமாலுக்குப் போட்டியாக சிவனைக்கூற முற்பட்டது இப்படி வ்யவஸ்தையில்லாமல் எல்லாக் கடவுளரையும் முழுமுதற்

கடவுளராக ஒப்புக்கொள்ள வேண்டியநிலையில் கொண்டுபோய் இவர்களைத் தள்ளிவிட்டது. தம்மைப் பெற்ற தகப்பன் யார் என்னும் விஷயத்திலேயே இப்படி மக்களைக் குழப்பிவிட்ட இவர்களை அந்த ஆதிபரம்பொருள்தான் மன்னிக்கவேண்டும்!

*S.* சடகோபன், உடுமலை. *K.* சம்பக், ஸ்ரீரங்கம்.

*14. 83 செப்டம்பர் ஞானபூமியில் கடைசிக் கட்டுரையில் திருக்குடந்தை ஆராவமுதன் சன்னிதி நிர்வாகி திரு.* S. *ஸ்ரீநிவாஸன் "திருப்பதி வெங்கடாஜலபதியை மங்களாசாஸனம் செய்தவர்கள் பதினொருபேர். அடுத்ததாகத் திருவரங்கப் பெருமானை மங்களாசாஸனம் செய்தவர்கள் ஒன்பதுபேர்' என்று கூறியதாக எழுதப்பட்டிருக்கிறது இது உண்மையா?*

மதுரகவியாழ்வார் தவிர மற்ற ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் திருவரங்கப் பெருமானைப்பாடியிருக்கிறார்கள் என்பதும், மதுரகவிகளும் தொண்டரடிப்பொடிகளும் தவிர மற்ற பதின்மரே திருவேங்கடவனைப் பாடியிருக்கிறார்கள் என்பதும் வைணவவுலகம் முழுதும் அறிந்தது. இதைக் கூட அறியாமல் மனம்போனபடி எழுதுவதும் அதைச் சரியா தவறா என்றே அறிந்து கொள்ளாமல் பிரசுரிப்பதும் தவறாகும். வேங்கடாசலபதியை வெங்கடாஜலபதி என்று எழுதுவதிலிருந்து இவர்களுக்கு வடமொழி ஞானமேயில்லை என்பது நன்கு புலனாகிறது. இப்படி இவர்கள் எழுதுவதைவிட எழுதாமலிருப்பதுமேல்.

*N T.* கண்ணன்பட்டாசார்யர், ஒப்பிலியப்பன்கோவில்.

*15 மிகச்சிறந்த முறையில் வெளிவரும் கீதாசார்யன் பத்திரிகையில் புரட்டாசி இதழில் 'ஸ்ரீராமாநுஜர் வரலாறு' எழுதிவரும் நாடுபுகழ் எழுத்தாளரான "சாண்டில்யன்" அவர்கள் "இப்படி (ஸ்ரீரங்கம்) கோவிலில் பலதுறையையும் சீர்திருத்தி வைகாநஸ முறைப்படி இருந்த கோயிலைப் பாஞ்சராத்ர முறைக்கு மாற்றினார். பாஞ்சராத்ரம் தான் சாஸ்திர ஸம்மதம் என்று முடிவு கட்டினார்" என்று எழுதியுள்ளார். "வைகாநஸம் சாஸ்திர ஸம்மதமன்று" என்று தெளிவாகத் தொனிக்கும்படி எழுதியிருப்பது வைகாநஸர் அனைவரது மனத்தையும் புண்படுத்து*

கிறது. நடுநிலை நின்று பதில் எழுதும் ஸுதர்சனர் பதிலில் இதை விமர்சிக்கச் செய்யவேண்டுகிறேன்.

"பாஞ்சராத்ரம், வைகாநஸம் என்னும் இரண்டு சாஸ்திரங்களும் பரம வைதிக சாஸ்திரங்களேயாகும். வைகாநஸர்களைப்பற்றி வேதத்திலேயே புகழப்பட்டிருக்கிறது. மகாபாரதம் முதலான மற்றும் பல சாஸ்திரங்களிலும் வைகாநஸத்தின் பெருமை பேசப்பட்டிருக்கிறது. நமது பரமாசார்யரான ஆளவந்தாரும் தமது 'ஆகமப்ராமாண்யத்தில் "பாஞ்சராத்ரத்தைப்போலே வைகாநஸமும் பாகவத மதம்" என்று ஏற்றுக்கொண்டிருக்கிறார், ஸ்ரீவேதாந்த தேசிகனும் தமது 'சரணாகதி தீபிகை'யில் "எம்பெருமானைத் தத்தம் முறையில் ஆராதிக்கும் பாஞ்சராத்ரிகளும், வைகாநஸர்களும் பாக்கியசாலிகள்" என்று பாராட்டியிருக்கிறார். ஆகையால், 'பாஞ்சராத்ரமும் வைகாநஸமும் ஸ்ரீவைஷ்ணவ மதத்துக்கு இரண்டு கண் போன்றவை' என்றே கொள்ள வேண்டும்.

"கோயிலொழுகு" முதலான பல நூல்களில் ஸ்ரீரங்கம் முதலில் பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளில் ஒன்றான பாரமேச்வர ஸம்ஹிதையின்படியே ஆராதிக்கப்பட்டு வந்தது' என்றும், 'இடைக்காலத்தில் ஏதோ காரணத்தால் வைகாநஸர்கள் அர்ச்சகர்களாக நியமிக்கப்பட்டு விட்டார்கள்' என்றும் "எம்பெருமானார் முதலிலிருந்தபடியே ஸ்ரீரங்கத்தில் ஆராதனம் இருக்க வேண்டும் என்று திருவுள்ளம்பற்றி, பாஞ்சராத்ர அர்ச்சகர்களை நியமித்தார்" என்றும் கூறப்பட்டிருக்கிறது. ஸ்ரீரங்கம் ஒரிடம் தவிர வேறெங்கும் உடையவர் பாஞ்சராத்ர ஆராதனத்தைப் புகுத்தவில்லை, திருமலை முதலான பல திவ்யதேசங்கள் அநாதிகாலம் தொடங்கி இன்றளவும் வைகாநஸ ஆகமமுறைப்படியே ஆராதிக்கப்பட்டு வருகின்றன என்பதையும், அவ்வாலயங்களிலும் எம்பெருமானார் சிறந்த ஈடுபாடு கொண்டிருந்தார் என்பதையும், அவற்றை மாற்ற எந்த முயற்சியும் செய்யவில்லை என்பதையும் எவரும் மறுக்க இயலாது. ஆகையால், பாஞ்சராத்ரம் போலே வைகாநஸமும் சாஸ்திர ஸம்மதமே என்பதில் ஐயமில்லை.

A. பரத் I.A.S., முனிராபாத்

*16 'இயம்ஸீதா' என்னும் சுலோகத்தின் தனிசுலோக வ்யாக்யானத்தில் 'நன்று நன்று நறையூரர்க்கே' என்னும் பெரிய திருமொழிப் பாசுரத்தைப் பெரியவாச்சான் பிள்ளை மேற்கோள் காட்டியிருக்கிறார். இது எப்படிப் பொருந்தும்? நறையூர்நம்பி கிருஷ்ணன் அல்லவா?*

ஸீதாப்பிராட்டியும் ராமபிரானும் கல்யாணத் திருக்கோலத்தில் இருப்பதைப் பார்த்து அந்தச் சேர்த்தியழகுக்குக் கண்ணேச்சில் (த்ருஷ்டி தோஷம்) வராமலிருப்பதற்காக ஜனக மகாராஜர் மங்களாசாஸனம் செய்கின்றார் 'பத்ரம்தே' என்று. இதுபோலவே வஞ்சுளவல்லி நாச்சியாரும் திருநறையூர் நம்பியும் திருமணக்கோலத்தில் எழுந்தருளியிருப்பதைக் கண்டு, 'அந்தச் சேர்த்தியழகுக்குக் கண்ணேச்சில் வராதிருக்க வேண்டும்' என்று பெரிய திருமொழியில் "நன்று நன்று நறையூரர்க்கே" என்று மங்களாசாஸனம் செய்யப்பட்டுள்ளது. இந்த ஒற்றுமை கருதியே இதை மேற்கோள்காட்டினார் பெரியவாச்சான் பிள்ளை. நறையூர்நம்பி ராமனா? கிருஷ்ணனா? என்னும் ஆராய்ச்சி இங்கு அவசியமில்லாதது.

S. முரளி, அந்தணல்லூர்

*17. 'இந்து மதம் அழைக்கிறது' என்னும் பெயருடன் ஞானபூமிக்கு சகோதரன் போன்று ஒரு பத்திரிகை வெளிவருகிறது. அதிலும் பல அபத்தமான கட்டுரைகள் அச்சிடப்படுகின்றன. அவற்றையும் விமர்சிக்க வேண்டுகிறேன்.*

அத்வைதிகள் 'உலகம் பொய்; பரம்பொருளும் ஜீவனும் ஒன்று'' என்னும் தங்கள் மதத்தின் அடிப்படைக் கொள்கை நடைமுறைக்கு ஒவ்வாததாகையாலே, அதை அடியோடு மறந்துவிட்டு, அரசியல்வாதிகளோடு சேர்ந்துகொண்டு "எல்லா மதங்களும் ஒன்றே, எல்லா தெய்வங்களும் ஒன்றே" என்பதையே தங்களுடைய மதத்தின் அடிப்படைக்கொள்கையாக ஆக்கிக்கொண்டு 'இதுவே இந்து மதம்' என்று கூறி வருகிறார்கள். மதத்தில் ஆழமான அறிவும் நம்பிக்கையும் இல்லாத பொதுமக்களில் பெரும்பான்மையானவர்களுக்கு இந்த

கோஷம் மிகவும் பிடித்திருக்கிறது. இதைப் பயன்படுத்திக் கொண்டு அத்வைதிகளில் பலர் இந்த கோஷத்தையேபோடும் கட்டுரைகளைச் சுமந்து வரும் பத்திரிகைகளைப் புதிது புதிதாகத் தொடங்குகிறார்கள். இவை பாமர மக்களிடம் அதிகமாக விலையாகின்றபடியால் இப்பத்திரிகைகளை நடத்துகிறவர்களுக்கு ஏராளமான லாபமும் கிடைக்கிறது. சைவத்தையோ வைஷ்ணவத்தையோ அல்லது உண்மையான அத்வைதத்தையோ பிரசாரம் செய்யும் பத்திரிகைகள் சில ஆயிரம் பிரதிகளே விற்பனை ஆகிறபடியால் அவை நஷ்டத்திலேயே நடக்கின்றன. இந்தப் போலி அத்வைதத்தைப் பிரசாரம் செய்யும் பத்திரிகைகள் பல்லாயிரக்கணக்கில் விற்பனையாகி அவற்றை நடத்துகிறவர்களுக்கு ஏராளமான லாபத்தைச் சம்பாதித்துக் கொடுத்தபோதிலும், அவை பொதுமக்களைக் குழப்பி சைவத்தையும், வைணவத்தையும், உண்மையான அத்வைதத்தையும் அழித்து வருகின்றன. 'இந்துக்கள்' என்று இன்று அழைக்கப்படுகிறவர்கள் காலக்கிரமத்தில் மத உணர்ச்சி அற்றவர்களாகி மத உறுதியுள்ள இஸ்லாத்தையோ, கிறிஸ்துவத்தையோ தழுவுவதற்கு வழி வகுக்கின்றன இப்பத்திரிகைகள். இவற்றில் அதிகமான பிரசாரமுள்ள பொதுஜனப் பத்திரிகைகளையும் விமர்சிக்கும் ஸுதர்சனர் பதில்களிலேயே 'இந்துமதம் அழைக்கின்றது' போன்ற பத்திரிகைகளில் வரும் விஷயங்களும் விமர்சிக்கப்பட்டதாகின்றன. ஆகவே அவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்துத் தனியே விமர்சிக்கவேண்டிய அவசியமில்லை.

*தி. ர. ஸ்ரீதரன், கடலூர்*

*18 31—12—83 அன்று இரவு 10 மணியளவில் சென்னை தொலைக்காட்சி நிலையம் வழங்கிய நாடகமொன்றில் வைணவர்களாகிய நாம் நெற்றியில் அணியும் திருமண் காப்பு மிகவும் பகிரங்கமாகக் கேவலப்படுத்தப்பட்டுள்ளது. ஏமாற்று வேலைகளில் 'நாமம் போட்டுவிட்டான்' என்று வைணவ விரோதிகளால் உபயோகிக்கப்பட்டு வந்த இத்தொடர் மிகவும் கேவலமாகப் படமாக்கப்பட்டிருக்கிறது. ஓடுகின்ற நாடகத்தை நிறுத்தி கதாபாத்திரத்தின் முகத்தில் நிலையாக்கி, பெரிய தென்கலைத் திருமண் உருவத்தைக் காட்டியுள்ளார்கள். வைகுண்ட ஏகாதசியன்று மிக கௌரவமாகக் காட்டப்பட்ட*

*ஒன்று அதற்குள் கேலிக்கிடமாக்கப்பட்டிருக்கின்றது. தங்கள் கண்டனத்தைத் தெரிவிக்கப் பிரார்த்திக்கிறேன்.*

புது வருஷப் பிறப்பன்று டி. வி. ஒளி பரப்பிய "டிஸ்கோ டிஸ்கோ" நாட்டிய நிகழ்ச்சியில் கண்ணன்-ருக்மிணி-பாமாவையும், நாரதரையும், துலாபாரப் பெருமையையும் நகைச்சுவை என்ற பெயரால் அவமானப்படுத்தி 'டிஸ்கோ' நாட்டியம் ஆட வைத்திருப்பதைப் பல வாசகர்கள் 'ஹிந்து' பத்திரிகையில் உடனே கண்டித்தார்கள். "இதயம்" பொங்கல் இதழில் (15—1—84) இதைக் கண்டித்து 'பொறுத்ததுபோதும் பொங்கி எழுங்கள்" என்னும் தலைப்பில் மணியன் இதை ஆவேசமாகக் கண்டித்திருக்கிறார் ஆனால் மேலே கேள்வியில் குறிப்பிட்ட நிகழ்ச்சியைப்பற்றிப் பொது ஜனப் பத்திரிகைகள் எதுவும் கண்டிக்கவில்லை. அவர்கள் கருத்துப்படி எம்மதமும் சம்மதம் என்ற போலி அத்வைதக் கொள்கையைக் கொண்டிருப்பவர்களே இந்துக்கள். 'விஷ்ணுவே பரம்பொருள்' எனும் உண்மைக் கொள்கையைக் கொண்டிருக்கும் வைணவர்கள் அவர்களைப் பொறுத்தவரை இந்துக்களல்லர். இவர்களுடைய பத்திரிகைகளிலேயே கூட 'நாமம் போட்டுவிட்டான்' 'நூற்றுப்பதினொன்று' '111' என்று வைணவர்கள் பக்தியுடன் நெற்றியில் அணியும் திருமண் காப்பைக் கேலி செய்கின்ற இவர்களுக்கு மற்றவர்களைத் தட்டிக் கேட்கும் உரிமை ஏது? பொதுஜனப் பத்திரிகை நடத்தும் மணியன் போன்றோர் காட்டும் வழியில்தான் டி. வி. நிலையத்தாரும் செல்கின்றனர். எனவே டி. வி. நிலையத்தாரோடு கூட இவர்களும் கண்டனத்துக்கு உரியவர்கள் ஆகிறார்கள்.

18-வது பதில் பற்றிய ஒரு குறிப்பு

22—1—84 'இதயம்' இதழில் "டிஸ்கோ டிஸ்கோ" நிகழ்ச்சிபற்றி டி. வி. நிலைய இயக்குநர் வருத்தம் தெரிவித்திருப்பதாகச் செய்தி வந்துள்ளது.

*S. லக்ஷ்மீநாராயணன், திருச்சி-17*

*19. 'இதயம்' பொங்கல் இதழில் சுப்புடுவின் சங்கீத விமர்னத்தில் "சைவமும் வைணவமும்" என்னும் தலைப்பில் இசைக்கு*

உகந்தது அத்வைத அநுஷ்டானம்தான். விசிஷ்டாத்வைதம் அநுவசியம்; பிளவை ஏற்படுத்தும் சேஷகோபாலன் புரிந்து கொள்வார் என்று நினைக்கிறேன்'' என்று எழுதியிருக்கிறார். இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.

''இசைக்கு உகந்தது'' என்று சுப்புடு எழுதியிருப்பதற்குப் ''பணம் சம்பாதிக்கும் இசைக்கு உகந்தது'' என்று பொருள் கொள்ளவேண்டும். எம்பெருமானைப் பயன் கருதாது உகப்பிக்கும் இசைக்கு உகந்தது விசிஷ்டாத்வைதமே என்பதற்கு ஆழ்வார்களின் இசைப்பாட்டுக்கள் குன்றிலிட்ட விளக்காகச் சான்று பகர்கின்றன. பயன் கருதாத இசைப்பாடல்கள் அத்வைதத்துக்கு உகந்தவையல்ல என்பது அனைவரும் அறிந்தது. வைணவரான திரு. சேஷகோபாலன் அவருடைய இஷ்டதெய்வமும், பரம்பொருளுமான திருமாலைப் பாடுவதில் சுப்புடுவுக்குள்ள வயிற்றெரிச்சலையே இது காட்டுகிறது. ''எல்லா தெய்வமும் ஒன்று; எம்மதமும் சம்மதம்'' என்னும் போலி அத்வைதக்கொள்கை வெறியர்களின் இந்தப் போக்கே இந்துக்களிடையே பிளவை ஏற்படுத்துகிறது.

R. நந்தகுமார். குளித்தலை (20—22 கேள்விகள்)

*20. ''மதம்'' என்ற சொல்லிற்குப் பொருள் என்ன?*

மனிதனுக்கு நல்வாழ்க்கைக்கு வழி காட்டும் கொள்கைத் தொகுப்பு ''மதம்'' எனப்படுகிறது. மதங்கள் ''ஆஸ்திக மதங்கள் நாஸ்திகமதங்கள்'' என்று இருவகைப்படும். பரம்பொருளை ஒப்புக்கொள்கின்றவை ஆஸ்திகமதங்கள். அதை ஒப்புக்கொள்ளாத புத்தமதம் போன்றவை நாஸ்திகமதங்கள்,

*21, வைஷ்ணவ மதத்தில் எத்தனை வகை உண்டு?*

வைஷ்ணவாத்வைதம், வைஷ்ணவவிசிஷ்டாத்வைதம், வைஷ்ணவத்வைதம் என்று வைஷ்ணவமதத்தில் மூன்று பெரும்பிரிவுகள். உண்டு. வைஷ்ணவ விசிஷ்டாத்வைதத்தில் தென்கலை, வடகலை என்ற உட்பிரிவுகளும், வைஷ்ணவத்வைதத்தில் சைதன்யம் முதலான உட்பிரிவுகளும் உண்டு. அத்வைதிகள் பெரும்பாலும் சைவர்களாக மாறிவிட்டதால் வைஷ்ணவாத்வைதம் மிகவும் குறைந்து காணப்படுகிறது.

ஆதிசங்கரருடைய பாஷ்யங்களைப் பார்க்கும்போது அவர் ஒரு வைஷ்ணவாத்வைதியோ என்று விளங்குகிறது. "சங்கரரும் வைஷ்ணவமும்" என்னும் நூலில் இதை நாம் நிலைநாட்டியிருக்கிறோம்.

*22. வைஷ்ணவத்தில் சிவ வழிபாடு உண்டா?*

வைஷ்ணவ மதத்தில் எல்லாப் பிரிவினரும் "சிவன்" என்னும் சக்திமிக்க தெய்வத்தை ஒப்புக்கொள்கிறார்கள். மோக்ஷம் தவிர்த்த மற்ற பலன்களை அந்த தெய்வத்தால் கொடுக்கமுடியும் என்றும் கொள்கிறார்கள், மோக்ஷத்தைப் பரம்பொருளான நாராயணன் ஒருவனே கொடுக்கமுடியும் என்றும், பரம்பொருளல்லாத சிவன் முதலான தெய்வங்கள் மோக்ஷத்தைத்தாமே கொடுக்க முடியாது என்றும் எல்லா வைஷ்ணவர்களும் கொள்கிறார்கள். இந்த வைஷ்ணவப் பிரிவினரிடையே பல கொள்கை வேற்றுமைகள் உண்டு. விஷ்ணுவை உலகத் தோற்றத்திற்குள் அடங்கிய ஸகுண ப்ரஹ்மமாகவே கொள்கிறவர்கள் வைஷ்ணவாத்வைதிகள். "ஆட்சிபுரியும் விஷ்ணு ஆளப்படும் உலகம் எனும் இரண்டும் தோற்றமல்ல, மெய்ப் பொருள்களே" என்கிறார்கள் மற்ற வைஷ்ணவர்கள். "உலகனைத்தும் விஷ்ணுவுக்குச் சரீரம்" என்பது விசிஷ்டாத்வைத வைஷ்ணவமதத்தின் தனிக் கொள்கை. "விஷ்ணுவும் உலகமும் அடியோடு வேறுபட்டவை. உலகம் விஷ்ணுவுக்குச் சரீரமல்ல" என்பது வைஷ்ணவ த்வைத மதம். மறந்தும் புறந்தொழாமையை வைஷ்ணவ லக்ஷணமாகக் கொள்பவர்கள் ஆழ்வார்களை அடியொற்றிய விசிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவர்கள். "மற்ற பலன்களுக்காக மற்ற தெய்வங்களைத் தொழலாம்" என்று கூறுகிறார்கள் வைஷ்ணவ மதத்தின் மற்ற பிரிவினர்கள். "விஷ்ணுவை மோக்ஷமளிக்கும் பரம்பொருளாகக் கொண்டவர்கள்" என்பது எல்லாப் பிரிவினர்க்கும் பொதுவான வைஷ்ணவ லக்ஷணம். ஆகையால் விசிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவ மதத்தினர்க்குச் சிவ வழிபாடு கிடையாது. மற்ற வைஷ்ணவர் "தாழ்ந்த பலன்களுக்காகச் சிவ வழிபாடு செய்யலாம்" என்று கொள்ளுகிறார்கள்.

K. A. தேவராஜன், நெல்லை, S. ராமாநுஜன், சென்னை-20, R. சுந்தரம், சென்னை-86 மற்றும் பலர்.

*23. பிப்ரவரி '84 ஞானபூமியில் ஸ்ரீபெரும்பூதூர் யதிராஜ ஜீயர் ஸ்வாமியுடன் நடந்த பேட்டி விவரங்கள் வெளியாகியுள்ளன. "1. ஹரே கிருஷ்ண இயக்கம் வேதவிருத்தம். 2. ஒருருவம் ஒரு நாமம் ஒன்றுமில்லானை என்று கடவுளை நாம் (வைணவர்கள்) வருணிக்கிறோம். 3. கடவுளை மனித வடிவத்தில் வைத்துப் பார்ப்பது நம்முடைய எண்ண வடிவம் மட்டுமே. 4. ஐயப்பன்-ஹரிஹர புத்திரன். இருகடவுளின் தத்துவங்களும் இவ்வவதாரத்தில் இணைந்து நிற்கிறது. 5. சங்கரனையும் நாராயணனையும் ஒரே உருவத்தில் வைத்து வழிபடுவது நமது சம்பிரதாயம். விரோதம் நடைமுறையில் ஏற்பட்டது. 6. வர்ணாசிரம தர்மம் தொழிலடிப்படையில் ஏற்பட்டதுதான்" முதலான பல ஏற்கமுடியாத அபிப்ராயங்களை ஜீயர் ஸ்வாமி கூறியதாகப் பேட்டியில் உள்ளது. ஸுதர்சனர் பதிலில் இவற்றை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

"ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தை அறிந்த எவரும் ஏற்க முடியாத இவ்விஷயங்களை வெளியிட்டது உண்மையா?" என்று கேட்டு ஜீயர் ஸ்வாமிக்குக் கடிதம் எழுதினோம். ஜீயர் ஸ்வாமி தமது பேட்டியில் தாம் சொன்ன விஷயங்களில் பெரும்பாலானவை விடப்பட்டுள்ளன என்றும், அச்சிடப் பட்டவையும் திரித்து எழுதப்பட்டவையே என்றும் ஸ்ரீமுகம் சாதித்துள்ளார் இந்த மோசடியை மணியன் கௌடியமட யதிமகராஜ், ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமி, வானமாமலை ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீகாஞ்சி மஹா வித்வான் ஸ்வாமி ஆகிய ஸ்ரீவைஷ்ணவ மதத் தலைவர்கள் பேட்டியிலும் செய்திருக்கிறார் என்பது ஏற்கனவே நம்மால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இதற்கு மணியன் இதுவரையில் எந்த பதிலும் எழுதவில்லை. ஸ்ரீவைஷ்ணவ மதத்தலைவர்கள் இத்தகைய பொய்ச் செய்திகளை நிறைந்த இப்பத்திரிகைக்கு பேட்டி கொடுக்க மறுத்துவிட வேண்டும் என்று உணர்த்தி நிற்கின்றோம். வாசகர்களும் இப் பத்திரிகையை விலக்கி நிற்பது நல்லது.

K. கிருஷ்ணய்யங்கார், I. R. S. கஸ்தூரிபா கிராமம்.

*24. 29—1—84 விகடனில் திரு. பரணீதரனின் திருத்தலப் பெருமை பூமீச்வரக்ஷேத்திர மகிமையில் பூமி சிவனைப் பூசித்த தாகவும் சிவன் பூமிக்கு வரம் அளித்ததாகவும் எழுதப்பட்டிருக் கிறது. இப்படிப் பொய்க் கதைகளை எழுதிவரும் இவர்களுக்கு நல்லறிவு ஏற்படுமா?*

'இந்து மதம்' என்று பெயர் பெற்றிருக்கும் வைதிகமதத் திற்கு வேதமே மூலப்பிரமாணம். அதற்கு முரணில்லாமலிருந் தால் ஸ்ம்ருதி, இதிஹாஸம் புராணம் முதலானவை பிரமாண மாகும். இது ஆதிசங்கரர் உள்ளிட்ட எல்லா ஆசாரியர்களும் இசைந்த விஷயம். 'ஹ்ரீச்சதே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ' என்று எல்லா வேதங்களிலுமுள்ள புருஷஸூக்தம் ஸ்ரீ பூமி தேவி களைப் பரமாத்மாவின் பத்தினிகளாக ஓதிற்று. அத்தகைய பெருமையுடைய பூமிதேவி பரமாத்மாவால் படைக்கப்பட்ட ஒரு தெய்வத்தைப் பிரார்த்தித்து வரம் பெற்றாள் என்று எழுதுவது வேத விருத்தம். பெரும்பாலான தலபுராணங்கள் மிகச் சமீபகாலத்தில் கற்பிக்கப்பட்டவை என்பது அனைவரும் அறிந்தது. இதை எவ்வளவோ முறை எடுத்துச் சொல்லியும் விடாமல் இத்தகைய பொய்க் கதைகளை எழுதி வரும் விகடன் போன்ற பத்திரிகைகள் இந்து மதத்தைத் தலபுராண மதமாக்கி வருகின்றன. இத்தகைய அபத்தக் கதைகளைப் பிடிவாதமாக வெளியிட்டு வரும் இவர்கள் திருந்துவார்கள் என்று தோன்ற வில்லை.

*R.* நாராயணன், கல்கரை, திருநெல்வேலி (25, 26 கேள்விகள்)

*25. வீடுகளில் "ஸுதர்சன ஹோமம்" செய்யலாமா? ஸுதர்சன மந்திரத்தையும் அதன் பொருளையும் விளக்க வேண்டுகிறேன். ஸுதர்சன சக்கரம் வைத்து வழிபடலாமா?*

வீடுகளில் பீடா பரிஹாரார்த்தமாக ஸுதர்சன ஹோமம் செய்யும் பழக்கம் சமீபகாலமாக ஏற்பட்டு வருகிறது. மந்தி ரத்தையும் அதன் பொருளையும் உபதேச மூலமாகவே பெற வேண்டும். பத்திரிகையில் வெளியிடுவது சரியல்ல. கோயி லாழ்வாரில் பெருமாளோடு சேர்த்து ஸுதர்சனயந்த்ரம்

வைத்துத் திருவாராதனம் செய்யலாம். தனியாக வைத்து வழி படுவது வழக்கமில்லை.

*26. நித்திய பூஜையில் காலை, மாலை "ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமம்" சொல்லலாமா?*

நித்தியபடி திருவாராதனத்தில் மந்த்ராஸனத்தில் அவகாச மிருந்தால் காலை மாலை ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமம் சொல்லலாம்.

*K. M.* ராமாநுஜய்யங்கார் தென்திருப்பேரை. (27—28 கேள்விகள்)

*27. வெள்ளக்கேடு வறட்கேடுகள் இல்லாமலிருப்பதற்காக ஸந்நிதியில் திருப்பாவையை முன்னடி பின்னடி சேவிக்கும் க்ரமத்தை மாற்றி முழுவதும் சேவிக்கும்படி அத்யாபக ஸ்வாமிகளைப் பிரார்த்திக்க வேண்டுகிறேன். திருப்பாவை சேவிக்கப் பதினைந்து நிமிஷத்துக்கு மேலாகாது.*

ஸ்வாமியின் பிரார்த்தனை மிகவும் நியாயமானதே. ஸகல திவ்யதேசங்களிலுமிருக்கும் அத்யாபக ஸ்வாமிகள் தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்ய இதைத் தலைக்கட்ட வேண்டும் என்று அடியேனும் பிரார்த்திக்கிறேன்.

*28. அவாவற்ற வீடு பெற்றவராய் ஸ்ரீ சடகோபர் விளங்கினாலும் 'தணிவிலர் கற்பரேல் கல்வி வாயுமே" "வென்றிதரும் பத்தும் மேவிக் கற்பார்க்கே" இன்ன பிற யாவும் அவாவன்றோ? அடியேனுடைய ஐயத்தை விளக்குமாறு வேண்டுகிறேன்.*

ஆழ்வார் தமக்காக எதையும் பிரார்த்திக்கவில்லை. திருவாய்மொழியைக் கற்பவர்களுக்குச் சில பலங்கள் கிடைக்கும் என்று அருள் புரிகிறார். ஆகையால் ஆழ்வார் அவாவற்றவர் என்னும் கொள்கைக்கு முரணில்லை.

*P. T.* விஜயராகவன், சென்னை-5.

*29. "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" பத்திரிகையிலும் "கீதாசார்யன்" பத்திரிகையிலும், ஸ்ரீமான் மதுரகவி அண்ணாவியார் தற்கால ஸ்ரீவைஷ்ணவ சமய பிரசாரங்கள் பற்றித் தெரிவித்துள்ள அபிப்ராயங்கள் பற்றியும், அதனை அடியொற்றி பல்வேறு வாசகர்கள் தெரிவித்துள்ள கருத்துக்கள் பற்றியும், வித்வான் என்ற முறையிலும், உபந்யாஸகர் என்ற*

முறையிலும், பத்திரிகையாளர் என்ற முறையிலும் தேவரீரின் கருத்துக்களைக் கூறமுடியுமா?

நம்முடைய ஸம்ப்ரதாய உபந்யாஸங்களையும், கட்டுரைகளையும், நூல்களையும் மிக்க எளிய தமிழ் நடையில் ஆக்க வேண்டும் எனும் வேண்டுகோள் தமிழ்நாடு எங்குமே உள்ளது என்பதை அடியேன் நீண்டகாலமாகவே நன்கு அறிவேன். இந்த வேண்டுகோளை நிறைவேற்றுவதற்காகவே நமது பூர்வாசார்ய வியாக்யானங்களை, கடந்த 30 வருடங்களாகவே எளிய தமிழில் ஆக்கி வெளியிடுகின்றேன். இம்முறையில் நான்கு திருவந்தாதிகள், மடல்கள், திருவெழுகூற்றிருக்கை, திருமாலை, தனிச்லோகம் முதலானவற்றின் பூர்வாசார்ய வ்யாக்யானங்களை எளிய தமிழ் நடையில் விளக்கி வெளியிட்டுள்ளேன். எந்தையார் காலத்திலேயே திருப்பல்லாண்டு வியாக்யானமும் திருப்பாவை வியாக்யானமும் எளிய தமிழில் அச்சிடப்பட்டுள்ளன. அடியேன் சந்திக்கும் அன்பர்கள் இந்தத் தமிழாக்கங்களை மிகவும் பாராட்டி வருகின்றனர். ஒரு சிலர் இன்னமும் எளிய தமிழில் எழுதவேண்டும் என்று கூறுகின்றனர் கூடிய வரையில் முயல்கின்றேன் என பதில் தந்து வருகின்றேன்.

இன்றைய வித்வான்களில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பாணி அமைந்துள்ளது. சிலருடைய பாணியில் ஸம்ஸ்க்ருத வாக்யங்களும், ப்ரமாணங்களும் அதிகமாக வழங்குகின்றன. சிலருடைய பாணியில் எளிய தமிழ் நடையில் விளக்கங்கள் வெளிவருகின்றன. இன்றைய உபந்யாஸகர்களில் தலைமை பெற்று விளங்கும் ந்யாய வேதாந்த வித்வான் வாகம்ருதவர்ஷி வேளுக்குடி ஸ்ரீ உ. வே. K. வரதாசார்ய ஸ்வாமியினுடைய பாணி போன்றவை முதல்வகையைச் சேர்ந்தவை. ஸ்ரீபாஷ்யத்தையும் உபந்யாஸ ரூபமாகச் செய்து பெரும் கூட்டத்தைக் கூட்டக் கூடியவர் அந்த ஸ்வாமி ஒருவரே. அவரது ஸ்ரீராமாயண உபந்யாஸங்களில் பகவத்விஷய மேற்கோள்களும், பகவத்விஷய உபந்யாஸங்களில் ஸ்ரீராமாயணம் பகவத்கீதை முதலியவற்றின் மேற்கோள்களும் மிகுதியாக வழங்குகின்றன. அவர் சொல்லும் பாணியில் மிகவும் ஈடுபட்டு பலர் அவரது உபந்யாஸங்களைக் கேட்டுக் களிக்கின்றனர். அவரது உபந்யாஸங்களுக்கு வரும் கூட்டம் எளியநடை உபந்யாஸகர்கட்கு

வருவதில்லை. அவரவர் தத்தம் பாணியை மாற்றிக்கொள்வது மிகவும் சிரமமானது. அதனால் கேட்பவர்களும் தங்களுடைய கேள்வி ஞானத்தை அதிகப்படுத்திக் கொண்டால் ஸ்வாமியி னுடையவை போன்ற உபந்யாஸங்களையும் நன்கு ரசிக்கலாம் என்பது எனது அபிப்ராயம். பிள்ளைலோகாசார்யருடைய கிரந் தங்களில் "பரந்தபடி" முதலானவை ஸம்ஸ்க்ருத வாக்யங்கள் நிறைந்திருக்கையாலே பொருள் உணர்வதற்கு அரிதாக இருக் கின்றது. இக்குறை தீர வேண்டும் என்றே பிள்ளைலோகாசார்யர் பேதை பாமரர்களும் அறியும்படி முமுக்ஷுப்படியை அருளிச் செய்துள்ளார் என்று மாமுனிகள் அருளியுள்ளார். அதுபோலவே நமது வித்வான்கள் அனைவரும் நம்முடைய ஸம்ப்ரதாயார்த் தங்கள் பாமரர்களையும் எட்ட வேண்டும் என்ற பரம கருணை யாலே தமது எழுத்து நடையையும் சொற்பொழிவு நடை யினையும் இயன்றவரையில் எளிமைப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று அடியேன் ப்ரார்த்தித்துக்கொள்கின்றேன். உபந்யாஸம் கேட்பவர்களும், நூல்களைக் கற்பவர்களும், தங்களுடைய கேள்வி ஞானத்தை வளர்த்துக் கொண்டு, உபாயம், உபேயம், சேஷன், சேஷி, புருஷார்த்தம் முதலான சொற்களின் பொருளை நன்கு உணர்ந்து உபந்யாஸங்களைக் கேட்பதற்கும் நூல்களைப் படிப்பதற்கும் முற்பட்டார்களானால் நம்முடைய சமயக் கொள்கைகள் பாமரமக்களும் உணரலாம்படி பரவும் என்று கருதுகிறேன்.

ந. வேங்கடபதி, கூடுவாஞ்சேரி (30—31 கேள்விகள்)

*30 நடந்த வருஷம் ருதிரோத்காரியா, ருத்ரோத்காரியா? எது சரி? பொருள் என்ன?*

'ருதிரோத்காரி' என்று பெரும்பான்மை வழக்கு. "இரத்தம் கக்குவது" என்று பொருள். தென்னாடெங்கும் இரத்தம் கக்குவதுபோல் மழையைப் பொழிந்து மிகுந்த வெள்ளக் கேட்டை விளைவித்த பொருத்தமுமிருக்கிறது. 'ருத்ரோத்காரி' என்றும் சிலர் வழங்குகிறார்கள். "பயங்கரமாகக் கக்குவது" என்று பொருள் கொள்ளவேண்டும். ருத்ரசப்தம் பயங்கரத் தைக் குறிக்கிறது. பரமபதவாஸியான மஹாவித்வான் காஞ்சீ ப்ர. அண்ணங்கராசார்ய ஸ்வாமியிடம் சென்ற வருஷம் பேசிக் கொண்டிருந்தபோது " இவ்விரண்டு பெயர்களில் எதுசரி "

என்று கேட்டேன். "சென்ற ருதிரோத்காரியின் போது இது பற்றிச் சர்ச்சை ஏற்பட்டு இரண்டு விதமாகவும் வழங்கலாம் என்று முடிவாயிற்று" என்று சாதித்தார்.

*31. ஒருவனுக்கு சாதிநிர்ணயம் தந்தையை வைத்தா? தாயை வைத்தா?*

கலியுகத்துக்கு முந்தின யுகங்களில் அநுலோம ப்ரதிலோம விவாஹங்கள் அனுமதிக்கப்பட்டிருந்தன. உயர்ந்த சாதியைச் சேர்ந்த புருஷன் தாழ்ந்த சாதியைச்சேர்ந்த பெண்ணை மணப்பது அநுலோம விவாஹம். தாழ்ந்த சாதியைச் சேர்ந்த புருஷன் உயர்ந்த சாதியைச் சேர்ந்த பெண்ணை மணப்பது பிரதிலோம விவாஹம். ஒரே சாதிக்குள் மணப்பது சிறந்ததாகவும், அநுலோமவிவாஹம் அதைவிடத் தாழ்ந்ததாகவும், பிரதிலோம விவாஹம் அதைவிடத் தாழ்ந்ததாகவும் கருதப்பட்டது. தந்தை தாய் இருவரையும் வைத்தே அநுலோமப் பிரதிலோம சாதிகளுக்குப் பெயர் வைக்கப்பட்டிருந்தன. கலிகாலத்தில் அநுலோமப் பிரதிலோம விவாஹங்கள் தடுக்கப்பட்டன. இப்போதுள்ள ஹிந்து சட்டத்தின்படி யார்வேண்டுமானாலும் யாரைவேண்டுமானாலும் மணக்கலாம். சாதித்தடையில்லை. "குலந்தாங்கு சாதிகள் நாலிலும்" என்னும் திருவாய்மொழிப் பாசுரத்தில் "குலம்" என்னும் சொல்லுக்கு அநுலோமப் பிரதிலோம சாதிகள் பொருளாகக் கூறப்பட்டிருக்கின்றன.

K. A. பார்த்தசாரதி. சென்னை-14

*32 பகீரதனால் நடத்தப்படும் 'ஓம் சக்தி' என்னும் பத்திரிகையில் 83 மே இதழில் 73-ஆம் பக்கத்தில் "கம்பராமாயணத்தின் முக்கியமானவரிகளைக்கொண்டே ஒரு இராமாயணம் பாடியவர் வைஷ்ணவ பெரியாரான பெரியவாச்சான்பிள்ளை. "பாசுரப்படி ராமாயணம்" என்று அதற்குப் பெயர். அது 167 வரிகள் கொண்டது. அதில் இராமாவதாரம் தொடங்கி பட்டாபிஷேகம் வரையில் அழகுறச் சொல்லப்பட்டிருக்கிறது" என்று எழுதப்பட்டிருக்கிறது. இதை விமர்சிக்கவும்.*

"பாசுரப்படி ராமாயணம்" என்னும் பெயரே 'அது ஆழ்வார்களின் அருளிச்செயல் பாசுரம் கொண்டே தொகுக்கப்பட்டது' என்று காட்டுகிறது. அப்படியிருக்க 'ஓம்சக்தி'

இதழில் இப்படி வெளிவந்திருப்பதிலிருந்து அதை எழுதியவரும் 'ஓம்சக்தி' ஆசிரியரும் அருளிச்செயலையும், கம்பராமாயணத்தையும் அறியாதவர்கள் என விளங்குகிறது.

T. S. ஸ்ரீநிவாஸன், விசாகப்பட்டினம். (33, 34 கேள்விகள்)

*33- ''புறம்புண்டான பற்றுகளையடைய வாஸனையோடே விடுகை'' ஸ்ரீ வைஷ்ணவாதிகாரியின் அபேக்ஷிதங்களில் ஒன்றாக இருந்தபோதிலும் அதை நடைமுறையில் கடைப்பிடிக்க முடியாமலிருக்கிறதே. அத்தகைய மனநிலையை எவ்வாறு அமைத்துக் கொள்வது?*

இது நமது முயற்சியால் அமைத்துக்கொள்ளக் கூடியதல்ல, எம்பெருமானுடைய அருளாலேயே அமைவது. எம்பெருமானிடம் பழக்கத்தை அதிகப்படுத்திக் கொண்டு அவனைப் பிரார்த்திப்பதொன்றே நாம் செய்யக்கூடியது.

*34. 'மோக்ஷநிலை' என்பது இறந்தபின் பெறும் இன்பநிலை தானா? இருக்கும் காலத்தில் அந்நிலைதனை அடைய இயலுமா?*

மோக்ஷநிலை என்பது இறந்தபின் பரமபதத்துக்குச் சென்று பெறும் இன்ப நிலையேயாகும். ஆழ்வார்களைப் போன்ற அருளாளர்கள் அர்ச்சாவதாரத்தில் ஈடுபாட்டாலே மோக்ஷநிலையில் போன்ற பேரின்பத்தை இங்கேயே பெற்று ''அச்சுவை பெறினும் வேண்டேன்'' என்று கூறியிருக்கிறார்கள். நம்மாழ்வாரிடம் ஈடுபாட்டாலே ''தேவுமற்றறியேன்'' என்றார் மதுரகவிகள். ஆயினும் அந்த ஆழ்வார்களையும் பரமபதத்துக்கு அழைத்துச் சென்றே அவரவர் விரும்பிய பகவதனுபவத்தையும் பாகவதானுபவத்தையும் அளித்திருக்கிறான் எம்பெருமான். ஆகையாலே இவ்வுலகில் பெறும் பேரின்பமும் நிலையற்றது என்று விளங்குகிறது.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*35. 29-4-84 கல்கியில் ஆனந்தி எழுதிவரும் தெய்வதரிசனக் கட்டுரையில் ''நரசிங்கனை சிவன் சரபமாய் வந்து அடக்கி விட்டான்'' என்னும் தாமஸபுராணக்கதை படத்துடன் விளக்கப்பட்டு ''இந்த சரபத்தைப் பற்றி ருக்வேதத்திலும் உள்ளது'' என்று எழுதப்பட்டிருக்கிறது. இது உண்மையா?*

இது பெரும்பொய். வேதத்தில் இந்தக் கதை இல்லை என்பது மாத்திரமல்ல. நமது நாட்டில் மிகப்பழைய நூல்களான ஸ்ரீராமாயணத்திலும் மகாபாரதத்திலும் இது கிடையாது. ஆயிரம் வருஷத்துக்கு முற்பட்ட வடமொழிக் காவியம் எதிலும் இது கிடையாது. சங்க நூல்களிலும் ஆயிரம் வருஷத்துக்கு முற்பட்ட எந்தத் தமிழ்க் காவியத்திலும் இந்தக் கதை கிடையாது. சான்றோர்கள் கையாளாத தாமஸபுராணங்களிலும், அவைகளையொட்டி எழுந்த நாயன்மார்களது நூல்களிலுமே இது காணப்படுகின்றது. இஃதொரு கதை மாத்திரமல்ல. விஷ்ணுவைத் தாழ்த்துவதனாலேயே சிவனுக்குப் பெருமை ஏற்பட்டுவிடும் என்று மனப்பால் குடித்து, நாயன்மார்கள் 'திருமாலுடைய மத்ஸ்ய கூர்ம வராஹ நரஸிம்ஹ த்ரிவிக்ரமாவதாரங்களை ஒவ்வொன்றையுமே சிவன் பங்கப்படுத்திவிட்டான்' என்று பொய்க் கதைகளை எழுதி வைத்தார்கள். காளிதாஸன் போன்ற சிவபக்த கவிகளாலும் கையாளப்படாததிலிருந்து இவை அபாண்டமான பொய்க் கதைகள் என்று நடுநிலையாளர்களுக்கு நன்கு விளங்கும். "சரப மூர்த்தியின் வழிபாடு தென்னகத்தில் பிற்காலச் சோழர்கள் காலத்தில்தான் தோன்றியது என்பது வரலாறு. மூன்றும் குலோத்துங்கன் 1210-ம் ஆண்டில் தன் ஆட்சியின் சிகரத்தில் இதை (திரிபுவன சரபக்கோவிலை)க் கட்டினான்" என்று ஆனந்தி எழுதியிருப்பதிலிருந்தே இக்கதை பிற்காலக் கற்பனை என்று விளங்குகிறது.

S. சௌம்ய நாராயணன், ஸ்ரீரங்கம்

*36. 29—4—84 விகடனில் பரணீதரனின் திருத்தலப் பெருமை கட்டுரையில் "தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள மருத்துவக்குடி என்னும் தலத்தைப்பற்றி பிரம்மாண்ட புராணம், கந்தபுராணம், மச்சபுராணம், கூர்மபுராணம், இலிங்கபுராணம், விமானபுராணம், மார்க்கண்டேய புராணம், நாரதீயபுராணம், சைவம், பாயநேயம் ஆகியவற்றில் சொல்லப்பட்டுள்ளது' என்று எழுதி, தமிழில் சில வரிகளும் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது. புராணங்களின் பாஷை வடமொழியா? தமிழா?*

புராணங்கள் வடமொழியிலேயே இயற்றப்பட்டன. ஒரு சில நூற்றாண்டுகளுக்குள் சிலர் தமிழ்ப்புராணங்கள் பாடினர்

கள். வடமொழிப் புராணங்களிலேயே ஸாத்விக புராணங்களைத் தவிர மற்ற புராணங்களைச் சான்றோர்கள் ஏற்பதில்லை. ஒவ்வொரு தலங்களுக்கும் பெருமை கூறுவதற்காகவே வடமொழிப் புராணங்கள் ஏற்பட்டதற்குப் பல நூற்றாண்டுகளுக்குப்பின் தமிழ் அறிந்த பெரும் பொய்யர்களால் எழுதி வைக்கப்பட்ட தமிழ்ப் புராணங்களுக்கு எந்த மதிப்பும் கிடையாது. அழகான வேதாந்தக் கொள்கைகளும், தத்துவஹித புருஷார்த்த விவரணங்களும் நிரம்பிய நமது வைதிக மதத்தைக் குட்டிச்சுவராக்கித் தலபுராண மதமாகச் செய்வதற்காகவே பத்திரிகைகள் அரும்பாடுபடுகின்றன. இந்தத் தலபுராணக் கதைகளை நாளுக்கு நாள் அறிவு முன்னேறிவரும் இந்த விஞ்ஞான யுகத்தில் எவராவது நம்புவார்களா என்பதைக்கூடப் பகுத்தறியமாட்டாமல் காமகோடி பெரியவரின் உத்தரவின் படி இப்பத்திரிகைகள் இத்தகைய பிரம்மாண்டப் பொய்களைப் பிடிவாதமாக வெளியிட்டு வருவது வைதிகமதங்களைக் குழி தோண்டிப் புதைப்பதையொக்கும். அடுத்த நூற்றாண்டில் கிறிஸ்தவமும், இஸ்லாமும், நாத்திகமும் வளரவே இக்கட்டுரைத் தொடர்கள் வழிகோலுகின்றன.

R. ஜகந்நாதன், தாராபுரம்

*37. 22-4-84 'ராணி'ப் பத்திரிகை 23ம் பக்கத்தில் ச. கணபதிராமன் என்பவர் ''கருப்பனே கண்ணன்; சுடலையே சிவன்'' என்ற கட்டுரையில் ''சிறு தெய்வமான கருப்பனே முதலில் வழிபடப்பட்டான். இந்தக் கருப்பனே பின்னால் 'கண்ணன்' ஆகிவிட்டான்'' என்று கூறியுள்ளார். இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

இதை எழுதியவருக்கு வடமொழி தென்மொழி நூல்களில் பழக்கமே இல்லை என்று விளங்குகிறது. வேதம் இதிஹாஸ புராணங்கள் முதலான வடமொழி நூல்களிலும், சங்கநூல்கள் முதலான தமிழ்நூல்களிலும் கார்முகில் வண்ணனான திருமாலே முழுமுதற் கடவுளாக முழங்கப்பட்டுள்ளான். கருப்பன் காட்டேரி முதலான சிறு தெய்வங்களைப்பற்றி அந்நூல்களில் ஏதுமில்லை. இக்கட்டுரை ஆசிரியர் போன்ற மொழியறிவற்றவர்கள் பிதற்றுவது விஷ்ணுத்வேஷத்தாலேயே என்பதை எளிதில் உணரலாம்.

T. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*38. 22—4—84 "தினமலர்" வாரமலரில் "விஷ்ணுவினுடைய சக்கரத்தைப் பிடுங்கி பிள்ளையார் வாயில் போட்டுக் கொண்டு விட்டார். விஷ்ணு தனது நான்கு கைகளாலும் காதுகளைப் பிடித்துக்கொண்டு குதித்தார். இதுகண்டு விநாயகர் சிரிக்கவே வாயிலிருந்து சக்கரம் கீழே விழ விஷ்ணு அதை எடுத்துக் கொண்டுபோய்விட்டார். 'தோர்பி: கரணம்' (கைகளால் காதைப் பிடித்தல்) எனபதே தோப்பிக் கரணம் என்றாகி விட்டது" என்று எழுதப்பட்டுள்ளது. இதற்கு ஏதேனும் ஆதாரமுண்டா ?*

இதற்கு எந்த ஆதாரமும் கிடையாது. ஆதாரமற்ற கதைகளை எழுதுவதில் வல்லவரான காமகோடிப் பெரியார் கற்பித்தது இக்கதை. இதை அவருடைய அபிமானிகள் திருப்பித் திருப்பி எழுதுகிறார்கள். தோற்றவன் வெற்றி பெற்றவனுக்கு முன்னால் காதைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து எழுந்திருப்பது என்னும் வழக்கமே தமிழில் 'தோற்புக்கரணம்'' என்று பெயரிடப்பெற்று "தோப்புக்கரணம்" என்று மருவியிருக்கிறது. வடமொழியறியாத பாமரமக்களாலே வழங்கப்படும் தமிழ்ச்சொல்லே இது. தமிழ் அறியாத எவரும் இச்சொல்லை வழங்குவதே இல்லை. இதிலிருந்தே இது காமகோடியின் விபரீதக்கற்பனையே என்று எளிதில் உணரலாம்.

S. முரளி, அந்தணல்லூர்.

*39. 1984 மே "ஞானபூமி"யில் "மகேஸ்வரன் கையில் மகா சுதர்சனமா?" என்னும் கட்டுரையில் "திருமால் தன் கண்ணைப்பிடுங்கிச் சிவனை அர்ச்சனை செய்து 'கண்ணன் என்ற பெயரையும் மகாசுதர்சனத்தையும் பெற்றார்' என்னும் தாமஸ புராணக்கதை எழுதப்பட்டுள்ளது. இதற்குச் சித்திரமும் தீட்டப் பட்டுள்ளது. இதை விமர்சித்து இத்தகைய கதையைப் பிரசாரம் செய்பவர்களுக்கு என்ன பயன் ஏற்படும் என்பதையும் விளக்க வேண்டுகிறேன்*

சாந்தோக்யோபநிஷத்தில் ஸூர்யமண்டலத்தின் நடுவில் இருக்கும் பரம்பொருளான நாராயணனை வர்ணிக்கும்போது "அவனுக்கு ஸூர்யனால் மலர்ந்த தாமரை போன்ற இரண்டு

கண்கள் உள" என்று உபநிஷத் ஓதிற்று. இதிலிருந்து பரம் பொருளான திருமாலுக்குத் தாமரைக் கண்கள் இயற்கையாய் அமைந்தவை என்றும், 'தாமரைக் கண்ணன்' என்பது நித்திய மான வேதாந்தத்திலேயே இடப்பெற்ற திருநாமம் என்றும் விளங்குகிறது. 'திருமாலிடமிருந்து சிவன் உண்டானுன்' என்று நாராயணோபநிஷத் முதலான பல உபநிஷத்வாக்யங்கள் பறைசாற்றுகின்றன. சங்க நூல்களும் "வேதங்கள் இப்படிக் கூறுகின்றன" என்று முழங்குகின்றன. கண்ணைப்பிடுங்கி அர்ச்சனை செய்த கதையோ, சிவன் சுதர்சனத்தைத் திருமா லுக்கு அளித்த கதையோ ச்ருதி ஸ்ம்ருதிகள், இதிஹாசங்கள், ஸாத்விக புராணங்கள், ஆதிசங்கரர் போன்ற மதாசார்யர்களின் பாஷ்யங்கள், காளிதாஸன் போன்ற சிவபக்தகவிகளின் காவ் யங்கள் முதலிய எதிலுமே காணப்படவில்லை. திருமாலுக்கு இவை அனைத்திலும் முழங்கப்படும் முதன்மையைக் கண்டு கடும் கொதிப்புற்ற சில விஷ்ணு த்வேஷிகளால் புனையப் பெற்றவையே இத்தகைய கதைகள் என்று இதிலிருந்து தெளி வாக விளங்குகிறது. "தாநஹம் த்₃விஷத: க்ரூராந் ஸம்ஸா ரேஷு நராத₄மாந் I க்ஷிபாம்யஜஸ்ரம் அஶுபா₄ந்ஆஸுரீஷ்வேவ யோநிஷு II" [கொடியவர்களும், மனிதர்களில் மிகத்தாழ்ந்தவர் களும், அமங்களமானவர்களுமான என்னுடைய த்வேஷிகளை நான் ஸம்ஸாரத்திலேயே அதிலும் அசுரப்பிறப்புகளிலேயே எப்போதும் பிறக்கச் செய்கிறேன்] என்று கீதையில் கண்ணனே இவர்களுக்குக் கிடைக்கும் பலனைக் கூறியிருக் கிறுன். பாலுணர்வுப் பத்திரிகைகளை நடத்தி ஆஸுரப்ரக்ருதி களை வளர்க்கும் பத்திரிகையாளர்கள் மதப்பத்திரிகையின் மூலமும் ஆஸுரப்ரக்ருதிகளையே வளர்க்கிருர்கள் என்று விளங்குகிறது.

V. ஸ்ரீநிவாஸன், சாத்தாரவீதி, ஸ்ரீரங்கம்

*40 7—6—74 குமுதத்தில் 'அகலிகை விஷயம் ஒரு திருத்தம் என்னும் தலைப்பில் ஞானம்பாள் எழுதிய ஸ்ரீவித்யா ராமாயணத்திலிருந்து ஒரு பகுதி* **கொடுக்கப்பட்டுள்ளது.** *அதில் 'ஆதி சக்தியான தேவியே பரம்பொருள்"* **என்றும்,** *"கௌதமரும் அகல்யையும் அவளுடைய பக்தர்கள்"* **என்றும்,** *"தேவியின் அருளாலேயே அகல்யை கல்லானுள்"* **என்றும்,**

*"கௌதமர் இதையறிந்து தேவியைத் துதித்தார்" என்றும் "தேவியே இராமனாக அவதரித்து அகல்யைக்கு உயிர்ப்பிச்சை அளிக்க வேண்டும் என்று கௌதமர் வேண்டினார்" என்றும், "தேவியும் அதை ஏற்று அப்படியே செய்தாள்" என்றும், "அகல்யையையும் கௌதமரையும் காண்பதற்கு தேவேந்திரனுக்கு ஆயிரம் கண்கள் அளித்தாள்" என்றும் இராமாயணக் கதையே தலைகீழாக மாற்றி எழுதப்பட்டுள்ளது. இதுபற்றிய உண்மையை உலகுக்கு அறிவிக்க வேண்டுகிறேன்.*

வால்மீகிராமாயணமே உண்மையானதென்று பல்லாயிரக் கணக்கான வருஷங்களாக நம்நாட்டு மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. ஜைனர்கள், பௌத்தர்கள் முதலானவர்களும் அதைத் தழுவி ராமாயணங்களைத் தம் தம் மதங்களில் அமைத்துக் கொண்டனர். பற்பல வடமொழிக் கவிஞர்கள் சிற்சில மாறுதல்களுடன் அதைத்தழுவிக் காவியங்கள் இயற்றினர். கம்பனும் அதைத் தழுவியே தனது ஒப்பற்ற காப்பியத்தை இயற்றினான். இக்கவிகளில் எவரும் சக்தி இராமனாக அவதரித்ததாகப் பாடவில்லை. அனைவரும் திருமாலே இராமனாக அவதரித்ததாக முழங்கியிருக்கின்றனர். வால்மீகியைப் பின்பற்றி, திருமாலையே முழு முதல்வனாக, பரம்பொருளாகக் காட்டியிருக்கின்றனர். திருமாலுக்கு இயல்பாக அமைந்த இப்பெருமையைப் பொறாத சிவபக்தர்கள் பிற்காலத்தில் இராமன் இலிங்க பூஜை செய்ததாக ஒரு கற்பனைக் கதையைப் பரப்பினர். சிவபக்தனான காளிதாஸனுடைய ரகுவம்சம் முதலான எந்தக் காவியத்திலுமே இக்கதை காணப்படாததிலிருந்து இது பிற்காலக் கற்பனை என்று தெளிவாக விளங்குகிறது. திருமாலுக்குப் போட்டியாக சிவனைப் பரம்பொருளாகக்கூற முற்பட்ட காலத்துக்கும் மிகப் பிற்காலத்தில் சக்தியைப் பரம்பொருளாகக் கூறும் சாக்தமதம் எழுந்தது. பழைய வடமொழிக் கவிஞர் எவரும் இம்மதத்தை ஆதரிக்கவில்லை. 'தேவீபாகவதம்' முதலான சாக்த நூல்கள் மிகமிகப் பிற்காலத்தில் எழுந்தவை என்பதை ஐந்நூறு வருஷங்களுக்கு முற்பட்டவர் எவருமே அதை மேற்கோளாகக் காட்டாததிலிருந்து அறியலாம். அந்த தேவீ பாகவதத்திலுள்ள விஷயமாகக்கூடக் குறிக்காமல் ஞானம்பாள்

எழுதிய ஸ்ரீவித்யா ராமாயணம் என்று எழுதியிருப்பதிலிருந்து 'குமுத'த்தில் வந்த கதை இந்நூற்றாண்டிலிருந்த அல்லது இருக்கும் ஒரு அம்மையாருடைய கற்பனையில் உதித்தது என்று விளங்குகிறது. 'இந்திரன் அகல்யையைக் கெடுத்தான்' என்பது ''அஹல்யாயை ஜார:'' என்னும் யஜுர்வேத வாக்கியத்திலிருந்தே விளங்குகிறது. 'இந்திரனே சாலும் கரி' என்று திருவள்ளுவரும் இதை உணர்த்தியிருக்கிறார். இதற்கெல்லாம் முரணாக மனம் போனபடியெல்லாம் ராமாயணம் எழுதுவது வால்மீகிபோன்ற மஹர்ஷிகளின் மதிப்பைக் குறைப்பதும் நம் மதத்தைக் கெடுப்பதுமேயாகும். மத விஷயங்களில் பெரும்பாலும் ஈடுபாடிலிருக்கும் குமுதம் அகல்யையைக் காப்பாற்றுவதாக நினைத்துக்கொண்டு, வேதபுருஷனையும், வால்மீகியையும், வள்ளுவரையும் பொய்யர்களாக்கப் பார்ப்பது மிகவும் வருந்தத் தக்கது.

S. முரளி, அந்தணல்லூர். (41, 42)

*41. ஸ்மார்த்த பிராமணர்கள் ஒருவரையொருவர் கூப்பிடும்போது ''ஹரி:'' என்று வழங்குகிறார்களே, அதன் பொருள் என்ன?*

'ஹரியே பரம்பொருள், உலகிலுள்ளதெல்லாம் ஹரி ஸ்வரூபமானது' என்று சாஸ்திரங்களை முழங்குகைபோலே நீண்ட நாளாக ஸ்மார்த்தர்கள் ஒருவரையொருவர் ''ஹரி'' என்றே கூப்பிட்டு வருகிறார்கள். வேறு எந்த தெய்வத்தின் பெயரையிட்டும் கூப்பிடுவதில்லை. இதிலிருந்து வைதிகர்களான அந்தணர்கள் அனைவரும் ஆதியில் வைஷ்ணவர்களாகவே இருந்தனர் என்றும், அவர்களில் பெரும் பகுதியினர் சைவர்களாகவும் சாக்தர்களாகவும் மாறினது பிற்காலத்திலேயே என்றும் விளங்குகிறது.

*42 மகாராஜன் கமிட்டியின் ஆலோசனைகளை அமல் நடத்துவதற்காகத் தமிழக அரசு எல்லாச் சாதியினருக்கும் வேதம் ஆகமம் ஆகியவற்றைக் கற்பிக்கப் போவதாகவும் அதற்குப்பின் அவர்களை அர்ச்சகர்களாக நியமிக்கப் போவதாகவும், பத்திரிகைச் செய்தி வந்துள்ளது. சாஸ்திரங்களுக்கும் சட்டத்துக்கும் இது பொருந்துமா என்பதை விளக்க வேண்டுகிறேன்.*

சாஸ்திரங்கள் முதல் மூன்று வர்ணத்தவர்களுக்கே வேதம் ஓதுவதற்கு அதிகாரம் வழங்கியிருக்கின்றன என்பது சாஸ்திரங்கள் அனைத்திலும், ஆசார்யர்களுடைய கிரந்தங்களிலும் வெளிப்படையாகக் காணக் கிடக்கிறது. நாத்திகர்களைத் திருப்தி படுத்துவதற்காகவும், பாமரமக்களிடம் ஓட்டுப் பெறுவதற்காகவும் அரசு இந்த நடைமுறையில் தலையிடுவது மிகவும் அநீதியாகும். கிறிஸ்தவர் இஸ்லாமியர் மதத்தில் அரசால் இப்படித் தலையிட முடியுமா? மத சுதந்திரமளித்திருக்கும் நமது அரசியல் சட்டத்துக்கும் அரசின் இச்செயல் முரணானது. அரசு சட்டமியற்றினாலும் அது செல்லாது. இதற்காக அரசியல் சட்டத்தை மாற்ற முயன்றால் மத சுதந்திரம் பறிபோய்விடும். மத உணர்ச்சியற்ற 'இந்து'க்கள் பலமாக ஆட்சேபிக்காவிட்டாலும், கிறிஸ்தவர்களும் இஸ்லாமியர்களும் இதைக் கடுமையாக எதிர்ப்பார்கள். அரசியல் சட்டத்தை அரசு மாற்ற முயலும்போது ஆஸ்திகர்கள் அனைவரும் அதற்கு ஒருமுகமாக எதிர்ப்பைத் தெரிவிக்கவேண்டும். வேத வகுப்புகள் நடத்தினாலும் பாரம்பரியம் இல்லாதவர்களுக்கு வேதஸ்வரம் வாயில் வராது. ஸ்வரம் தப்பி வேதமோதி ஆலயத்தில் பூசைகள் நடத்தினால் அதனால் நாட்டுக்குப் பெருங்கேடு விளையும். விஷ்ணு கோயில்கள் அனைத்திலும், சிவன் கோயில்களின் பெரும்பாலானவற்றிலும் வேத மந்திரங்களைக் கொண்டே பூசைகள் நடைபெறுகின்றன. மற்ற கோயில்கள் பலவற்றில் வேத மந்திரங்களைக்கொண்டு பூசைகள் நடைபெறாமையால் அவற்றில் வேதமோதும் பாரம்பரியமில்லாத சாதியினரும் அர்ச்சகர்களாக இருக்கிறார்கள். ஆலயங்களின் பழக்க வழக்கங்கள் சட்டத்தின் பாதுகாப்பைப் பெற்றவை. சைவர்கள் சாஸ்திரங்களின்படியும் பழக்க வழக்கங்களின்படியும் விஷ்ணு கோயில் அர்ச்சகர்களாக முடியாது. இதுபோலவே வைஷ்ணவர்கள் சிவன் கோயில் அர்ச்சகர்களாக முடியாது. பாஞ்சராத்ர அர்ச்சகர்கள் வைகாநஸக் கோயில்களில் அர்ச்சகர்களாக முடியாது. இதுபோலவே வைகாநஸ அர்ச்சகர்கள் பாஞ்சராத்ரக் கோயில்களில் அர்ச்சகர்களாக முடியாது. எவ்வளவு பெரிய மடாதிபதியாக இருந்தாலும் எந்தக் கோயில்களிலும் அர்ச்சகர்கள் செய்யும் காரியத்தை அவர் செய்யமுடியாது. சாஸ்திரங்

களாலும் பழக்க வழக்கங்களாலும் இவ்வளவு வேற்றுமைகள் ஏற்பட்டிருக்கும்போது ஓட்டு வேட்டையாடும் அரசியல் வாதிகள் அதில் தலையிட்டு இந்த வரம்புகளையெல்லாம் குலைக்க முயல்வது தருமமோ, நியாயமோ, நீதியோ, நேர்மையோ அன்று. கேரள அரசு இதைச் செய்ய முயன்று படுதோல்வி யடைந்தது. தமிழக அரசும் பிடிவாதமாக இதில் முயன்றால் படுதோல்வி அடையும். இதைக் காலம் நிரூபிக்கும்.

*S. ஸௌம்யநாராயணன், ஸ்ரீரங்கம்.*

*43 8—7—84 'கல்கி'யின் கடைசிப் பக்கத்தில் ''காஞ்சீ ஆசார்ய ஸ்வாமிகள் மூவரும் ஸ்ரீரங்கம் ஜீயரும் சிறிய துணி கட்டிய நீண்ட கம்புடன் வீற்றிருக்கிறார்களே. அதன் பெயர் விவரங்கள் என்ன?'' என்னும் கேள்விகளுக்கு ஆண்டவன் ஸ்வாமிகளுடைய புகைப்படத்துடன் திரு ரா. கணபதி பதில் அளித்திருக்கிறார் அதில் ''(1) பிரும்மசாரிகளுக்கும் துணி முடிச்சோடு கூடிய தண்டமுண்டு. (2) சங்ககாலம் தொட்டே த்ரிதண்டி சன்யாஸிகளே 'முக்கோல் வேந்தர்' என்று குறிப் பிடப்பட்டிருக்கிறார்கள். ஸ்ரீமத் பாகவதப்படி அர்ஜுனன் சுபத்திரையிடம் கபட சன்யாஸியாகப் போனது த்ரிதண்டிக் கோலத்தில் தான். (3) கௌபீனம் தான் இந்தத் தண்டங் களின் மேலே முடிச்சாகச் சுற்றப்பட்டுள்ள துணி'' என்று பதில் எழுதப்பட்டுள்ளது. இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

(1) பிரஹ்மசாரிகளின் பலாச தண்டத்தில் துணிமுடிச்சு கிடையாது. (2) சங்க நூல்களில் ''முக்கோல் பகவர்'' என்றே த்ரிதண்டி ஸந்யாஸிகள் குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள். 'முக்கோல் வேந்தர் என்பது தவறு. 'பகவர்' என்னும் பதம் ''பகவானான திருமாலின் அடியார்கள்'' என்று பொருள் படும். ஆழ்வார்களும் இப்பொருளில் இச்சொல்லை வழங்கியுள்ளனர். சித், அசித், ஈச்வரன் என்னும் மூன்று தத்துவங்களையும் உண்மை என ஒப்புக்கொள்கிறவர்கள் என்பதை த்ரிதண்டம் குறிக்கிறது. அர்ஜுன ஸன்யாஸி மாத்திரமல்ல; ஸீதையை அபஹரிக்க வந்த ராவண ஸன்யாஸியும் த்ரிதண்ட ஸன்யாஸி யாகவே வந்தான் என்று கம்பன் கூறுகிறான், இந்தக் கபட

ஸன்யாஸிகளும், "பரமஸாத்விகர்களான த்ரிதண்ட ஸன்யாஸி வேஷத்தில் வந்தால்தான் தம்மால் ஏமாற்றப்படுகிறவர்கள் நம்புவார்கள்" என்னும் கருத்தாலேயே முக்கோல் பகவர் வேஷத்தைக் கொண்டனர் என்று விளங்குகிறது. (3) "அத்வைத ஸன்யாஸிகள் ஸன்யாஸம் ஏற்றுக்கொள்ளும்போது சிகையையும் யஜ்ஞோபவீதத்தையும் (பூணூலையும்) எடுத்து விடுகிறார்கள். அரைநாண்கயிற்றையும் எடுத்துவிடுகிறார்கள்; அதனால் அவர்கள் கௌபீனமும் (கோவணமும்) அணிவதில்லை" என்று கேள்விப்பட்டிருக்கிறோம். அக்கோவணத்தையே அவர்கள் தங்களுடைய ஏகதண்டத்தின் மேலே முடிச்சாகக் கட்டி அத்தண்டத்தை வைத்திருக்கிறார்கள் என்று 'கல்கி'யிலிருந்து தெரியவருகிறது. புனிதமான த்ரிதண்டத்தில் கோவணத்தின் ஸ்பர்சம் ஏற்படுவதையும் ஸ்ரீவைஷ்ணவ ஸன்யாஸிகள் ஏற்கமாட்டார்கள். அவர்களுடைய த்ரிதண்டத்தின்மேல் உள்ள சதுரமான சிறிய வெள்ளைத்துணி "ஜலபவித்திரம்" எனப்படுகிறது. ஸ்நானம், ஸந்த்யாவந்தனம் முதலான ஜலஸம்பந்தப்பட்ட காரியங்களைச் செய்யும்போது ஜீயர்கள் அதை (பவித்திரமாக) உபயோகிக்கவேண்டும். இந்த விளக்கங்களைக் கல்கி வெளியிட்டால் பொது மக்களுக்குக் குழப்பம் விளையாமல் இருக்கும்.

சி. சு. கோவிந்தசுவாமி, செயலாளர், சைவசித்தாந்த சபை, மதுரை.

*44 15-6-84 தினமணி 3ம் பக்கத்தில் "உத்தரசிதம்பரம் திரு கோபுரத்தை த. நா. அரசு கட்டும்" என்னும் தலைப்பில் உள்ள செய்தியில், காமகோடி பீடாதிபதி 91வது ஜயந்தி விழாவில், தமிழக அமைச்சர் 'சைவம் வைணவம் என்ற பெயரில் மக்களை வேறுபடுத்தச் சிலர் முயல்வது கண்டிக்கத்தக்கது" என்று குறிப்பிட்டதாகச் செய்தி வந்துள்ளது. இதுபற்றித் தங்கள் கருத்தைத் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.*

இன்று காமகோடி பீடாதிபதியைத் தலைவராகக்கொண்ட அத்வைதிகள் உண்மையான அத்வைதத்தைக் கைவிட்டு 'எல்லா தெய்வமும் ஒன்று, எம்மதமும் சம்மதம்' என்னும் போலி அத்வைதத்தைப் பொதுஜனப் பத்திரிகைகள் மூலம் பரப்பி வருகிறார்கள், மத உணர்வற்ற பாமர மக்களுக்கும்,

எல்லா மதத்தினரின் ஓட்டுக்களைப் பெற விரும்பும் அரசியல் வாதிகளுக்கும், எல்லாரிடமும் பத்திரிகைகள் விற்கவேண்டும் என விரும்பும் பொதுஜனப் பத்திரிகையாளருக்கும் இது ஸௌகர்யமாயிருக்கிறபடியால் சைவத்தையும் வைணவத்தையும் இவர்கள் அனைவரும் பொய்ப்பிரசாரம் செய்து அழித்து வருகிறார்கள். ஸுதர்சனர் பதிலில் இதை அடிக்கடி எடுத்துக் காட்டி வருவதால் வைணவ மக்கள் ஓரளவுக்கு உணர்வு பெற்றுள்ளனர். சைவர்களிலும் பலர் இவ்வுண்மையை எடுத்துக்காட்ட முன்வந்தால்தான் விமோசனம் பிறக்கும்.

R. நந்தகுமார், குளித்தலை.

*45. 'இதயம்' ஜூலை மாதம் முதல் தொடங்கியிருக்கும் 'தேவிதரிசனம்' கட்டுரைத் தொடரில் திருவல்லிக்கேணி வேதவல்லித் தாயாரைப் பற்றி எழுதப்பட்டுள்ள விஷயங்கள் சரியாயிருக்கின்றனவா?*

பெரும்பாலும் சரியாயிருக்கின்றன. இருந்தபோதிலும் வடமொழி அறிவும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய அறிவும் கொண்ட வித்வான்களைத் துணைகொள்ளாததனால் பல தவறுகள் உள்ளன. '*நம: ஸ்ரீரங்க₃நாயக்யை யத்₃ப்₄ரூவிப்₄ரம பே₄த₃த:*'' என்று பட்டர் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜ ஸ்தவச்லோகத்தை ஆளவந்தார் அருளிய சதுஶ்ஶ்லோகியாக மருண்டு எழுதி, ''யத்ப்ருவிதமஸவேதத'' என்று அபத்தமாகவும் எழுதி ''ஸ்ரீரங்க நாயகியின் புருவ அசைவுகளைக்கொண்டே அவன் திருவுள்ளத்தை அறிந்து நிறைவேற்றும் நாராயணனே!'' என்று தவறாகப் பொருளும் எழுதப்பட்டிருக்கிறது. ''ஸ்ரீஸூக்தம்'' ''ஷுராப்தி'' ''ராஜலீலை முதலான பல அபத்தப்ரயோகங்கள் செய்யப்பட்டுள்ளன. தாமும் வடமொழியை அறியாமல் வடமொழியும் ஸம்ப்ரதாயமும் அறிந்தவர்களைத் துணைகொள்ளாததால் வந்த வினை இது

S. முரளி, அந்தணல்லூர். (46-49 கேள்விகள்)

*46. சென்ற ஜூலை 84 கீதாசார்யனில் 44-வது கேள்வியில் விமர்சிக்கப்பட்ட த்ரிதண்ட ஜலபவித்ரங்களைப்பற்றி 12—8—84 கல்கியில் ''ஸ்ரீநிவாஸராகவன், ஸ்ரீரங்கம்'' என்பவர் கேள்விக்கு*

*ரா. கணபதி பதில் அளித்துள்ளார். 8—7—84 இதழில் வெளியான 'தன்னையடக்கும் தண்ட'த்தில் "தண்டத்தின்மேல் சுற்றிய துணி கௌபீனமெனக் காண்பது சரியல்ல. அது ஜலபவித்திரம் எனப்படுவது. துறவிகள் இந்த ஜலபவித்திரத்தை மடித்து மோதிரவிரலில் சுற்றிக்கொண்டே ஆசமனம் செய்வார்கள்" என்பது கேள்வி. கௌபீனத்தையே தண்டத்தில் சுற்றிக் கொள்ளும் துறவறமரபும் உண்டு. பழனியாண்டவர் என்று பொதுவழக்கில் கூறும் ஸ்கந்தமூர்த்திக்காக குமார தந்த்ரத்தின் தியான ச்லோகத்தில் "கௌபீன தண்டதர தக்ஷிண ஹஸ்தம்" என்றே உள்ளது. இதைத் தமிழில் தணிகைப்புராணம் "கோவணத்துண்டு கைவாய் வலத்தின் அமைத்தருளி' என்று" என்பது பதில். இது சரியா?*

இது கேள்விக்குச் சரியான பதில் அல்ல. ஸ்ரீமதாண்டவன் திருவுருவப் படத்தை த்ரிதண்ட ஜலபவித்திரங்களோடு வெளியிட்டு விட்டு ஜலபவித்திரத்தை கோவணம் என்று எழுதியதற்கு ரா. கணபதி வருத்தம் தெரிவித்திருக்கவேண்டும். அதைச்செய்யும் நேர்மை அவருக்கில்லை. அத்வைத சன்யாசிகள் தண்டத்தில் கோவணத்தையே கட்டிக்கொண்டிருக்கிறார்கள் என்பதற்குப் பிரமாணத்தையாவது காண்பித்திருக்கவேண்டும். அதையும் செய்யவில்லை. குமாரதந்த்ரத்தையும் ஓர் தமிழ் நூலையும் காட்டி, தனது தவறைச் சரிசெய்துகொள்ளப் பார்க்கிறார். தண்டாயுதபாணியின் தண்டம் ஆயுதமேயொழிய சன்யாசி தண்டமல்ல. பழனியாண்டி அத்வைத சன்யாசியுமல்ல. இப்படியிருக்கும்போது அவரது தண்டத்தில் கோவணத்தைச் சுற்றிக்கொண்டிருப்பதைக் காட்டுவது பொருத்தமல்ல. தவறான விஷயத்தைக் கூறிவிட்டு நொண்டிச்சாக்கு கூறுவதாகவே நடுநிலையாளர்களால் கருதப்படும்.

*47. ஜூலை 84 ஸப்தகிரி அட்டைப் படத்தில் திருவேங்கடமுடையானின் சித்திரத்தை, காலில் மீனாகவும் ஆமையாகவும் தலையில் இரண்டு புறமும் நரசிங்கவராஹங்களாகவும் ஸ்த்ரீ போல் ஸ்தனங்களையும் வயிற்றில் சிவலிங்கத்தையும் எழுதியும், விஷ்ணு ஸம்பந்தமில்லாத ஆயுதங்களைக் கையில் கொடுத்தும் பெரிய விஷ்ணுத்ரோஹம் செய்திருக்கிறார்கள். இதைப்பற்றி*

*ஒன்றும் விளக்கம் உள்ளே இருப்பதாகத் தெரியவில்லை இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

திருவேங்கடமுடையானுக்குச் செய்யும் பெரிய த்ரோஹமிது. ஸப்தகிரியில் வரும் 'திருவேங்கடமலை வரலாற்றுமாலை' என்னும் தொடர்கட்டுரையில் ஸ்ரீராமாநுஜரின் சிஷ்யரான அனந்தாழ்வான் 'திருவேங்கடமுடையான் திருமாலேயொழிய வேறெந்த தெய்வமுமில்லை' என்று எவரும் பதில்சொல்ல முடியாதபடி நிரூபித்திருக்கிறார். நாவல்பாக்கம் தேவநாதாசார்ய ஸ்வாமியும் நாமும் இதுபற்றி எழுதிய கட்டுரைகளும் ஸப்தகிரியில் வந்துள்ளன. அப்படியிருக்க ஓர் ஆதாரமுமில்லாமல் திருவேங்கடமுடையானோடு சக்தியையும் சிவனையும் தொடர்புபடுத்திச் சித்திரம் தீட்டியிருப்பது பெரிய விஷ்ணுத்ரோஹமாகும். இதுபற்றி ஏராளமான அன்பர்கள் ஸப்தகிரிக்குக் கண்டனம் தெரிவிப்பதோடு இந்த ஸப்தகிரியின் அட்டைப் படத்தை எரிக்கும் போராட்டம் முதலானவற்றை நடத்தினால் தான் ஸப்தகிரி நிர்வாஹிகள் திருந்துவார்கள் என்று தோன்றுகிறது.

*48. ப்ரதோஷ ஸமயத்தில் ஸஹஸ்ரநாமம் முதலான விஷ்ணுஸம்பந்தமான கிரந்தங்களை அநுஸந்திப்பதில்லை என்னும் நியமம் சிலர் வைத்துக் கொண்டிருக்கிறார்களே இதற்கு ஆதாரமுண்டா?*

ஸ்மார்த்தர்கள் இந்த ஆசாரத்தை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். "ப்ரதோ₃ஷே ந ஹரிம் ஸ்மரேத்" [ப்ரதோஷ காலத்தில் ஹரியை நினைக்கக்கூடாது] என்னும் ச்லோகத்தையும் இதற்கு ஆதாரமாகக் கூறுகிறார்கள். தாமஸ தெய்வமான உருத்திரன் ருத்ரதாண்டவமாடும் ஸமயமாகையாலே பரம ஸாத்விகமூர்த்தியான நாராயணனை அப்போது நினைக்கக் கூடாது என்பது அவர்கள் கருத்தாகத் தோன்றுகிறது. "அந்தியம் போதிதுவாகும் அழகனே காப்பிட வாராய்" என்று ஆழ்வார் பாடியிருக்கையாலே இதை ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. எம்பெருமானை நினைப்பதற்குக் கால நியமம் கிடையாது. ப்ரதோஷ காலங்களில் விஷ்ணுகோவில்களில் அனைவரும் ஸேவிப்பதையும் காண்கிறோம். ஆதலால் இது ஸ்ரீவைஷ்ணவர்களால் ஏற்கத்தக்கதல்ல.

*49 12—8—84 இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் ''அறநிலய நிர்வாஹ அதிகாரிகளுக்கு சைவசித்தாந்த அறிவு அவசியம் என்று தமிழ்நாடரசின் அறநிலய அமைச்சர் பேசியிருக்கிறார்'' என்ற செய்தி வந்துள்ளது. அவர்களுக்கு வைஷ்ணவ சித்தாந்த அறிவு அவசியமில்லையா?*

சிவன் கோவில்களை நிர்வஹிப்பதற்கு சைவசித்தாந்த அறிவு எவ்வளவு அவசியமோ, விஷ்ணுகோவில்களை நிர்வஹிப்பதற்கு வைஷ்ணவ சித்தாந்த அறிவு அவ்வளவு அவசியமே. ஆகையால் சைவசித்தாந்த அறிவுள்ளவர்களை சிவன் கோவிலுக்கும் வைஷ்ணவ சித்தாந்த அறிவுள்ளவர்களை விஷ்ணு கோவிலுக்கும், நிர்வாக அதிகாரிகளாக நியமிப்பதே நியாயமாகும். இதை வைஷ்ணவ சமூகம் அறநிலய அமைச்சருக்கு எடுத்துக் கூறி நியாயம் பிறக்க வழி காணவேண்டும்.

வரதராஜன், பல்லேச்வரம், பெங்களூர்-3.
R. பாலசுந்தரராமானுஜதாஸர், கோவை-20.

*50. 30—8—84 'குமுத'த்தில் ஓய்வுபெற்ற உயர்நீதிமன்ற நீதிபதி திரு மு. மு. இஸ்மாயீல் அவர்கள் எழுதிய 'கம்பன் கண்ட இராமன்' என்னும் புத்தகத்திலிருந்து பக்கங்கள் சில வெளியிடப்பட்டுள்ளன. அதில் வாலியை மறைந்து நின்று கொன்றது குறித்து இராமனே வெட்கப்பட்டான் என்றும், மன்னிப்புக் கேட்டான் என்றும் எழுதப்பட்டுள்ளது. இது உண்மையா?*

இது சரியல்ல என்பது வாலி வதைப்படலத்தை ஆராய்ந்தாலே தெளிவாக விளங்கும். வாலியை அம்பால் வீழ்த்தியவுடன் தன்னை அடித்தவன் இராமனே என்று அறிந்து பதினைந்து பாடல்களில் வாலி இராமனை ஏசுகிறான், அதற்குப்பின் பதினொரு பாடல்களில் இராமபிரான் தான் வாலியைக் கொன்றதற்கு நியாயம் கூறுகிறான். நியாயமான செயலுக்கு மன்னிப்புக் கேட்க வேண்டிய அவசியமில்லை என்பது வெளிப்படை.

அதற்குப் பிறகு வாலி இராமன் சொன்னதற்கு மூன்று பாடல்களிலே பதில் கூறுகிறான். அதற்குப்பின் இராமன் ஒன்பது பாடல்களில் வாலியின் கூற்றை மறுத்துப் பேசுகிறான்.

அதற்கு அடுத்த பாடலில் "அப்படியானால் நீ மறைந்து நின்று கொன்றது ஏன்?" என்று கேட்கிறான் வாலி.

அதற்கு இலக்குவன் "உன் தம்பி சரண் புகுந்தவுடன் முறையற்ற காரியம் செய்த உன்னைக் கொல்லுவதாக ஸ்ரீராமபிரான் வாக்களித்திருக்கிறார்; அந்த வாக்கை நிறைவேற்றுவதற்காக நேரில் வந்தால் நீ உயிரின்மேல் ஆசையால் இராமனைச் சரண் புகுந்து விடுவாய் என்பதை நினைவினாலேயே ஸ்ரீராமபிரான் மறைந்து நின்று உன்னைக் கொன்றார்" என்று பதில் கூறினான்.

இராமபிரான் மறைந்து நின்று கொன்றதற்கு மன்னிப்புக் கேட்பதாயிருந்தால் முதலிடத்தில் மன்னிப்புக் கேட்டிருக்க வேண்டும். அப்படிக் கேட்டதாகக் கம்பன் கூறவில்லை.

அடுத்த பாடலில் வாலி சமாதானம் அடைந்து இராமனை வணங்கினான் என்றே கூறுகிறான். அதற்கடுத்த பாடலில் வாலியோ இராமனைத் தனது குற்றங்களைப் பொறுத்தருளுமாறு வேண்டுகிறான்.

அதற்குப்பின் ஏழு பாடல்களில் வாலி இராமனிடம் ஒரு வரம் வேண்டுகிறான். அதற்கு அடுத்த பாடலில் வாலி இராமனை மற்றுமொரு வரம் வேண்டுகிறான். அதற்குப்பின் சுக்ரீவனுக்கு அறிவுரை கூறுதல், அங்கதனை அழைத்தல், அங்கதன் புலம்பல், வாலி அங்கதனை இராமபிரானிடம் ஒப்பித்தல் முதலான பல செய்திகள் இருபத்து மூன்று பாடல்களில் கூறப்படுகின்றன.

அடுத்தபடி "தன்னடி தாழ்தலோடும் தாமரைத் தடங் கணானும், பொன்னுடை வாளை நீட்டி நீ இது பொறுத்தி என்றான் என்னலும் உலகமேழும் ஏத்தின. இறந்து வாலி, அந்நிலை துறந்து வானுக்கப்புறத்துலகனானான்" என்னும் பாடலில் செந்தாமரைக் கண்ணனான இராமன் அங்கதனைத் தான் அடைக்கலமாக ஏற்றுக்கொண்டதற்கடையாளமாகத் தன் உடைவாளைக் கையில் எடுத்து நீட்டி 'நீ இதனை ஏற்றுக்கொள்வாய்' என்றதாகவும், இதைக்கண்டு உலகமேழும் ஏத்தின என்றும் வாலி பரமபதமடைந்தான் என்றும் கூறுகிறான் கம்பன். இப்பாடலில் 'நீ இது பொறுத்தி" என்னும் தொடருக்கு "நான் உன்

தகப்பனைக் கொன்றதை மன்னிப்பாய்' என்று பொருள் கொள்கிறார் திரு. மு. மு. இஸ்மாயீல்.

இது சிறிதும் பொருந்தாது. "பொன்னுடைவாளை நீட்டி நீ இது பொறுத்தி" என்பது இங்கு வாக்கிய அமைப்பு. 'இது' என்னும் சொல் அருகிலுள்ளதைக் குறிக்குமேயொழிய பல பாடல்களுக்கு முன்வந்ததொரு செயலைக் குறிக்காது. இந்த நியமத்தைப் பற்பல காப்பியங்களில் பல்லாயிரக்கணக்கான இடங்களில் பார்க்கலாம். ஆகையால் "பொன்னுடை வாளை நீட்டி நீ இது பொறுத்தி" என்ற தொடரில் இது என்னும் சொல் அருகிலுள்ள உடைவாளையே குறிக்கும். ஆகையால் "நீ இது பொறுத்தி" என்னும் தொடருக்கு "நீ இவ்வுடைவாளைத் தாங்குவாய்" என்னும் பொருளே பொருத்தமாகும். "கம்பன் தன் காப்பியம் முழுவதிலும் 'பொறுத்தி' என்னும் சொல்லை மன்னித்துக்கொள்' என்ற பொருளிலேயே ஆண்டிருக்கிறான்" என்று திரு. மு. மு. இஸ்மாயீல் கூறுவது காப்பியத்தைச் சரியாக ஆராயாமையால் விளைந்தது.

கம்பன் தன் காப்பியம் முழுவதிலும் 'பொறுத்தல்' என்னும் சொல்லை 'தாங்கிக் கொள்ளல்' என்னும் பொருளிலும் பற்பல இடங்களில் வழங்கியிருக்கிறான். உயுத்த காண்டத்தில் மட்டும் சில இடங்களைக் காட்டுவோம்.

1. இரணியன் வதைப் படலத்தில் முதற்பாடலில் "இரணியன் பஞ்சபூதங்களிலுமுள்ள வலிமைகளையெல்லாம் தான் ஒருவனே தாங்கி நின்றான்" என்று கூறும்போது "பூதம் கண்ணிய வலியெலாம் ஒரு தனி பொறுத்தான்" என்னும் பகுதியில் 'பொறுத்தான்' என்னும் சொல்லை 'தாங்கினான்' என்னும் பொருளிலேயே வழங்கியிருக்கிறான் கம்பன்.

2. நாகபாசப்படலத்தில் 46-ம் பாடலில் "பொகட உற்ற பொறுத்தன" என்னும் இடத்தில் 'பொறுத்தன' என்னும் சொல்லை 'தாங்கின' என்னும் பொருளிலேயே வழங்கியிருக்கிறான் கம்பன்.

3. நிகும்பலை யாகப்படலத்திலும் இந்திரசித்துக்கும் இலக்குவனுக்கும் போரைக் கூறும்போது "புனலின் படை

தொடுத்தான். அவனதுவே கொடு பொறுத்தான்" (இந்திர சித்து வாருணாஸ்திரத்தைத் தொடுத்தான். இலக்குவனும் அதனையே தொடுத்துத் தாங்கினான்) என்னுமிடத்திலும் 'பொறுத்தான்' என்னும் சொல்லை 'தாங்கினான்' என்ற பொருளிலேயே கூறியிருக்கிறான் கம்பன்.

இராவணன் சோகப் படலத்திலும் இந்திரசித்தன் கிரீட மணிந்த தலை நீங்கிய உடலைச் சுமந்தவனாய் இராவணன் வருவதைக் கூறும்போது "மைந்தன் தன் மகுடச் சென்னிபோதலைப் புரிந்த யாக்கை பொறுத்தனன்" என்று "பொறுத்தனன்" என்னுஞ் சொல்லை "தாங்கினான்" என்னும் பொருளிலேயே வழங்கினான் கம்பன். கம்பன் இப்பொருளில் இச்சொல்லை வழங்கவேயில்லை என திரு. மு. மு. இஸ்மாயில் கூறுவது சரியல்ல என்பது இவற்றிலிருந்து விளங்குகிறது.

இனி அங்கதனிடம் தன் உடைவாளை நீட்டி 'நீ இதை ஏற்றுக்கொள்' என்றவுடன் 'உலகம் ஏழுமேத்தின' என்பது 'அந்த உலகம் ஏழுக்கும் பெருமை அளிப்பதாகாது' என்னும் வாதத்தை ஆராய்வோம்.

இங்கு உலகம் ஏழும் ஏத்தியது இராமன் பகைவன் மகனிடத்துப் பகைமை பாராட்டாது அன்பு வைத்தருளியதையும் பகைவனுக்கே பரமபதம் அருளவிருப்பதையும் கருதியேயாம். தந்தைபோலன்றி மைந்தன் எம்பெருமானுடைய கருணைக்கு இலக்கானமை குறித்து அதிசயித்து உலகமேழும் அவ்வங்கதனைப் புகழ்ந்தன என்றும் கொள்ளலாம்.

மேலும் இராமன் மன்னிப்புக் கேட்பதாக திரு. மு. மு. இஸ்மாயில் கூறும் 'தன் அடிதாழ்தலோடும்' என்னும் பாடலில் இராமனை 'தாமரைத்தடங்கணான்' எனக்குறிக்கிறான் கம்பன். 'மலர்ந்த தாமரைபோல் விரிந்த கண்ணை உடையவன்' என்று இதற்குப் பொருள். மன்னிப்புக் கேட்கும் பாடலாயிருந்தால் இச்சொல் பொருந்தாது. ஆகையால் அங்கதனுக்கு அருள்புரியும் பாடல் இது என்றே கொள்ள வேண்டும்.

ஆகையால் இராமன் வாலிவதம் செய்தது குறித்து வெட்கப்பட்டானென்றோ அதற்காக மன்னிப்புக் கேட்டானென்றோ கொள்வதற்குக் கம்பராமாயணத்தில் சிறிதும் இடமில்லை என்று தேறுகிறது.

*V ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்*

*51. 47 வது கேள்வியின் பதிலில் ஜூலை 84 'ஸப்தகிரி'யின் அட்டைப்படம் கண்டிக்கப்பட்டிருந்தது. ஸெப்டம்பர் 84 'ஸப்தகிரி'யில் 'உங்களுடன்' என்னும் தலைப்பில் ஆசிரியரின் குறிப்பில் இந்த அட்டைப் படத்திற்கு மறைமுகமான ஓர் சப்பைக்கட்டு கட்டப்பட்டிருக்கிறது "மகாவிஷ்ணுவின் ஓரம்சமாகக் கருதப்படும் அன்னையின் நவராத்திரி விழாவும் பிரம்மோற்சவத்தின்போது கொண்டாடப்படுவது சாலச் சிறப்பாகக் கருதப்படுகிறது. சூரிய மண்டலத்தின் நாயக நாயகிகளாக விளங்கும் மாதவனின் மாட்சிமையினை ஸ்ரீமத் பாகவதம் கூறிட, அன்னையின் அருமையினை ஸ்ரீதேவி பாகவதம் விளக்குகிறது. அன்னையும் அப்பரம் பொருளினைப் போன்றே வராஹியாகவும் சிம்ம முஹியாகவும் பல அவதாரங்கள் பெற்றிருப்பது நம்மைச் சிந்திக்கவும் அகமகிழவும் செய்கின்றது" என்பது அது இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

'மகா விஷ்ணுவின் ஓரம்சமாகக் கருதப்படும் அன்னை' என்பதை ஆராய்வோம். உலகிலுள்ள சேதநாசேதனங்கள் அனைத்துமே பரம்பொருளின் அம்சம் என்பது வேதங்களின் கொள்கை. 'அம்சம்' என்றால் 'சரீரம்' என்று பொருள் என்று ஸ்ரீராமாநுஜர் முதலான சான்றோர்கள் நிலைநிறுத்தியிருக்கிறார்கள். இப்படி உலகனைத்தும் மஹாவிஷ்ணுவின் சரீரமாயிருக்கும்போது "மகா விஷ்ணுவின் ஓர் அம்சமாகக் கருதப்படும் அன்னை" என்று எழுதுவது அசட்டு வார்த்தையே. அன்னையின் நவராத்திரி விழா என்பது சாக்தர்களின் வாதமே யொழிய வைதிகர்களின் வாதமல்ல. இரண்டுவகையான ஆகமங்களைக் கொண்டு நிறுவப்பட்ட இருவகைக் கோவில்களில் ஒரே சமயத்தில் விழா அமைவதில் என்ன சிறப்பு என்பதும் விளக்கப்படவில்லை. சூரிய மண்டலத்தின் நாயகனைச் சாந்தோக்ய உபநிஷத்தும் அந்தர்யாமி [illegible] ஆயிரக்கணக்கான இதிஹாஸ

புராண வசனங்களும் தாமரைக் கண்ணனாகிய நாராயணனையே குறிப்பிடுகின்றன.

ஸ்மார்த்தர்களும் 'ஸூர்யநாராயணன்' என்று பெயர் வைத்துக் கொள்கிறார்களேயொழிய "சூரிய சிவன்' என்றோ 'சூரியதுர்க்கை' என்றோ பெயர்வைத்துக் கொள்வதில்லை. இப்படியிருக்க சூர்யமண்டலத்தின் நாயக நாயகிகளாக மாதவனும் துர்க்கையும் விளங்குவதாக எழுதுவது வேதவிருத்தக் கூற்றாகும். ஸ்ரீமத் பாகவதத்துக்குப் போட்டியாக சில நூற்றாண்டுகளுக்குள் கற்பிக்கப்பட்டது தேவி பாகவதம். பாரத தேசத்தில் உள்ள மதாசார்யர்கள் பலரும் ஸ்ரீமத் பாகவதத்தை ஆயிரமாண்டுகளுக்கு மேலாகக் கையாண்டிருக்கிறார்கள். ஐநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட எவரும் தேவிபாகவதத்தில் ஒரு துறுக்கைக்கூடத் தொட்டதில்லை. ஸ்ரீமத் பாகவதம் துர்க்கையை விஷ்ணுவின் ஏவலாளாகக் காட்டுகிறது. தேவீ பாகவதம் இதற்கு எட்டிக்குப்போட்டியாக எல்லா தெய்வங்களையும் துர்க்கையின் கையாளாகக் காட்டுகிறது. இப்படி அடிப்படையிலேயே இரண்டு நூல்களும் வேறுபட்டிருக்கும் போது இரண்டும் ஒன்றுபட்டிருப்பதாகக் கூறுவது இரண்டையும் அறியாத பாமர வாசகர்களை ஏமாற்றுவதற்கேயாகும். திருமலையில் மதாசார்யர்களில் ஸ்ரீராமானுஜர் ஒருவருக்கே கோயில் அமைந்துள்ளது. அதற்குக் காரணம் ஸ்ரீநிவாஸ துரோகிகள் சிலர் அத்திருமாலை வேறு தெய்வமாக்க முயன்ற போது அவர் ப்ரமாணங்களைக்காட்டி 'அவன் திருமாலே' என நிலைநிறுத்தியதேயாகும். எப்படி நிலைநிறுத்தினார் என்பதை ஸ்ரீராமானுஜருடைய சிஷ்யரான அநந்தாழ்வான் 'ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸமாலா' என்னும் வடமொழி நூலில் காட்டியிருக்கிறார். 'திருவேங்கடமலை வரலாற்று மாலை' என்னும் தலைப்பில் ஸ்ரீ உ. வே. தி. அ. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியால் ஸப்தகிரியில் அந்நூல் தொடர்ந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வருகிறது இப்படி ஸ்ரீராமானுஜர் ஸ்ரீநிவாஸனின் உண்மை நிலையை நிலைநாட்டியதாலேயே ஸ்ரீநிவாஸனின் திருமுன்பே தினந்தோறும் சாற்றுமுறையின்போது 'ஸர்வதேச தசாகாலேஷ்வவ்யாஹத பராக்ரமா I ராமானுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம் II ராமானுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸர

முஜ்ஜ்வலா1 திகந்த வ்யாபிநீபூயாத் ஸாஹி லோகஹிதைஷிணீ11' என்று ஸ்ரீராமாநுஜருடைய திருவாணைக்குப் பல்லாண்டு பாடப் படுகிறது. தமிழ் இலக்கியங்களைப் பார்த்தால் சிலப்பதிகாரம் ஆழ்வார்களின் அருளிச் செயல்கள், கம்பராமாயணம் முதலான நூற்றுக்கணக்கான நூல்கள் திருவேங்கடவனைத் திருமாலாகவே போற்றுகின்றன. நாயன்மார் முதலான மற்ற தெய்வ பக்தர்கள் எவரும் அவனை மற்றொரு தெய்வமாகப் பாடியிருக்கும் ஒரு துணுக்குக்கூடத் தமிழிலக்கியத்தில் கிடையாது. இந்நிலையை மாற்றுவதற்காக இக்காலத்து ஸ்ரீநிவாஸ துரோகிகளான சில சாக்தர்களும் சைவர்களும் சப்தகிரியில் அவ்வப்போது சில கட்டுரைகள் எழுதினார்கள். வேதவித்தமரான நாவல்பாக்கம் ஸ்ரீ உ. வே. தேவநாதாசார்ய ஸ்வாமியும் நாமும் அதை உடனுக்குடன் கண்டித்தெழுதிய கட்டுரைகள் சப்தகிரியிலும் வெளியிடப்பட்டன. 'இப்படி கண்டனம் வந்துவிடப்போகிறதே' என்று பயந்து ஜுலை மாத சப்தகிரியில் ஒரு விளக்கமுமில்லாமல் திருவேங்கடமுடையானை துர்க்கையாகச் சித்திரம் தீட்டச் செய்திருக்கிறார்கள் ஸ்ரீநிவாஸ துரோகிகள். வைகாநஸாகமமும் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த நடைமுறைகளும் வீறு பெற்று விளங்கும் திருமலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீநிவாஸனின் பணத்தைக் கொண்டு நடத்தப்படும் இந்தப் பத்திரிகையில் இப்படிப் படம் வெளியிட்டதும், ஆக்ஷேபக் குரல்கள் கிளம்பியவுடன் அதற்கு சப்பைக்கட்டு கட்டப்படுவதும் பெருத்த அநீதியாகும். திருவேங்கடவனின் பக்தர்கள் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும் என்பதையே இவை காட்டுகின்றன.

S. *முரளி அந்தணநல்லூர்.*

***52. 15—10—84 'கல்கி'யில் காமகோடிப் பெரியவர் ''வேதங்களையெல்லாம்ஒரு சரீரமாக-மெய்யாக வைத்துக்கொண்டால் அதில் உயிராக-மெய்ப்பொருளாக இருப்பது சிவநாமா'' என்று பேசியிருப்பது சரியா?***

வேதங்களில் பூர்வபாகத்தோடு வேதாந்த பாகத்தோடு வாசியில்லாமல் விஷ்ணுவே தேவர்களுக்கெல்லாம் மேலானவனாகவும், பரப்ரஹ்மமாகவும், பரமாத்மாவாகவும்

பரதத்வமாகவும் முழங்கப்படுகிறான். வேறு எந்த தெய்வத்தையும் இப்படி முழங்கும் வேத வாக்யம் ஒன்றுகூட இல்லை. இதனாலேயே காமகோடிப் பெரியவர் போன்ற சைவ சாக்தர்கள் மற்ற தெய்வங்களுக்கு வெறும் யுக்திவாதத்தைக் கொண்டு பரத்வம் சாதிக்க முயல்கின்றார்கள். சைவ வேஷம் போடும்போது அவர்கள் செய்யும் யுக்திவாதம் 'கல்கி'யில் காணப்படுகிறது. அதாவது "நாலு வேதங்களுக்குள் யஜுர் வேதம் நடுவிலிருப்பது. யஜுர் வேதத்தில் நாலாவது காண்டம் நடுவிலிருப்பது. அதன் நடுவிலிருக்கும் ஐந்தாவது ப்ரச்னத்தின் நடுவிலுள்ள ருத்ரஸூக்தத்தில் நடுநாயகமாயிருப்பது 'நம: சிவாய' என்கிற பஞ்சாக்ஷரம், அதுவே 'வேதம் நான்கிலும் மெய்ப்பொருளாவது' என்பது அவரது வாதம். இங்கு பஞ்சாக்ஷரத்துக்கு மோக்ஷம் முதலிய எந்தப் பயனும் கூறப்படவில்லை. "வேதத்தின் பூர்வ பாகத்தில் 'ருத்ரன்' என்னும் தெய்வத்தைக் குறித்து யாகங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவே யொழிய 'சிவன்' என்னும் தெய்வத்தைக் குறித்து எந்த யாகமும் கூறப்படவில்லையாகையால் பூர்வபாகத்தில் 'சிவன்' என்னும் தெய்வம் கிடையாது. சிவசப்தம் வரும் இடங்களில் எல்லாம் அது 'மங்களம்' என்னும் பொருளிலேயே பூர்வ பாகத்தில் வழங்கப்பட்டிருக்கிறது என்பது வேதம் வல்லவர்களின் தேர்ந்த முடிவாகும். ருத்ரத்திலுள்ள சிவசப்தமும் மங்களம் என்னும் பொருளிலேயே வழங்கப்பட்டுள்ளது என்னு இதிலிருந்தே விளங்குகிறது. சதபத ப்ராஹ்மணத்தில் பிரமன் உருத்திரனைப் படைப்பதைக் கூறும் வாக்யத்தில் பிரமன் உருத்திரனுக்கு வைத்த பெயர்களில் சிவநாமம் இல்லை. இதிலிருந்து உருத்திரனுக்கு சிவன் என்பது இயற்பெயரன்று என்றும், விஷ்ணுவின் ஸ்ரீபாத தீர்த்தமான கங்கையைத் தலையில் தரித்தபின்பு ஏற்பட்ட காரணப்பெயரே அது என்றும், இக்காரணப் பெயரே உபநிஷத்துக்களிலும் இதிஹாச புராணங்களிலும் உருத்திரனுக்கு வழங்கப்பட்டது என்றும் விளங்குகிறது: *"யச்சௌசநிஸ்ஸ்ருதஸரித்ப்ரவரோதகேந தீர்த்தேந மூர்த்நி வித்ருதேந சிவ: சிவோபூத்"* [விஷ்ணுவின் ஸ்ரீபாத தீர்த்தமாகிற கங்கையைத் தலையில் தரித்தபிறகே சிவன் சிவனானான்] என்னும் ஸ்ரீபாகவதச்லோகம் இதை வலியுறுத்துகிறது. *"ஓம் நமோநாராயணாயேதி மந்த்ரோபாஸக: வைகுண்ட*

புவர லோகம் கமிஷ்யதி" என்று திருவஷ்டாக்ஷரத்துக்குப் பரமபதத்தை உபநிஷத்து பலமாகச் சொல்லியிருப்பதுபோலே, பஞ்சாக்ஷரத்துக்கு வேதவேதாந்தங்களில் எங்கும் மோக்ஷ பலனைக் கூறவில்லை, ஆகையால் வேதத்தின் நடுப்பொருள் பஞ்சாட்சரம் என்று வலிந்து சாதிப்பதாலும் சிவபரத்வம் சித்திக்காது.

S. கோவிந்தராஜன், சென்னை-94.

*53. நவம்பர் .84-இல் ஞான பூமியின் அட்டைப் படத்தில் வெளியிடப்பட்டிருக்கும் ஒரு மஹாஸம்ப்ரோக்ஷணப் படத்தில் தேவரீர் ஸேவை சாதிக்கிறீர். அது எந்த திவ்யதேச ஸம்ப்ரோக்ஷணப் படம்? தேவரீருடைய மணி விழா மாதத்தில் இப்படம் 'ஞானபூமி'யில் வெளிவந்தது அறிந்து செய்ததா? அறியாமல் செய்ததா?*

ஒரு வருடத்துக்கு முன் ருத்ரோத்காரி ஆனி மாதம் நடைபெற்ற திருவெள்ளறை திவ்ய தேச மஹா ஸம்ப்ரோக்ஷணப் படமாகும் அது. அதில் எனது முழு உருவப்படம் அமைந்திருப்பது தெரிந்தால் 'ஞான பூமி' நிர்வாகிகள் அதை வெளியிட்டிருக்க மாட்டார்கள். 'ஞான பூமி' செய்யும் தவறுகளையெல்லாம் விடாமல் எடுத்துக் கண்டித்து வருபவனன்றோ நான். அடியேனது குல தெய்வமான திருவெள்ளறை புண்டரீகாக்ஷனின் ஸங்கல்பத்தாலே மணி விழா மாதத்தில் அது வெளிவந்திருக்கிறது என்பதே உண்மை. நாம் ஞானபூமியை இடித்துரைப்பது உண்மையான நட்பினாலேயே என்பதை எம்பெருமான் இதன் மூலம் ஞான பூமி நிர்வாகிகளுக்கு உணர்த்தி நின்றான் போலும்!

V. B. கோவிந்தராஜன் பம்மல், சென்னை

K. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் கஸ்தூர்பாகிராமம், ஈரோடு.

*54. டிஸம்பர் (9-15) இதயம் பேசுகிறது இதழில் திரு V சுப்பிரமணியன் என்பவர் அமெரிக்காவில் கலிபோர்னியாவிலுள்ள ஓர் ஆராய்ச்சிக் கழகம் இராமன், கிருஷ்ணன், ஆதிசங்கரர் முதலானவர்களுடைய பிறந்த ஆண்டு முறையே கி. மு. 4000, கி. மு. 3200, கி. மு. 1500 என்று நிர்ணயித்*

திருப்பதாகவும், சிவபெருமான் தக்ஷன் மகளை மணந்த ஆண்டு கி. மு. 17 000 என்று நிர்ணயித்துள்ளதாகவும் எழுதியுள்ளார். இது சரியானதா?

கிருஷ்ணன் துவாபரயுகத்தின் கடைசியில் வாழ்ந்தான் என்று புராணங்கள் கூறுவதோடு இந்த ஆராய்ச்சி ஒத்துப் போகிறது. இராமன் திரேதாயுகத்தில் வாழ்ந்தான் என்பதோடு முரண்படுகிறது. ஸ்ருஷ்டிகாலத் தொடக்கத்தில் - கிருதயுகத்தில் தக்ஷன் இருந்தான் என்று புராணங்கள் கூறுவதோடு முரண்படுகிறது. புராண புருஷர்கள் விஷயத்தில் கால நிர்ணயம் செய்வது அவ்வளவு எளிதன்று. ஆதிசங்கரர் கி. பி. 8-வது நூற்றாண்டிலிருந்தார் என்று பெரும்பான்மையான ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக்கொள்கிறார்கள். ஆதிசங்கரர் ஸ்தாபித்ததாகக் கூறப்படும் நான்கு மடங்களும் இக்கால நிர்ணயத்தை ஒப்புக் கொள்கின்றன. ஆதிசங்கரர் (பெயரில்) மிகப் பிற்காலத்தில் ஏற்பட்ட காமகோடி மடம் மாத்திரம் சமீபத்தில் எழுதப்பட்ட தனது குருபரம்பரை நூலில் ஆதிசங்கரர் காலத்தை கி. மு. 1000 க்கும் முன்னதாகக் கூறுகிறது. இதை ஆராய்ச்சியாளர் எவரும் ஏற்கமாட்டார்கள். இப்பொய்யை உண்மையாக்குவதற்காகவே இக்கட்டுரை இதயம் இதழில் வெளியிடப்பட்டிருக்கிறது என்று தோன்றுகிறது.

T. A. K. பரீபொன்னாம்பிள்ளை, ஸ்ரீரங்கம்.

55. திரு மு. மு. இஸ்மாயிலுக்கு வாலிவதம் பற்றி தேவரீர் எழுதிய பதிலுரை சென்றமாதம் குமுதத்திலும் வெளியிடப்பட்டிருந்தது. திரு மு. மு. இஸ்மாயில் ஏதேனும் பதில் கூறியிருக்கிறாரா?

எந்த பதிலும் நமக்கும் வரவில்லை. குமுதத்திலும் வெளிவரவில்லை. நமது கட்டுரையைப்பார்த்த அனைவரும் இதற்கு திரு மு. மு. இஸ்மாயிலால் எந்த பதிலும் கூற இயலாது என்றே சொல்லுகிறார்கள்.

V. ராமமூர்த்தி, துறையூர்.

56 "செல்வம் என்பது எவ்வளவு இருக்கின்றது என்பதில் இல்லை. ஆனால் எவ்வளவு நன்மைகள் செய்கிறது—என்பதில்

*இருக்கின்றது' என்று ஸ்ரீமத் ராமானுஜர் அவரது கோவிந்த பாஷ்யத்தில் கூறுகிறார் '' என்று பிப்ரவரி 85 ஞானபூமியில் பட்டிருக்கிறது இது உண்மையா?*

இது முழுப்பொய், இராமானுஜர் கோவிந்த பாஷ்யம் என்ற ஒரு நூல் எழுதியதே இல்லை. அவர் வேறு எங்கும் இப்படிக் கூறியதுமில்லை. ஞானபூமியின் கற்பனைக் கோட்டை களில் இஃதொன்று,

தம்பு ப, ஸம்பத்குமார்—பங்களூர்.

*57. மார்ச்சு ஞானபூமியில் 'தில்லை திருநடன தரிசனம்' என்னும் கட்டுரையில் தில்லை கோவிந்தராஜப் பெருமா னுடைய சித்திரத்தை அச்சிட்டு ''ஆனந்த நடனம் காணும் தில்லை கோவிந்தராஜப் பெருமாள்'' என்று எழுதியிருக்கிறது. நடனத்தைக் காண்பவர் படுத்துக்கொண்டு காண்கிறார் என்பது சரியா?*

சரியன்று. கோவிந்தராஜப் பெருமாள் படுத்துக்கொண் டிருப்பதுமட்டுமல்ல நடராஜரை நோக்கிக் காலை நீட்டிக் கொண்டு நடராஜரைக் காட்டிலும் உயர்ந்த ஸ்தானத்தில் படுத் துக்கொண்டிருக்கிறார். ஆகையால் கோவிந்தராஜர் நடராஜபக்த ராயிருந்துகொண்டு நடனத்தைக் காண்கிறார் என்று கூற முடியாது. இருவரும் இருக்கும் அமைப்பைப் பார்த்தால் கோவிந்தராஜனாகிய சக்ரவர்த்தி ஒய்யாரமாக ஸிம்ஹாஸனத்தில் படுத்துக்கொண்டிருக்கும்பொழுது, நடனமாடுபவர்களின் தலை வனான நடராஜன் அவரைக் கூத்தாடி உகப்பிக்கிறான் என்றே கொள்ளத்தகும். காளிக்கும் நடராஜருக்கும் நடனபோட்டி ஏற்பட்டதாகவும், கோவிந்தராஜரை நீதிபதியாக இருந்து தீர்ப்புக் கூறும்படி இருவரும் வேண்டியதாகவும். காளியின் நடனம் விஞ்சிவிட சிவன் தன் மானத்தைக்காப்பாற்ற வேண்டி கோவிந்தராஜரைத் தியானித்ததாகவும். பக்தபராதீனரான அவர் காலைச்சிறிது தூக்கிக் காண்பித்ததாகவும். குறிப்புணர்ந்த சிவன் தன் காலைத் தூக்கி நின்றாடி, காளியை வெற்றிகொண்ட தாகவும், சீற்றம் கொண்ட காளியைத் தில்லைக்கு எல்லைப் புறத்தே விலங்கிட்டு வைத்திருப்பதாகவும் வழங்கும்

தலபுராணமும் இதை வலியுறுத்துகிறது. 'தில்லைக்காளி எல்லைக் கப்பால்' என்னும் பொதுஜன வழக்கும், காளியை விலங்கிட்டு வைத்திருப்பதும் இவ்வரலாற்றை வலியுறுத்துகின்றன. ஞானபூமி கதையைத் திரித்துக்கூறி, பொதுஜன வழக்கை மாற்றியிருப்பது பொய்ம்மையின் எல்லையாகும்.

*''திங்கள்சூழ்சித்திர கூடமேவிய எங்கள்கோவிந்த ராசற்குத்*

*தினமுமே கூத்தாடி யானவன் திருச்சிற்றம்பல வாணனே''*

என்று பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் பாடியிருப்பதும் உண்மையை வெளிப்படுத்துகின்றது.

K. ரங்கராஜன், திருச்சி-17

*58. 85, மார்ச் ஞானபூமியில் பாஞ்ஸுர 'யுத்தக் கதையை எழுதும்பொழுது, கண்ணன் தன் தேருக்குச் சாரதியாக கணபதியின் குருவான ஸூர்ய தேவனை அமைத்து குருவைக் கண்டதும் தன்னை மறந்து நின்ற கணபதியை தரிசித்து, அவனுடைய அனுக்ரஹத்துடனேயே கோட்டைக்குள் நுழைந்ததாகவும், அடுத்த வாயிலைக்காத்த ஷண்முகன் பிரணவத்தின் மூலப்பொருள் என உணர்ந்து பிரணவ மந்திரத்தைத் தன் பாஞ்சசன்யத்தில் ஒலிக்கச்செய்து அவனைக் கடந்ததாகவும், கண்ணன் தான் எய்யும் அஸ்த்ரங்கள் அனைத்தும் சிவன்மீது வில்வதளமாக விழச் செய்ததாகவும் கதைகள் எழுதப்பட்டுள்ளன. இவற்றுக்கு எந்த ஆதாரமும் காட்டப்படவில்லை. பழைய நூல்களில் இவற்றிற்கு ஏதேனும் ஆதாரம் உண்டா?*

எந்த ஆதாரமும் இல்லை. ஹரிவம்சத்தில் சிவனும் அவன் மக்களும் காளி முதலிய பலரும் கண்ணன், பலராமன், ப்ரத்யுப்நன் முதலானவர்களால் அடிபட்டுத் தோற்று ஓடியதாக உள்ளது. நம்மாழ்வார், திருமழிசையாழ்வார் முதலானோரும் இப்படியே பாடியிருக்கிறார்கள். ஞானபூமிக் கட்டுரையில் இருப்பதுபோல் நாயன்மார்கள்கூடப் பாடியிருக்கவில்லை. இதிலிருந்து ஞானபூமிக் கதை பிரம்மாண்டப் புளுகு என்று விளங்கும். இத்தகைய கதைகளை எழுதும்பொழுது 'இதற்கு இந்த நூல் ஆதாரம்' என்று காட்டுவதும் கிடையாதே!

கொட்டையூர் S. P. ஸாரதி, கும்பகோணம்

59. '85 மார்ச் ஞானபூமியில் ஹரேகிருஷ்ண இயக்கத்தைச் சேர்ந்த பக்தி ஸ்வரூப தாமோதர ஸ்வாமி ஸ்ரீபாதரின் பேட்டி வெளிவந்துள்ளது. அதில் அந்த ஸ்வாமி "எல்லா தெய்வங்களும் ஒன்றே எல்லாம் பரம்பொருளின் வடிவங்களே" என்று பேசியதாக எழுதப்பட்டுள்ளது. இது உண்மையாக இருக்குமா?

ஹரே கிருஷ்ண இயக்கத்தின் கொள்கைக்கு இது முரணாயிருப்பதால் இது பொய்யே என்பது தெளிவு. பக்தி ப்ரஜ்ஞான யதிமஹராஜ், ஆண்டவன் ஸ்வாமி, வானமாமலை ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீகாஞ்சி மஹா வித்வான் ஸ்வாமி ஆகிய வைணவத் தலைவர்களின் பேட்டியைத் திரித்து வெளியிட்டதுபோல், இப்பேட்டியும் மாற்றி வெளியிடப்பட்டுள்ளது என்றே விளங்குகிறது.

R. பத்மநாபன், கொட்டையூர், கும்பகோணம்

60 1985 மே கலைமகள் இதழில் 'கோபுர தரிசனம்' என்ற தலைப்பில் வெளிவந்துள்ள கட்டுரையில் 416ஆம் பக்கத்தில் 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று', 'அரனை மறவேல்', 'திருமாலுக்கு அடிமை செய்' என்னும் வாக்யங்கள் ஔவை சொன்னதாக எடுக்கப்பட்டுள்ளன. ஔவை இயற்றிய ஆத்திசூடியில் 'அறனை மறவேல்' என்று உள்ளதேயொழிய 'அரனை மறவேல்' என்று இல்லை. இதுபற்றி கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதனுக்கு எழுதி 'அரனை மறவேல்' என்பது ஔவையின் வாக்காகுமா? என்பதுபற்றி விடையவன் பதிலில் விளக்குமாறு வேண்டினேன். ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தில் பல வருடங்களுக்குமுன் இதுபற்றி எழுதியிருக்கும் தாங்கள் கீதாசார்யன் வாசகர்களுக்காக கீதாசார்யன் ஸுதர்சனர் பதிலில் விளக்கி எழுத வேண்டுகிறேன்.

பல வருடங்களுக்குமுன் ஆத்திசூடி அமைந்திருக்கும் முறையை அறியாமல் 'திருமாலுக்கு அடிமைசெய்', 'அரனை மறவேல்' என்று ஆத்திசூடியில் சிவ விஷ்ணுக்கள் இருவரையும் ஔவையார் போற்றச் சொல்லியிருப்பதாகக் காமகோடி, [illegible] ப்ரதிபதி பத்திரிகைகளில் எழுதினர். ஆத்திசூடியில்

'அரனை மறவேல்' என்றே உள்ளதாகையால் இது தவறு என்று சுட்டிக்காட்டி அவருக்கு பதில் எழுதியனுப்பினேம். இருந்த போதிலும் பிடித்த பிடிவாதத்தை விடாமல் பல பத்திரிகைகளில் திருப்பித் திருப்பி இப்படி எழுதி வருகிறுர். ஆத்திசூடியின் அமைப்பைப் பார்த்தால் ஔவையார் 'அறனை மறவேல்' என்று எழுதியிருக்க முடியுமே தவிர 'அரனை மறவேல்' என்று எழுதியிருக்க முடியாது என்பது விளங்கும். எப்படியெனில்:- ஆத்திசூடியில் முதல் 13 வாக்கியங்கள் உயிரெழுத்தான 12 எழுத்திலும் ஆய்த எழுத்திலும் தொடங்குபவை. 14ஆவது வாக்கியம் தொடங்கி 31வது வாக்கியம் வரையில் 'க' தொடங்கி 'ன' வரையிலுள்ள 18 உயிர்மெய்யெழுத்துக்களில் தொடங்குபவை. இதில் ஒரு நுட்பத்தை அறியவேண்டும். 'ய' தொடங்கி 'ன' வரையிலுள்ள எழுத்துக்களிடையே. 'வ' நீங்கலாக மற்ற எழுத்துக்களில் தமிழிலக்கணப்படி சொற்கள் தொடங்க மாட்டா. அதற்காக அவ்வெழுத்துக்களுக்கு முன் ஒருயிரெழுத்தைக்கொண்ட சொற்களில் தொடங்கும் வாக்கியங்கள் அமைக்கப்பட்டன.

அதாவது—'இயல்பலாதன செயேல்' என்பது 'ய' என்னும் எழுத்துக்காக அமைக்கப்பட்ட வாக்கியம். 'அரவமாட்டேல்' என்பது 'ர' என்னும் அடுத்த எழுத்துக்காக அமைக்கப்பட்ட வாக்கியம். 'அரனை மறவேல்' என்று ஔவையார் எழுதக் கருதியிருந்தால் இவ்விடத்தில்தான் ஔவையார் அவ்வாக்யத்தை அமைத்திருக்க வேண்டும். 'இலவம் பஞ்சில் துயில்' என்பது அடுத்தான ல' என்னும் எழுத்துக்காக அமைக்கப்பட்ட வாக்கியம். 'வஞ்சகம் பேசேல்' என்பது 'வ' என்னும் எழுத்தில் தொடங்கும் வாக்கியம். 'அழகலாதன செயேல்' என்பது அடுத்தான 'ழ' என்னும் எழுத்துக்காக அமைக்கப்பட்ட வாக்கியம். 'இளமையிற் கல்' என்பது அடுத்ததான 'ள' என்னும் எழுத்துக்காக அமைக்கப்பட்ட வாக்கியம். '**அறனை** மறவேல்' என்பது அடுத்ததான 'ற' என்னும் எழுத்துக்காக அமைக்கப்பட்ட வாக்கியம். இதனை 'அரனை மறவேல்' என்று எழுதுவது ஆத்திசூடியில் சிவனைத் திணிக்க வேண்டும் என்ற பிடிவாதத்தால் விளைந்ததேயாகும். 'அனந்தலாட்டேல்' என்னும் அடுத்த வாக்கியம் 'ன' என்னும் கடைசி எழுத்துக்காக அமைக்கப்பட்ட 31வது வாக்கியம்.

மேலே 1. 'க, கா, கி, கீ,...கோ' 2. 'ச, சா, சி, சீ, ...சோ' 3. 'த, தா, தி, தீ,...தோ' 4. 'ந, நா, நி, நீ,...நோ' 5. ப, பா, பி, பீ,...போ' 6. 'ம, மா, மி, மீ...மோ' 7, 'வ வா, வி, வீ,...வோ (ஓ)' என்னும் எழுத்துக்களில் தொடங்கும் எழுபத்தேழு (77) வாக்கியங்கள் அமைந்திருக்கின்றன. ஆக மொத்தம் 108 வாக்கியங்களும் 'அ' இலிருந்து தொடங்கி வோ (ஓ)' வரையிலுள்ள எழுத்துக்களில் தொடங்கும் வாக்கியங்களாக 'ஆத்திசூடி' அமைந்துள்ளது. இதில் 'தி' இல் தொடங்கும் வாக்கியம் 'திருமாலுக்கு அடிமை செய்' என்பது. ஔவையார் சிவபக்தையான போதிலும் திருமாலே பரம்பொருள் என்பதையும், சங்ககாலம் தொடங்கித் தமிழ்ச்சான்றோர்கள் திருமாலைப் பரம்பொருளாகக்கொண்ட வைணவத்தையே பின்பற்றினார்கள் என்பதையும் உணர்ந்தவர். ஆகையாலே, குழந்தைகளுக்கான நீதிநூலான ஆத்திசூடியில் பரம்பொருளான திருமாலாகிய தேவாதிதேவன் ஒருவனையே எடுத்து அவனுக்கே அடிமை செய்ய வேண்டும் என்று குழந்தைகளுக்கு அறிவுறுத்துகிறார். இதைக் கண்டு பொறாமல் ஆத்திசூடி வாக்கியத்தையே மாற்றி அதில் அரனைப் புகுத்தப் பார்ப்பது ஆத்திசூடியின் அமைப்பை அறியாமையையும், பிடிவாதத்தையுமே காட்டும். இலக்கியப் பத்திரிகையாக வெளிவரும் கலைமகளில் தலைசிறந்த இலக்கிய அறிஞரான கி. வா. ஜகந்நாதன் இதை அனுமதித்தது மிகவும் தவறு. இதற்கு அவர் திருத்தம் வெளியிடாவிட்டால், அவரது ஆசிரியரான 'தமிழ்த்தாத்தா' சாமிநாத ஐயரிடமிருந்த நேர்மை இவரிடம் இல்லை என்றே தமிழ்கூறும் நல்லுலகம் முடிவுகட்டும்.

S. முரளி, அந்தணநல்லூர்

*61. கீதாசார்யன் ஜூன் 85 இதழில் குழந்தைகளுக்கு நாதமுனிகளின் வைபவத்தை எழுதிவரும்பொழுது உய்யக்கொண்டாரையும், மணக்கால் நம்பியையும் நாதமுனிகளின் சிஷ்யராகக் காட்டப்பட்டுள்ளது. இது சரியா?*

உய்யக்கொண்டாரே நாதமுனிகளின் சிஷ்யர். மணக்கால் நம்பி உய்யக்கொண்டாரின் சிஷ்யரே. பழைய நூல்கள் எதுவும் இருவரையும் நாதமுனிகளுடைய சிஷ்யர்களாகக் கூறவில்லை.

தர்பு பா. கிருஷ்ணஸ்வாமி, சென்னை-83.

*62 பிராமண சங்கங்கள் ஆங்காங்கு அமைக்கப்பட்டுள்ளன மதவேற்றுமைகள் மிகுந்த பிராமண சமூகம் எந்த அடிப்படையில் ஒற்றுமை காண முடியும்?*

பிராமண சமூகம் மத அடிப்படையில் சைவர், வைஷ்ணவர், ஸ்மார்த்தர், மாத்வர் என்று நான்கு பிரிவுகளாகப் பிரிந்துள்ளது. இவர்களில் வைஷ்ணவர்களும் மாத்வர்களும் விஷ்ணு என்னும் தெய்வமே மற்ற எல்லா தெய்வங்களையும் படைத்த முழுமுதற் கடவுள் என்ற கொள்கையுடையவர்கள். சைவர்கள் சிவனே அத்தகைய முழுமுதற் கடவுள் என்ற கொள்கையுடையவர்கள். ஸ்மார்த்தர்களில் பெரும்பாலோர் சிவன் விஷ்ணு முதலான எல்லா தெய்வங்களும் ஒன்று என்னும் கொள்கையை யுடையவர்கள். விசிஷ்டாத்வைத வைஷ்ணவ மதக் கொள்கைப்படி திருமால் தவிர மற்ற தெய்வங்களைத் தொழுவது தடுக்கப்பட்டுள்ளது. இந்தக் கொள்கை வேற்றுமைகளைப் பரஸ்பர சகிப்புத் தன்மையோடு எல்லாப் பிராமணர்களும் மதிக்க வேண்டும். அவரவர் சமயக் குறிகளை அவரவர் தங்கள் நெற்றியில் அணிதல் வேண்டும். ஒருவரது கொள்கையையோ, சமயக் குறிகளையோ மற்றவர்மீது திணிக்க முற்படக் கூடாது. வேற்றுமையில் ஒற்றுமை காணும் இவ்வடிப்படையில் பிராமண சமூகம் ஒற்றுமையுடன் ஆன்மீகத்திலும், லௌகிகத்திலும் முன்னேற எல்லா பிராமணர்களும் பாடுபடுவதே அந்த சமூகத்தின் சிறப்புக்கும் ஒற்றுமைக்கும் உயர்வுக்கும் வழி வகுக்கும்.

*M. ஆறுமுகம், திருச்சி-17* [63, 64, 65 கேள்விகள்]

*63 தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் நடத்தும் 'ஓம்சக்தி' என்னும் மாதப்பத்திரிகையின் பிப்ரவரி '85 இதழில் ''காலத்தை நிர்ணயிக்கும் விண்மீன்கள்'' என்னும் தலைப்பில் தொழிலதிபர் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதில் ''கி. மு. 4400-ஆம் ஆண்டில் ராமர் பிறந்திருக்கிறார்' என்றும், 'கி. மு. 3200-ஆம் ஆண்டில் கிருஷ்ணன் பிறந்திருக்கிறார்' என்றும், 'கி. மு. 1500-ஆம் ஆண்டில் ஆதிசங்கரர் பிறந்திருக்கிறார்' என்றும், சிவன் தட்சன் மகளைத் திருமணம் செய்து கொண்டது கி. மு. 17000*

*ஆம் ஆண்டில்' என்றும் கணக்கிட்டிருக்கிறார்கள்'' என்று எழுதி யிருக்கிறார். மேலும் ''காலத்தால் ராமனும் கிருஷ்ணனும் கடவுளானது போல் அவர்களுக்கும் பல்லாயிரமாண்டுகளுக்கு முன் சக்ரவர்த்தியாயிருந்த சிவன் நாளடைவில் கடவுளாகி ராமனும் கிருஷ்ணனும் ஆண்டகாலத்தில் அவர்கள் வழிபட்ட கடவுளாக இருந்திருக்கிறார்'' என்றும் எழுதுகிறார் இவற்றுக்கு ஏதே னும் ஆதாரமுண்டா?*

இவற்றுக்கு எந்த ஆதாரமும் கிடையாது. இதிஹாஸ புராணங்களை ஆதாரமாகக் கொண்டால் லக்ஷக்கணக்கான வருஷங்களுக்கு முன் த்ரேதாயுகத்தில் பிறந்தவன் ராமன்; ஐயாயிரம் வருஷத்துக்குமுன் துவாபரயுகத்தில் இருந்தவன் கிருஷ்ணன் என்பது புலனாகும். தொழிலதிபர் தன் கட்டுரை யில் தான் சொல்லுவதற்கு ஆதாரத்தைப் பின்வருமாறு காட்டுகிறார்:- ''சூரியன் பரணி நட்சத்திரத்திலிருந்து புறப்பட்டு மீண்டும் பரணி நட்சத்திரத்துக்கு வந்து சேர்வதற்கு 27000 ஆண்டுகளாகும். ராமாயணத்திலும் மகாபாரதத்திலும் ஆதி சங்கரர் வரலாற்று நூலிலும் அவர்கள் பிறந்தபோது சூரியன் எந்த நட்சத்திரத்தில் எந்த பாதத்தில் இருந்தானென்பது தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதைக் கொண்டே முற் கூறியவாறு பிறந்த காலங்களைக் கணக்கிட்டிருக்கிறார்கள்'' என்று எழுதுகிறார் தொழிலதிபர் இவர் கூறியபடியே வைத்துக் கொண்டாலும் ராமன் கி. மு. 4400ஆம் ஆண்டில் பிறந்தா னெனக் கூறமுடியாது அதற்கு 27000 ஆண்டுகளுக்கு முன் கி. மு. 31400ஆம் ஆண்டிலும் இதே சூரிய நட்சத்திரச் சேர்க்கை யிருக்குமாகையால் அந்த ஆண்டிலும் பிறந்திருக்கலாம். இப் படியே 27000 ஆண்டுகளைக் கூட்டிக்கொண்டே போனால் ராமன் எந்த ஆண்டிலும் பிறந்திருக்கலாம். திரேதாயுகத்தில் அத்தகையதொரு ஆண்டிலும் பிறந்திருக்கலாம். இதிஹாஸ புராணங்களில் ராமனுக்கும், கிருஷ்ணனுக்கும் சொல்லப்பட் டிருக்கும் வருஷங்களை நம்ப மறுக்குமிவர் அதே இதிஹாஸ புராணங்களில் சொல்லப்பட்டிருக்கும் கிரக அமைப்பை எப்படி நம்புகிறாரோ தெரியவில்லை. ஆதிசங்கரரைப் பற்றிய வரலாற்று நூல்கள் சுமார் 500 வருஷங்களுக்குள் எழுதப்பட்டவை. இந்த நூல்களில் சொல்லியிருக்கும் கிரக அமைப்பைக் கொண்டு

இவர் ஆதிசங்கரரின் காலத்தை நிர்ணயிப்பதும் பொருந்தாததே யாகும். [illegible] கிரந்தங்களை ஆராய்ந்தால் தமிழ்நாட்டில் சங்க நூல்களில் ஆதிசங்கரரின் கொள்கைகள் காணப்படவில்லை. சங்க காலத்துக்குப் பிற்பட்ட சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான காப்பியங்களில் மற்ற மதக் கருத்துக்களை எடுத்தெழுதியதுபோல் அத்வைத மதக் கருத்துக்கள் எடுக்கப்படவில்லை. ஆதிசங்கரரின் மதக்கருத்துக்கள் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்குப் பிறகே தமிழ் நூல்களில் காணப்படுகின்றன. இக் காரணங்களைக் கொண்டு [illegible] ஆராய்ச்சியாளர்கள் கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் ஆதிசங்கரர் பிறந்திருக்கலாமெனக் கணக்கிட்டிருக்கின்றனர். [illegible] 1500 [illegible] [illegible] [illegible] வேதத்தில் காணப்படும் 'ருத்திரன்' என்ற தேவனே [illegible] [illegible] தத்துவத்தைத் தரித்த பின்பு 'சிவன்' என்னும் பெயரையும் பெற்றான் என்பது இதிஹாஸ புராணங்களிலிருந்து விளங்குகிறது.

64 'ஓம் சக்தி' பத்திரிகையின் ஆசிரியரான பகீரதன் அதே இதழில் "அகத்தியரா? தொல்காப்பியரா" என்னும் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதில் அவர் "அகத்தியரே தாம் செய்த நூலையிட்டுத் தொல்காப்பியர் என்று பெயர் பெற்றார்" என்று கூறுகிறார் அத்துடன் "முதல் தமிழ்ச் சங்க காலத்தின் போது இருந்த 'குமரிக் கண்டம்' என்னும் தமிழ் நாட்டுப் பகுதி பிற்காலத்தில் கடலில் மூழ்கி விட்டது அப்போது அந் நாட்டை அரசாண்டு வந்த பாண்டிய மன்னன் பெயர் 'சிவன்' என்பது. அவனுக்கு "நிலந்தரு திருவின் நெடியோன்" என்ற பெயருமுண்டு. தன் நாட்டின் பெரும்பகுதி கடலில் மூழ்கிவிட்ட பிறகு மக்களுக்கு வேறு நிலத்தைக் கொடுத்து ஆண்டதால் அவனுக்கு இப்பெயர் ஏற்பட்டது. இவனையே மகாகவி பாரதியார் "ஆதிசிவன்" என்கிறார், ஆதிசிவன் என்றால் இறைவனல்ல. இறைவனுக்குத் தமிழில் 'சிவம்' என்றுதான்பெயர். சிவம் வேறு சிவன் வேறு" என்றும் எழுதியிருக்கிறார் அவர். இவற்றுக்கு ஏதேனும் ஆதாரமுண்டா?

இக்கூற்றுக்கு எந்த ஆதாரமும் கிடையாது. இப்போது கிடைக்கும் கடைச்சங்க நூல்களான பத்துப்பாட்டு எட்டுத் தொகை ஆகியவற்றில் 'சிவன்' என்ற பெயரோ 'சிவம்' என்ற பெயரோ எடுக்கப்படவேயில்லை. பிற்காலத்தில் வந்த நாயன் மார்களும் பெரும்பாலும் இறைவனை 'சிவன்' என்றே குறிப் பிட்டிருக்கிறார்கள். ஒரு சில இடங்களிலே "சிவம்" என்று இறைவனைக் குறிப்பிடுகிறார்கள். 'சிவன்' என்று ஓர் அரசன் குமரிக்கண்டத்தில் இருந்தான் என எந்த நூலிலும் கண்ட தில்லை. "சிலந்தரு திருவின் நெடியோன்" என்னும் சொல் திரு மாலைக் குறிப்பதாகவே அனைவராலும் இசையப் பெற்றிருக்கி றது. "மூவேமுலகமும் உலகினில் மன்பதும் மாயோய்! நின்வயின் பரந்தவை உரைத்தேம் மாயாவாய்மொழி உரைதர" என்று உலகனைத்தையும் படைத்தவனாகவும், "திருவின் கணவ" என்று திருமகள் நாயகனாகவும் பரிபாடலிலும், 'நெடியோன்" என்று பல சங்கநூல்களிலும் திருமாலே கூறப்பட்டிருப்பதிலிருந்து இத்தொடர் திருமாலையே குறிக்கிறது என்று தெளிவாக விளங்கும். கம்பன் முதல் பாரதிவரை உள்ள எல்லா கவி ஞர்களும், ஆழ்வார்களும், பல நாயன்மார்களும் 'சிவன்' என் னும் சொல்லால் மும்மூர்த்திகளில் ஒருவனான உருத்திரனைக் குறித்தார்களேயொழிய அரசன் எவனையும் குறிக்கவில்லை.

*65. ஓம் சக்தி ஜூலை 85 இதழில் "சைவம் என்னும் செல்வம்" என்னும் தலைப்பில் தொழிலதிபர் நா. மகாலிங்கம் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதில் "சைவசமயம் உலகில் மிகப் பழைமையான சமயம்; உலகில் பல பகுதிகளில் சிவலிங்க வழிபாடு இருந்திருக்கிறது. பாரதநாட்டில் சைவசமயத்தின் பரம்பொருளான சிவபெருமான் தனது விருஷப வாகனத்தில் ஏறி டமாரத்தை அடித்துக்கொண்டு உலகமெங்கும் பவனி வந் திருக்கிறார். ஆதிகாலத்தில் இந்நாட்டிலிருந்த ஒரே சமயம் சைவ சமயம். ராமாநுஜர் திருமண் அளித்து வைணவர்க ளாக்கிய மக்கள் எல்லோருமே சைவர்கள்தான்" என்று எழுதி யிருக்கிறார். இது உண்மையா?*

இவை முழுப்பொய்யானவை. 'சங்ககாலத்தில் நம்நாட்டில் இருந்த ஒரே சமயம் விசிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவமதமே

என்பதை "சங்ககாலத் தமிழர் சமயம்" "சாதிமத ஆராய்ச்சி" "ஸ்ரீவைஷ்ணவ மத விஜயம்" முதலான பல நூல்களில் நாம் நிலைநாட்டியிருக்கிறோம். அவற்றை மறுக்கத் துணிவில்லாத பலர் பொய்யைத் திருப்பித் திருப்பிக் கூறி வருகிறார்கள். வெறும் சிவலிங்க வழிபாடு சைவமதமாகி விடாது. சைவ சமயத்துக்கு அடிப்படையானது "சிவன் பரம் பொருள்" என்னும் கொள்கை. இக்கொள்கை சங்க நூல்களில் அடியோடு இல்லை. 'திருமாலே பரம் பொருள்' என்னும் கொள்கையே சங்க நூல்களில் எங்கும் காணப்படுகிறது. சிவன் பரம் பொருள்' என்னும் கொள்கை நாயன்மார் காலத்திலே பாமர மக்களிடம் பரவியது. அப்போதும் வேதமோதிய அந்தணர்களில் பெரும்பாலானவர்கள் அதை ஏற்கவில்லை. அத்வைதமதஸ்தாபகரான ஆதிசங்கரர் தமது பாஷ்யங்களில் 'நாராயணனே முழு முதல்வன்' என்று முழங்கியிருப்பதே இதற்குச்சான்று. இதை "சங்கரரும் வைணவமும்" என்னும் நமது நூலில் நிலைநாட்டியிருக்கிறோம். ராமானுஜர் காலத்தில் வைதிகர்கள் சைவ சமயத்தை ஒரு பெரிய எதிரியாகக் கருதியதேயில்லை. அவர் காலத்தில் சைவம் ஒரு ஸித்தாந்தமாக உருவாகவில்லை. ராமானுஜர் பெரும்பாலும் வாதிட்டதும் அத்வைதிகளோடேயே. திருத்தியதும் யஜ்ஞமூர்த்தி முதலான அத்வைதிகளையே. வடமொழி நூல்களில் அறிவில்லாத தொழிலதிபர் இவற்றையெல்லாம் அறியாமல் தமது மனம் போனபடி கட்டுரைகள் எழுதியிருக்கிறார். "சிவம் என்னும் இறைவன் உருவமற்றவன். உருவமுள்ள சிவன் என்னும் அரசன் வேறு" என்னும் கொள்கையுடைய இவர் "பரம் பொருளான சிவபெருமான் ரிஷப வாகனத்தில் ஏறிக் கொண்டு டமாரத்தை அடித்துக்கொண்டு உலக மெங்கும் பவனி வந்திருக்கிறார்' என்று முன்னுக்குப்பின் முரணாகப் பேசுவதும் குறிக்கொள்ளத்தக்கது.

S. ரங்கதுரை, கவரைப்பாளையம், கோவை ஜில்லா,

*66. சமீபத்தில் துவங்கப்பெற்ற "விஜய பாரதம்" என்ற மாதப்பத்திரிகையில் குரோதன ஆனி இதழில் 'குருஜீ'*

என்பவர்– "'ஹிந்து' என்ற சொல் சமீப காலத்தில் அந்நியர்களால் நமக்கு அளிக்கப்பட்ட பெயர் என்று கூறுவது சரியல்ல. ருக்வேதத்தில் வரும் "ஸப்தஸிந்தவ:" என்ற பெயர் நமக்கும் நம் நாட்டிற்கும் அடைமொழியாகப் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளதைக் காண்கிறோம். அதுவே 'ஹிந்து' என்று மருவி வழங்குகிறது" என்று எழுதியிருக்கிறார். இது சரியா?

"ஸிந்து" என்னும் பதம் கடலையும் அப்பெயர் கொண்ட நதியையும் குறிக்கும். நம்நாட்டையும் நம்மையும் குறிக்காது. மேல் நாட்டவர்கள், ஸிந்து நதி பாயும் தேசத்தில் இருப்பவர்கள் என்னும் காரணத்தால் "ஸிந்துக்கள்" என்று கூற எண்ணி. வாயில் நுழையாமல் 'ஹிந்துக்கள்' என்று நம்மை அழைத்தார்கள். அதனாலேயே 'இந்தியா' என்று நம் நாட்டிற்கும் "இந்து மதம்" என்று நம் மதத்துக்கும் பெயரிட்டார்கள். எந்தப் பழைய நூலிலும் நம்நாட்டிற்கு "இந்தியா" என்ற பெயரோ-நமக்கு 'இந்துக்கள்' என்ற பெயரோ, நமது மதத்துக்கு 'ஹிந்து மதம்' என்ற பெயரோ கிடையாது, இது ஆராய்ச்சியாளர் அனைவரும் இசைந்த விஷயம்.

G. ராஜகோபால் ராமாநுஜதாஸர். காட்டேரி.

67. 2–9–85 அன்று வெளிவந்த தினமணியில் டாக்டர் மு. தெய்வநாயகம் என்பவர் "விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வு" என்ற நூலை எழுதி வெளியிட்டதற்கு ச. கு கணபதி என்பவர் கொடுத்த மதிப்புரையில் "வைணவம். சைவம் முதலான சமயங்கள் உள்ளிட்ட இந்து சமயத்தின் அடிப்படைக் கருத்துக்கள் ஆரியத்துக்கு மாறுபட்ட இன்றைய திராவிட மூலக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டுள்ளன" என்றும், 'வைணவ சைவ சமயங்கள் தோன்றியதற்கு மூலக்கரு திருக்குறளே' என்றும், "மேலும் திருக்குறளில் வான் நீத்தார், நீத்துவித்தான். இயல்புடைய மூவர் முதலான தொடர்களும் திரித்துவத்தை வெளிப்படுத்தும் கருத்துக் களஞ்சியங்கள்' என்றும், "நூலில் தத்தம் கருத்துக்களை வெளியிடுவது பிழை என்று; ஆராய்ச்சிக் கண்ணோட்டம் உள்ளோர்களுக்குப் பயன்

*படும்படியாக அனைவரும் வரவேற்கத்தக்கதே; இதே சமயத்தில் ஆசிரியர் அவர் நூலில் ஆரிய நெறியைக் குறைகூருமலிருந்தால் நல்லதென்றுபடுகிறது'' என்றும் கூறுகிருர். இவ்வாறு மதிப்புரை அளித்திருப்பது சரியா?*

திருக்குறள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று. சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டும், எட்டுத் தொகையும். தொல்காப்பியமும் அதற்கு முற்பட்ட நூல்கள் என்பது ஆராய்ச்சியாளர் அனைவரும் இசைந்தது. அச்சங்க நூல்களில் ''விஷ்ணுவே பரம்பொருள்'' என்னும் வைணவத்தின் அடிப்படைக்கொள்கையும். மற்றும் பல வைணவக் கருத்துக்களும் ஏராளமாகக் காணப்படுகின்றன. மற்ற எந்த மதக்கொள்கைகளும் அப்படிக் காணப்படவில்லை, எட்டுத் தொகை நூல்களில் ஒன்ருன பரிபாடலில் வைணவ சமயத்தின் முக்கியக்கொள்கைகள் அனைத்தையும் எடுத்து, அவை வேதத்தில் கூறப்பட்டுள்ளதாக முழங்கப்படுகிறது. இதனைத்தையும் நாம் ''சங்க காலத் தமிழர் சமயம்'' 'சாதிமத ஆராய்ச்சி,' ''ஸ்ரீவைஷ்ணவ மத விஜயம்'' முதலான பலநூல்களில் நிலைநாட்டியிருக்கிருேம். சங்க நூல்களுக்குப் பிறகு எழுந்த திருக்குறள் கடவுள் வாழ்த்தில் ''ஆதிபகவன், அறவாழி அந்தணன்'' முதலான பதங்களாலும், பொருட்பாலில் திருமால் உலகளந்ததைக் குறிப்பதாலும், காமத்துப்பாலில் 'தாமரைக் கண்ணுன் உலகே தலை சிறந்த உலகம்' என்று காட்டுவதாலும் சங்ககாலத் தமிழர் சமயமான வைணவமே தம் சமயம் என்று வள்ளுவர் வெளியிட்டுள்ளார். வேத இதிஹாஸக் கருத்துக்களைத் திருவள்ளுவர் கையாண்டிருப்பதை எடுத்துக்காட்டி ''வள்ளுவர் உள்ளம்'' என்னும் பெரிய நூல் சுப்ரீம் கோர்ட் வழக்கறிஞரும், மூதறிஞருமான ஸ்ரீ உ. வே. R. கேசவய்யங்கார் ஸ்வாமியால் எழுதப்பட்டு வெளிவந்துள்ளது. இவற்றுக்கு மாருக ஒரு கிறித்துவர் தமது மத வெறியால் ஆரிய திராவிடப் பொய்க் கொள்கையைப் பரப்பி நம் நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு ஊறுவிளைக்க முயல்வதும், தென்னுட்டிலும் வடநாட்டிலும் அனுதிகாலமாகப் பரவியிருந்த மதம்

வைணவமதமே என்பதை மறைக்க முயல்வதும் பெரிய மோசடியாகும். இதை வன்மையாகக் கண்டிக்காமல் வழவழ என்று மதிப்புரை எழுதுவது வருந்தத்தக்கது.

ஸ்ரீநிவாசன், சென்னை-5. V. ஸ்ரீதரன், மதுரை.
K. A. தேவராஜன், சென்னை. திருவாலி கிருஷ்ண ஸ்வாமி சென்னை-24.

*68. சமீபத்தில் திரைப்பட நடிகர் ரஜினிகாந்தின் நூறுவது படமான 'ஸ்ரீராகவேந்திரர்' திரைப்படத்தில் ஸ்ரீராகவேந்திரர் "அரியும் சிவனும் ஒன்று" என்று சிவவிஷ்ணு ஐக்யம் பேசுவதாகவும், இதற்கு ஆதாரமாகத் திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் பாட்டுக்களைக் காட்டுவதாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளது இதை விமர்சிக்க வேண்டுகிறோம்.*

இன்று நம்நாட்டில் மதத்துறையில் உண்மைக்கு மதிப்பில்லை. அரசியல்வாதிகளும், சுயநலவாதிகளும் சேர்ந்து சரித்திரக் கதைகளிலும், திரைப்படங்களிலும், நாடகங்களிலும் சரித்திர உண்மைகளைத் திரித்துக் கூறி வைஷ்ணவத்தை அழிக்கப் பார்ப்பது நாம் அடிக்கடி காணும் நிகழ்ச்சியாகும். இதை ஸுதர்சனர் பதிலின் மூலம் பலமுறை கண்டித்திருக்கிறோம். இருந்தபோதிலும் வைஷ்ணவ விரோதமான பொய்ப் பிரசாரங்கள் தொடர்ந்து நடந்துகொண்டே வருகின்றன. "அரியும் சிவனும் ஒன்று" என்னும் பாமரமொழி வைணவ விரோதிகளால் சமீபகாலத்தில் கற்பிக்கப்பட்டது. ஸ்ரீவைஷ்ணவ மதாசார்யர்களும், மத்வமதத்தைச் சேர்ந்த ஸ்ரீராகவேந்திரர் போன்ற ஆசார்யர்களும் தம் நூல்களில் சிவவிஷ்ணு ஐக்யவாதத்தை வன்மையாகக் கண்டித்து விஷ்ணுபரத்வத்தை நிலை நாட்டியிருக்கிறார்கள். மத்வமத நூல்களில் ஆழ்ந்த புலமை உள்ளவரும் வ்யாஸராய மடத்தின் ஆஸ்தான வித்வானுமான ஸ்ரீ எம். ராமராவ் (18, ரெட்டிராவ் குளத்தெரு, கும்பகோணம்) என்னும் மூதறிஞருக்கும் இதுபற்றி நாம் எழுதிக் கேட்டோம், அவர்—ஸ்ரீராகவேந்திரர் தமது நூல்களில் நூற்றுக்கணக்கான இடங்களில் "ஸ்ரீஹரியே சிவன் முதலான ஜீவர்களான எல்லா

தேவர்களைக்காட்டிலும் உயர்ந்தவரான பரமாத்மா" என்று நிலைநாட்டியிருப்பதாக எழுதியிருக்கிறார். இதை அப்படியே திரைப்படத்தில் காட்டினால் பெரும்பான்மையினராயிருக்கும் சைவர்கள், அத்வைதிகள், சமரசவாதிகள் முதலானோர் அப்படத்தை பகிஷ்கரித்துவிடுவார்கள். படம் படுதோல்வியையடைந்து எடுத்தவர்களுக்கு லக்ஷக்கணக்கான ரூபாய்கள் நஷ்டத்தை விளைவித்துவிடும். ஆகையால் பெரும்பான்மையினரைத் திருப்தி செய்வதற்காக ஸ்ரீராகவேந்திருடைய நூல்களில் காணும் கருத்துக்கு மாறான கருத்துக்கள் படத்தில் நடிகரின் வாயில் திணிக்கப்பட்டிருக்கின்றன. மதத்துறையில் நாட்டில் பெரும்பாலான மக்கள் வைணவ விரோதமாக மூளைச் சலவை செய்யப்பட்டிருக்கும் இன்றுள்ள சூழ்நிலையில் இத்தகைய புரட்டுக்கள் நடந்துகொண்டே தானிருக்கும். ஆழ்வார்களைப் பற்றியும் கம்பன் முதலான மஹாகவிகளைப் பற்றியும் பொய்ப்பிரசாரம் பத்திரிகைகளிலும் திரைப்படங்களிலும் பல வருஷங்களாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. மேல் நாட்டில் சரித்திர புருஷர்களைப் பற்றிய கதைகளிலும் திரைப் படங்களிலும் உண்மைக்கு மதிப்பளிக்கிறார்கள். நம் நாட்டில் உண்மைக்குச் சிறிதும் மதிப்பளிக்காமல் தங்களுடைய பைஸாம்புமா என்பதையே பார்க்கிறார்கள். இது பல வருடங்களாக நம் நாட்டைப் பிடித்தவரும் வியாதி. வைஷ்ணவர்களும் ஸ்ரீராகவேந்திருடைய கொள்கைகளைப் பின்பற்றுபவர்களும் கிளர்ந்தெழுந்து சம்பந்தப்பட்டவர்களுக்குத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தாலொழிய இவை தொடர்ந்து நடந்துகொண்டு தானிருக்கும்.

V. ஸ்ரீதரன், மதுரை (69, 70 கேள்விகள்)

*69. "த்ரீணி பதா விசக்ரமே" முதலான பல இடங்களில் வேதத்தில் விஷ்ணுவின் அவதாரங்கள் முழங்கப்பட்டிருப்பது போல் சிவனுடைய திருவிளையாடல்கள் எங்காவது கூறப்பட்டுள்ளனவா?*

விஷ்ணுவின் அவதாரங்கள் வேதங்களில் மாத்திரமல்லாமல் ஸ்ம்ருதிகள். இதிஹாஸங்கள், சங்க இலக்கியம் போன்ற

பண்டைத் தமிழ் இலக்கியங்கள், பாஸன், காளிதாஸன், பவ பூதி, பட்டநாராயணன், முராரி, மாகன் முதலான பிராசீனர்களான வடமொழிக் கவிஞர்களின் நூல்கள் இவற்றில் எடுக்கப் பட்டுள்ளன. மதுரையில் நடந்ததாகச் சைவர்கள் கூறும் அறுபத்துநாலு திருவிளையாடல்கள் வேதங்கள், ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், முற்கூறிய பண்டைத்தமிழ் வடமொழி இலக்கியங்கள் ஆகிய எதிலுமில்லை. இதிலிருந்தே விஷ்ணுவின் அவதாரங்களுக்குப் போட்டியாக இவை பிற்காலத்தில் கற்பிக்கப் பட்டவை எனத் தெளிவாக விளங்குகிறது.

*70. புருஷகாரமாக முதலில் பிராட்டியைப் பற்றிப் பிறகு பெருமாளைப் பற்றும் நாம் முதலில் பிராட்டியைக் குறிக்கும் ஸ்ரீசூர்ணத்தை இடாமல் எம்பெருமானைக் குறிக்கும் திருமணை இட்டுக்கொள்வது ஏன்?*

இரண்டு திருவடிகளுக்கு நடுவில் ஸ்ரீதேவி எழுந்தருளியிருப்பதைக் குறிப்பது திருமண்காப்பு. பிராட்டி பகவச்சேஷத்வத்தையே இயல்வாகக் கொண்டவள். பெருமாள் இல்லாமல் அவளுக்கு ஸத்தையே கிடையாது. ஆகையால் பெருமானது இரண்டு திருவடிகளை அமைத்த பின்பு பிராட்டியை அமைப்பதே உசிதம்.

A. சுந்தரராஜன், திருக்குறுங்குடி.

*71. 1985 ஏப்ரல் "சப்தகிரியில்" "இராமாநுஜ ஸமாரம்பாம் இராமாநுஜ மத்யமாம் I இராமாநுஜ பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்" II என்பது பெரியோர்கள் பணித்து அநுஸந்தித்துவரும் தனியன்" என்று காணப்படுகிறது. இது யாரால் செய்யப்பட்டது? யாரால் அநுசந்திக்கப்படுகிறது?*

ஸப்தகிரியில் அச்சிடப்பட்டுள்ள ச்லோகம் பிழையானதாகும். வடமொழி ச்லோகங்களில் 'இராமாநுஜ' என்னும் தமிழ்வடிவம் வராது. 'ராமாநுஜ ஸமாரம்பாம் ஸ்ரீராமாநுஜ மத்யமாம் | ஸ்ரீராமாநுஜ பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ||" என்பதே ச்லோகத்தின் சரியான வடிவம். 'தோசார்யனுை

'ராமாநுஜ'ன முதலாகவும், எம்பெருமானாராகிற ஸ்ரீராமாநுஜரை நடுவாகவும், வானமாமலை ஒன்றான ஸ்ரீராமாநுஜ ஜீயரை இறுதியாகவும் கொண்ட குருபரம்பரையை வணங்குகிறேன்'' என்பது இதன் பொருள். இப்பொருளிலிருந்தே இதை அருளியவர் வானமாமலை ஒன்றான ஸ்ரீராமாநுஜ ஜீயரின் சிஷ்யர் என விளங்குகிறது. வர்த்தமான வானமாமலை ஜீயர் ஸ்வாமி இந்த ச்லோகத்தையும் இதன் பொருளையும் அருளிச்செய்யக் கேட்டிருக்கிறேன்.

V. ஸ்ரீதரன் மதுரை 1. மற்றும் பலர் (72, 73 கேள்விகள்)

*72 'கலைமகள்' அக்டோபர். 85 இதழில், ''உண்மைச் சின்னம்'' என்னும் தலைப்பில் காஞ்சிப் பெரியவர் எழுதி வருகையில் மாணிக்க வாசகரை அத்வைதியாகக் காட்டி ஒரு கதை எழுதியிருக்கிறார் ''ஸர்வம் விஷ்ணு மயம்'' என்ற உபநிஷத்துக்களுக்கு மாறாக ''ஸர்வம் சிவமயம்'' என்று எழுதியிருகிறார். நிறங்களை எடுத்துக் கொண்டு அந்த நிறங்களையுடைய தேவதைகளைப்பற்றிப் பல மயக்கங்களைப் பரப்புகிறார். இதற்கு சம்பந்தமில்லாத கீதையையும் மேற்கோள் காட்டுகிறார். ''கறுப்பும் வெளுப்பும் ஒன்று, திருமண்ணும் விபூதியும் உண்மையை விளங்கவைக்கும் சின்னங்களே'' என்று முடிக்கிறார். இவற்றை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

மாணிக்கவாசகரை அத்வைதியாக ஆக்குவது பெருத்த மோசடி. அவர் ''போற்றித் திருவகவல்'' என்னும் தமது நூலில் 'மிண்டிய மாயாவாதமென்னும் சண்டமாருதம் சுழித்து அடித்து ஆர்த்த'' என்று அத்வைத மதத்தைப் புறமதங்களில் ஒன்றாகக் குறிப்பிட்டிருக்கிறார். இவரை அத்வைதி ஆக்குவதற்காக எழுதப்பட்ட கதையும் ஆதாரமற்ற பொய்க் கதையே. நிறங்களைக்கொண்டு இவர் செய்யும் செப்பிடு வித்தைகளுக்கு ஸுதர்சனர் பதிலில் ஏற்கனவே பதில் உரைத்திருக்கிறோம். ஆதிசங்கரருடைய அத்வைதத்தை நிலை நாட்ட முடியாமையால் சமயத்துக்குத் தகுந்தபடி சிவபரத்வ

வாதம், சக்தி பரத்வவாதம், சிவவிஷ்ணு ஸாம்யவாதம், ஐக்ய வாதம், உத்தீர்ணவாதம், முதலான வாதங்களைச் செய்யும் இவர் ஓர் குழப்பவாதியாகவே தோற்றமளிக்கிறார் கீதா பாஷ்யத்திலும், மற்ற பாஷ்யங்களிலும் ஆதிசங்கரர் "நாராயணனே மோக்ஷமளிக்கவல்ல பரம்பொருள். மற்ற தெய்வங்களால் மோக்ஷமளிக்க முடியாது. நாராயணனே ஜகத்காரணன்" என்று தெளிவாக முழங்கியிருக்கும்போது, அதற்கு முரணாகப் பேசுவது ஆசார்யத்ரோஹம் என்பதைக்கூட உணராமல் மனம் போனபடி எழுதுகிறார். அத்வைத மதத்தைக் கைவிட்டு அரசியல் மதத்தைத் தழுவிவிட்டார் என்பது இவருடைய எழுத்துக்களிலிருந்து தெளிவாக விளங்குகிறது.

*73. துக்ளக் ஆசிரியர் 'சோ' அவர்கள் கடந்த சில இதழ்களாக 'புரட்சி கீதை' என்னும் தொடரைத் தொடங்கி அரசியல் வாதிகளின் கருத்துக்களோடு கீதையை ஒப்பிட்டுக் கேலி செய்வதைப்பற்றி உங்கள் கருத்து என்ன?*

கிறிஸ்துவர்களுடைய பைபிளையோ, இஸ்லாமியர்களின் குர்ஆனையோ இப்படிக் கேலிக்கூத்தாக்கியிருந்தால் நாட்டில் இந்நேரம் இரத்த ஆறுகள் ஓடியிருக்கும். வெளிநாட்டான் வைத்த 'இந்துக்கள்', 'இந்துமதம்' என்னும் பெயரை ஏற்றுக் கொண்டு மத உணர்ச்சியற்றுப் போய்விட்ட ஒரு சமூகத்தின் முக்கியமான ஆதார நூலான கீதையை யார் எப்படி கேலி செய்தாலும் இந்நாட்டில் கேட்பாரார்?

R. ராஜகோபாலாச்சாரி காரைக்கால்

*74. 'ஒரு சிவன் கோயில் கர்ப்பக் கிருஹத்தில் இருந்த எலி ஒன்று அங்கேயுள்ள தீபத்தில் நெய்யைச் சாப்பிடச் சென்றது. அப்போது தற்செயலாகத் தீபத்தின் திரி தூண்டப்பட்டு நன்றாகச் சுடர்விட்டுப் பிரகாசித்தது. இந்தப் புண்ணிய பலத்தினால் அந்த எலி அடுத்த பிறவியில் மஹாபலிச்சக்ரவர்த்தியாகப் பிறந்தது' என்று (13—9—85) 'ஹிந்து' பேப்பரில் வந்துள்ளது. இதற்குப் புராண இதிஹாசச் சான்று உள்ளதா? என்பதை விளக்கியருள வேணும்.*

இதற்கு இதிஹாசச் சான்று இல்லை. இதுபோன்ற ஒரு கதை "ஸ்ரீவசனபூஷணம்" 382ஆம் சூத்திர வ்யாக்யானத்தில்

மாமுனிகளால் ஸ்ரீவிஷ்ணுகர்மத்தில் உள்ளதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. 'லலிதா சரிதாதிகளிலே இவ்வர்த்தம் சுருக்க மொழியக் காணலாம்' என்பது அந்த ஸூத்ரம். வ்யாக்யானத்தில் உள்ள அந்தக்கதையின் சுருக்கம் பின்வருமாறு:—"ஒரு விஷ்ணு கோயிலில் ஒரு பெண் எலி விளக்குத்திரியைக் கவர முயன்றபோது ஒரு பூனையின் குரலைக்கேட்டு நடுங்கி உயிர் விடும்தருவாயில் அந்த எலியின் மூக்கால் அந்தத் திரி தூண்டப் பட்டுச் சுடர்விட்டு எரிந்தது. அறியாமல் செய்த அந்தப் புண்ணியத்தின் பலனாக அந்த எலி மறு பிறவியில் ஓர் அழகிய ராஜகுமாரியாகப் பிறந்து, ஒரு பெரிய அரசனுக்கு இனிய மனைவியாயிற்று' என்பது அக்கதைச் சுருக்கம். 'ஹிந்து'வில் உள்ள கதை வேறு ஏதேனும் புராணத்திலுள்ளதா என்பதை ஆராய வேண்டும்.

K. ஸ்ரீநிவாஸன் திருச்சி-17

*75. மடாதிபதிகளும், மதத்தலைவர்களும் போப் 2-வது ஜான்பாலை 5-2-86 அன்று சென்னையில் சந்திப்பதுபற்றி சின்மயானந்தர் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' முதலான பத்திரிகைகளில் விடுத்திருந்த அறிக்கையை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

குன்றக்குடி அடிகள், தருமபுர ஆதீனத்தின் பிரதிநிதியான சாமிநாத தம்பிரான் முதலிய பலர் இந்து மதத்தின் சார்பிலும், மற்றும் பலர் மற்ற மதங்களின் சார்பிலும்போப்பைச் சந்தித்தார்கள் என்றும், சாமிநாத தம்பிரான் போப்பின் நெற்றியில் விபூதியிட்டார் என்றும் பத்திரிகையில் செய்திகள் வந்துள்ளன. சின்மயானந்தர்—ஒரு மதத்தலைவரான போப் இந்நாட்டின் மதச் சார்பற்ற அரசால் அழைக்கப்பட்டு வந்திருப்பது சரியல்ல என்றும், மதத் தலைவர்களால் அழைக்கப் பட்டு வந்திருந்தால் நாம் சென்று போப்பை ஆசீர்வதிக்கலாம் என்றும், அப்படியில்லாதபோது நாம் போப்பைக் காணச் செல்வது நமது மதிப்பைக் குறைக்கும் என்றும் பொருள்படப் பத்திரிகைகளில் அறிக்கைவிட்டிருப்பது நியாயமே. சைவ

ஆதீனங்கள் இவ்வறிக்கையைப் பொருட்படுத்தவில்லை என்று தெரிகிறது. ஒரு மாதத்துக்கு முன்பே வைஷ்ணவமதத் தலைவர் என்ற முறையில் போப்பைச் சந்திக்கவரும்படி நமக்கு அழைப்பு வந்தது. நாம் மறுத்துவிட்டோம். சைவமதத் தலைவர் போப்பின் நெற்றியில் விபூதியை இடுவதற்காகச் சென்றார் போலும்! விபூதியிட்டதால் போப் சைவராகிவிட்டார் என்று கொள்ளமுடியாது. இந்துமதத் தலைவர்கள் போப்பைச் சந்தித்தபின்பும் போப்பைச் சேர்ந்தவர்கள் பணம் முதலானவற்றைக் கொடுத்து இங்கு ஏராளமான பாமர இந்துக்களை மதம்மாற்றிவருவது நிற்கப்போவதில்லை. கிறிஸ்துவர்களுக்கு அவர்கள் மதத்தில் இருக்கும் உறுதியைப் பார்த்தபின்பும் இந்துமதத் தலைவர்களும் பத்திரிகைகளும் ஸர்வமத ஸமாஸம் பேசிக்கொண்டு இந்துக்களை மதம்மாற்றுவதற்குத் துணைபுரிந்து வருகிறார்கள் என்பதையே போப்பின வருகை நமக்கு எடுத்துக்காட்டுகிறது. பெரிய வைஷ்ணவ மதத்தலைவர் எவரும் போப்பைக் காணச் செல்லாதது நமக்கு ஆறுதல் அளிக்கிறது.

K. A. தேவராஜன், சென்னை-1. (76, 77 கேள்விகள்)

*76. 24-1-86 தேதியிட்ட 'ஹிந்து' பத்திரிகையில் வந்துள்ள செய்தி பின்வருமாறு:-ப்ரயாக்கில் (அலகாபாத்) வருகிற மார்ச் 13ந்தேதி காமகோடி பீடாதிபதி (ஜயேந்திர ஸரஸ்வதி) ஆதிசங்கர ஸ்தூபி (130 அடி உயரம்) ஒன்றைத்திறந்து வைக்கிறார். அந்த ஸ்தூபியில் 3 நிலைகள் உள்ளனவாம்; முதல் நிலைக்கு 'சக்திபீடம்' என்றும் இரண்டாம் நிலைக்கு 'விஷ்ணு பீடம்' என்றும் மூன்றும் நிலைக்கு 'சிவபீடம்' என்றும் பெயராம். முதல் நிலையில் பார்வதியும், இரண்டாம் நிலையில் திருவேங்கடமுடையானும் மூன்றுவது நிலையில் ஜோதிர் லிங்கமும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனவாம். இத்தகைய அமைப்பு எந்த ஆகம ரீதியில் கட்டப்பட்டது என்று தெரியவில்லை. ஆதி சங்கரர் வரலாறும் ஸ்ரீ ராமாயணமும் சித்திரரூபமாக ஸ்தூபியில் நான்கு பக்கங்களிலும் வரையப்படுகிறதாம். விஷ்ணுதுவேஷிகளாய் பஸ்மதாரிகளான இவர்கள் ஸ்ரீ ராமாயணத்தை ஒழுங்காக வரையவிடமாட்டார்கள் ராமபிரான் சிவலிங்கத்தை ராமேச்வரத்*

*தில் பூஜித்ததாக ஒரு படம் வரையப்பட்டுள்ளதாகக் கேள்விப்படு கிறேன். இதை ஆக்ஷேபித்துக் காமகோடி பீடாதிபதி அக்ரமச் செயல்களைச் செய்யாதபடி தடுக்கப்பட வேண்டும் இதுபற்றி தேவரீருடைய கருத்தை வெளியிடுமாறு ப்ரார்த்திக்கிறேன்.*

காமகோடி பீடாதிபதிகள் கடந்த முப்பது ஆண்டுக ளாகவே விஷ்ணு வைஷ்ணவ த்வேஷ ப்ரசாரத்தை மிகுதி யாகச் செய்து வருகிறார்கள் என்பது அனைவரும் அறிந்ததே. அதில் இச்செயலும் ஒன்று. இந்தக் கட்டடத்துக்கு எந்த ஆகம ஆதாரமும் கிடையாது. அத்வைதிகளுக்கும் ஆகமங் களுக்கும் எந்த சம்பந்தமும் கிடையாதாகையால் அவர்களுக்கு ஆகமாதாரம் தேவையில்லை. அவர் இஷ்டப்படி கட்டடம் கட்டுவதை நம்மால் தடுக்கவும் முடியாது. "நீ அவர்பால் சென்றணுகக் கூசித்திரி" என்று மாமுனிகள் அருளியதற்கு இலக்காக இருக்கும் இவர்களோடு எந்தத்தொடர்பும் கொள் ளாமலிருப்பதே ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் செய்யக்கூடியது.

*77. ஆனந்த இராமாயணத்தில் சிவனே இராமபிரானாக வும் பார்வதியே சீதாப்பிராட்டியாகவும் அவதாரம் எடுத்ததாகக் கூறப்பட்டுள்ளதாம். சிவனையும் இராமனையும் வேறாக நினைப்ப வர்கள் கொடிய நரகத்தில் வீழ்வார்கள்—என்று அந்த ராமா யண ப்ரசாரம் செய்யும் ராமநாத தீக்ஷிதர் என்பவரின் அபத் தப்பஞ்சாங்கத்தை 'ஹிந்து' பத்திரிகை 16ம் பக்கத்தில் 24—1—86ல் வெளியிட்டுள்ளது. இந்த மாதிரி ராமாயணம் ஒன்றுண்டா? அது யாரால் இயற்றப்பட்டது? இதைக் கண்டிக்க வேண்டுகிறேன்.*

ஆனந்தராமாயணம் என்பது ஒரு சில நூற்றாண்டுகளுக்கு முன் வைஷ்ணவ விரோதிகளால் கற்பிக்கப்பட்டது. இது போல் 'அற்புத ராமாயணம்' என்று ஒன்றும் உண்டு. இந்த அபத்த ராமாயணங்களைச் சீண்டுவார் ஒருவருமில்லையே என்று வருந்தி 'ஹிந்து' பத்திரிகை ஆனந்த ராமாயணத்தை விளம் பரப்படுத்த முன்வந்துள்ளது போலும்! பத்திரிகை விளம்பரங் களாலும் இந்த ராமாயணத்தைப் பிரபலப்படுத்த முடியாது

என்பதை, ஐயோ பாவம், இவர்கள் உணரவில்லை! ராமனைப் பற்றியும், ராமாயணம் பற்றியும் பல்லாயிரம் வருடங்களாக நம் நாட்டு மக்கள் பெருமதிப்புக் கொண்டிருக்கிறார்களாகையாலே, நூற்றுக்கணக்கான கவிகள் ராமனையே காவியத் தலைவனாகக்கொண்டு பாடினார்கள். பொய்க்கதைகள் புனைபவர்களும் இக்காரணத்தாலேயே போலி ராமாயணங்களைப் பாடுகிறார்கள். அறிவாளிகள் போலிக்கும் உண்மைக்கும் உள்ள வேற்றுமையை எளிதில் உணர்வார்கள்.

R, ராஜகோபாலாச்சாரி, காரைக்கால் (78, 79 கேள்விகள்)

*78. "இராவணனைக் கயிலை மலையின் கீழே சிக்கித்தவித்துத் திணறும்படி, சிவபெருமான் தன் கால் நகத்தினால் அழுத்தி அடக்கினார். ஆனால் அந்த ராவணனை ஜயிக்க ராமனுக்கோ 70 வெள்ளம் வானர சேனை தேவைப்பட்டது படாதபாடு பட்டுப் போரிட வேண்டியதாயிருந்தது" என்று கிருபானந்த வாரியார் 4—3—86 அன்று திருமலைராயன்பட்டினத்தில் பேசியிருப்பதாகக் கேள்வியுற்றேன், இதற்கு சரியான பதில் தர வேண்டுகிறேன்.*

எம்பெருமான் பரமபதத்தில் இருந்து கொண்டே ஸங்கல்பத்தாலேயே புழுப் பூச்சிகளை நசுக்குவதுபோல் ராவணன் முதலானோரை அழித்துவிடமுடியும். ஆனால் அப்படிச் செய்தால் பிரமனும் சிவனும் ராவணனுக்குக் கொடுத்த வரங்கள் பழுதாகிவிடும். இராவணனைக் கொழுக்க வைத்த இவர்களுடைய வரங்கள் பழுதாகாமலிருப்பதற்காகவே எம்பெருமான் மனித உருவத்தில் ராமபிரானாக அவதரித்து, வானரர் முதலானோராகப் பிறந்த தேவர்களைத் துணையாகக் கொண்டு படாதபாடுபட்டு ராவணனை அழிக்க வேண்டியதாயிற்று. இதையெல்லாம் அறியாதவரல்லர் வாரியார். கதை கேட்கும் விஷ்ணு த்வேஷிகளைத் திருப்தி செய்வதற்காகச் சந்தர்ப்பவாதம் செய்கிறார் என்றே கொள்ளவேண்டும்.

*79 இங்கே பெருமாள்கோயில் ப்ரஹ்மோத்ஸவம் ஏழாம் திருநாளன்று இரவு 'ருத்ரதர்ஶனம்'' என்று பெருமாளை விபூதி அணிந்த கோலத்தோடு தியாகராஜர்வாக அலங்காரம்*

செய்கிறார்கள் இந்தப் பகுதியிலுள்ள இரண்டு மூன்று பெருமாள் கோயில்களிலும் இப்படியே நடக்கிறது. வைகானஸ ஆகமத்தில் இப்படி விசேஷம் சொல்லியிருக்கிறதா என்பதைத் தெரிவித்தருள வேணும்.

ஆகமத்தில் இப்படியிருப்பதாகத் தெரியவில்லை. சைவர்களைத் திருப்தி செய்வதற்காக இந்த வழக்கம் இடைக்காலத்தில் ஏற்பட்டதாக இருக்கலாம். இருந்த போதிலும் எம்பெருமான் அப்படித் திருக்கோலம் கொள்வதை நாம் ஒருவாறு நிர்வஹிக்கலாம். *''ஸ ப்ரஹ்மா ஸ சிவ:''* *''ப்ரஹ்மா நாராயண; சிவஶ்ச நாராயண:''* என்று வேதங்களிலும், பல இதிஹாஸ புராணங்களிலும், *'' அயனரனென்ன உலகழித்தமைத்துளனே''* *''சிவனாய் அயனாய்''* முதலான அருளிச் செயல்களிலும் சிவனுக்கும் அந்தர்யாமியாயிருப்பவன் திருமாலே என்று முழங்கியிருப்பதை உறுதிப்படுத்துவதற்காக எம்பெருமான் சிவ வேஷம் போட்டுக்கொள்கிறான் என்று கொள்ளலாம்.

M S. பாலசுப்பிரமணியன், சென்னை-91.

*80 பெரும்பாலும் சிவன் கோயில்களிலேயே காணப்படும் நவக்கிரஹங்களின் தனி சந்நிதிகள் கூடலழகர்கோயில் (மதுரை) போன்ற வைணவகோயில்களிலும் காணப்படுகின்றனவே; பாஞ்சராத்ர வைகானஸ ஆகமங்களிலும் சைவ ஆகமங்களிலும் சிவ விஷ்ணு ஆலயங்களில் நவக்ரகங்களைப் பிரதிஷ்டை செய்யப் போதுமான ஆதாரங்களும், விளக்கங்களும் கூறப்பட்டுள்ளனவா? அன்றி நவக்கிரகப் பிரதிஷ்டை பிற்காலச்சேர்க்கையா?*

சிவன் கோயில்களில் பரிவார தெய்வங்களாக நவக்ரஹங்கள் முதலான பலதெய்வங்கள் காணப்படுவதாகக் கேள்விப்படுகின்றோம். ஆகையால் சைவாகமங்களில் நவக்ரஹப்ரதிஷ்டைக்கு இடமிருக்கக்கூடும். வைஷ்ணவாகமங்களில் அதற்கு இடமிருப்பதாகத் தெரியவில்லை. இடைக்காலத்தில் ஏற்பட்டதென்றே கூறுகிறார்கள்.

R. நரசிம்மன் திருமுல்லைவாயில்

*81. 1986 ஜனவரி 10, 11, 12 தேதிகளில் அம்பத்தூர் Sankara Study' Group (சங்கரா ஸ்டடி க்ரூப்) வருடாந்திர விழா நடந்தது. 12-1-86 மாலையில் நடந்த கூட்டத்தில் வரகூர் கல்யாணசுந்தர சாஸ்திரிகள் "சங்கரர் ஷண்மத ஸ்தாபகர்", என்பது பற்றி மனம்போனபடி பேசினார். ஸ்ரீராமாநுஜரையும் அவரது கீதாபாஷ்யத்தையும் வைஷ்ணவர்களையும் வாய்க்கு வந்தபடி வைதார். இதுபற்றி விமர்சிக்க வேண்டுகிறேன்.*

"சங்கரரும் வைஷ்ணவமும்" என்னும் நமது நூலில் சங்கரர் ஒன்றோடொன்று முரண்பட்ட ஆறு மதங்களை ஸ்தாபித்திருக்கவே முடியாது என்பதை அசைக்க முடியாதபடி நிலைநாட்டி, இந்த சாஸ்திரியைக் குறித்துப் பலகேள்விகள் கேட்டிருக்கிறோம். இவர் வசவு புராணத்தில் இறங்குகிறாரேயொழிய இன்றளவும் அக்கேள்விகளுக்குப் பதில் எழுதவில்லை. சங்கரர் தம் கீதா பாஷ்யத்திலேயே பல இடங்களிலும் விஷ்ணு பரத்வத்தையும் மற்ற தெய்வங்களுடைய தாழ்வையும் நிலைநாட்டியிருப்பது இவருடைய ஷண்மதஸ்தாபனக் கொள்கையைத் தகர்க்கிறது. சங்கர பாஷ்யங்களுக்கு முரணாக அவர் பெயரில் வழங்கும் இதர தேவதாஸ்தோத்ரங்கள் சங்கரர் காலத்திற்குப் பல நூற்றாண்டுகள் வரையில் எவராலும் கையாளப்படாததிலிருந்தே அவை பிற்காலத்தில் தோன்றிய சங்கரமடாதிபதிகளால் இயற்றப்பட்டவையே என விளங்குகிறது. இவ்வுண்மைகளுக்கெல்லாம் பதில் சொல்ல முடியாமையால் வரகூர் சாஸ்திரிக்கு வசவு புராணத்தில் இறங்குவது தவிர வேறுவழி இல்லை.

S. கோவிந்தராஜன். சென்னை.94

*82. இன்று (29-3-86) காலையில் சென்னை தொலைக்காட்சி (டி. வி) நிலையத்தில் ஒளிபரப்பப்பட்ட 'விப்ரநாராயணு' தெலுங்கு காட்டிய நாடகத்தை விமர்சிக்கவேண்டுகிறேன்.*

"தொண்டரடிப் பொடியாழ்வார்" என்ற ப்ரஸித்தி பெற்ற ஆழ்வாரைப் பற்றிய நாடகத்தைத் தமிழ்நாட்டின் தலை

நகரிலுள்ள தொலைக்காட்சி நிலையத்தார் தமிழில் ஒளி பரப்பாமல், தெலுங்கில் ஒளிபரப்பியதால் அதில் உள்ள பல தவறுகள் பொதுமக்களுக்குப்புரிய வாய்ப்பில்லாமல் போயிற்று. தமிழில் ஆழ்வார் பாடிய ஐம்பதுக்கு மேற்பட்ட பாடல்களில் ஒன்றுகூட அவர் வாய்மூலமாக நாட்டிய நாடகத்தில் வரவில்லை. தெலுங்கிலேயே பேசிப் பாடினார் ஆழ்வார் வேடமிட்டவர். வெளிப்படையாகத் தெரிந்த சில தவறுகள்:— (1) பூர்வசிகை (முன்குடுமி) உள்ள ஆழ்வாருக்குப் பின்குடுமி வைக்கப்பட்டிருந்தது. (2) ப்ரஹ்மசாரியான ஆழ்வார் க்ருஹஸ்தர்களைப்போல (வேட்டாடை வைத்து) வேஷ்டி கட்டிக்கொண்டிருந்தார். (3) உடலைப் போர்த்துக்கொண்டு பெரிய பெருமாள் முன் தெலுங்குப் பத்யங்களைப் பாடினார். (4) "மற்றுமோர் தெய்வ முண்டே மதியிலா மானிடங்காள்!" என்று பாடிய ஆழ்வாரைப்பற்றிய நாடகம் மற்ற தெய்வங்களைப்பற்றிய துதியுடன் தொடங்கியது. மொத்தத்தில் ஆழ்வார்வேடமிட்டவர் ஆழ்வார்போல் காட்சியளிக்கவில்லை. சேவிக் கூத்தாகவே முடிந்தது. தமிழ் நாட்டிலுள்ள வைணவ அறிஞர் எவரையாவது துணையாகக் கொண்டிருந்தால் இப்படி நிகழ்ந்திராது.

K. P. ரகுராமநரசிம்ஹன், ஸ்ரீரங்கம்.

*83 ஜூன் 86 ஞானபூமியில் புலவர் கீரன் "கைகேயி மனம் மாறியது எப்படி" என்னும் கட்டுரையில் "விசுவாமித்ர முனிவர் தனது யாகத்துக்குத் துணை செய்ய இராமனையும் இலட்சுமணனையும் அழைத்தபோது தசரதன் தனது அருமைக் குமாரர்களை அனுப்பத் தயங்கினான். அதைக் கண்டு விசுவாமித்ரர் கடும் கோபம் அடைந்தபோது கைகேயிதான் முன் வந்து சமாதானம் கூறுகிறாள். 'நான் தங்களுடன் தேரோட்டி வருகிறேன். தங்கள் ஆணைப்படி நான் வில்லேந்திப் பாதுகாப்பாகத் துணைவருகிறேன். என் குழந்தை இராமனை விட்டுவிடுங்கள்' என்று தேரோட்டுவதிலும் வில்வித்தையிலும் தேர்ந்த கைகேயி சொன்னதாக வால்மீகி குறிப்பிடுகிறார்" என்று எழுதியிருக்கிறார். இது சரியா?*

வால்மீகி இராமாயணத்தில் இவ்வண்ணம் இல்லை. புலவர் கீரன் கம்பராமாயணத்தில் வல்லவர். வால்மீகி ராமாயணம் பற்றி எழுதாமலிருப்பது அவருக்கு நல்லது.

*முரளி, அந்தநல்லூர்*

*84. கடந்த சில மாதங்களாக 'ஞானச்சேரியில் மோன வேள்வி' என்னும் தலைப்பில் விஷ்ணு வைஷ்ணவ தூஷணங்களையும், வேத வைதிக நிந்தனைகளையும் "தாய்" பத்திரிகை வெளியிடுகிறது அவற்றைக் கண்டித்து தேவரீர் வைகாசி ஆனி ஸுதர்சனம் தலையங்கங்களிலும், ஸுதர்சனத்தில் வைகாசி மாதம் வெளிவந்த 10-வது சதகம் முதற் கேள்வியின் ஸுதர்சனர் பதிலிலும் எழுதியிருக்கிறீர். வைகாசி மாதத் தலையங்கம் கீதாசார்யனிலும் வெளியிடப்பட்டது. இதை எழுதுபவர் யார் என்பதை "தாய்" பத்திரிகை இன்றுவரை வெளியிடவில்லை. ஆயினும் ஜூன் '86 ஞானபூமியில் இவர் எழுதிய "வானம்பாடி மனமும் சங்கீத இறைவனும்" என்னும் தலைப்புள்ள கட்டுரையின் தொடக்கத்தில் "ஞான மகான் நெரூர் சதாசிவ பிரம்மேந்திரான் சுவாமிகளின் மறுபிறவியாகப் பூஜிக்கப்படுபவர் ஞானச்சேரிமகான். சென்னை லஸ் முருடீஸ் கபே லாட்ஜின் மாடியில் இயங்கும் 'ஞானச்சேரி' அமைப்பில் செவ்வாய், புதன், வெள்ளி, ஞாயிறு ஆகிய நாட்களில் ராஜயோகப் பயிற்சி, அருளுரை ஆகியவை வழங்கி, நாடிவரும் பக்தர்களுக்குச் சிறப்பு தரிசனமும் அளித்து வருகிறார் இம்மகான்." என்று எழுதியுள்ள முன்னுரையில் 'ஞானச்சேரி மகான்' என்று இவருக்குப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இந்தச்சேரிமகான் சதாசிவப் பிரம்மேந்திரரின் அவதாரமாயிருக்க இடமுண்டா என்பதை இவருடைய கட்டுரைகளிலிருந்து நிர்ணயித்துக் கூற வேண்டுகிறேன்.*

'சதாசிவப்பிரம்மேந்திரர்' என்பவர் சென்ற நூற்றாண்டில் இருந்த ஓர் அத்வைத ஸந்யாஸி. அவதூதராக (நிர்வாணமாக)த் தமிழ்நாடெங்கும் திரிந்து பல கீர்த்தனைகளை வடமொழியில் பாடியவர். இராமனையும் கண்ணனையும் பற்றி அவர் பாடியுள்ள கீர்த்தனங்கள் கல்நெஞ்சையும் கரைய வைக்கக்கூடியவை. அவருடைய விஷ்ணு பக்திக்கும், வடமொழிப் புலமைக்கும் சான்றாகத் திகழ்பவை. இந்தச் சேரிமகானோ திருமாலின்

அவதாரமான ஹயக்ரீவரைக் கண்டவுடன் ஒருவனுக்குக் காமவேகம் மிகுந்தது என்றும், கழுதை குதிரைகளுக்குக் காமவேகம் அதிகம் என்றும் விஷ்ணுத்வேஷத்தைக் கக்கியிருக்கிறார் 'சதம்' என்பதற்கு 'ஆயிரம்' என்றும் 'சுக்ல' என்பதற்கு 'சிவந்த' என்றும் பொருள் எழுதித் தமது வடமொழி அறிவின்மையை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார். சதாசிவப் பிரம்மேந்திரர் வேத நெறியைப் போற்றிய அந்தணர். இவர் வேதத்தையே கலப்படவேதம் என்றும் வேதத்தை ஓதும் அந்தணரைக் கலப்பட அந்தணர் என்றும் எழுதுகிறார், நம்மை யாண்ட ஆங்கிலேயர் பிரித்தாளும் தந்திரத்தாலே கற்பித்த ஆரிய திராவிடக் கற்பனை முதலான அபத்தக்களஞ்சியங்களைக் கிளிப்பிள்ளைபோலே திருப்பிச் சொல்லுகிறார், ஆகையால் சதாசிவப்பிரம்மேந்திரருக்கும் இவருக்கும் எந்தத் தொடர்பும் இருக்க நியாயமில்லை. இவருடைய பூர்வாசிரமத்தையும் விசாரித்தறிந்து, இவர் இப்போது செய்யும் செயல்களையும் நேரில் சென்று அறிந்து சென்னை அன்பர்கள் தெரிவித்தால் ஸுதர்சனத்திலும் ஸ்ரீதாசார்யனிலும் அவற்றை வெளியிட்டு இவரது முகத்திரையைக் கிழிக்கலாம்.

*V- ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்,*

*85. மே '86 கலைமகளில் "நம்முடைய மதத்தில் சந்நியாசிகள் தாம் ஸாக்ஷாத் தெய்வத்தையே நேராக வழிபடலாம். மற்றவர்கள் தேவதைகளைப் பிரீதி பண்ணி தெய்வங்களுடைய அனுக்கிரகத்தினால் நன்மை அடையவேண்டும். தேவதைகளைப் பிரீதி பண்ணத்தான் பல ஹோமங்கள் யக்ஞங்கள் எல்லாம் பண்ணுகிறோம். ஒரு பெரிய ராஜா இருந்தால் எல்லாரும் ராஜாவிடமே நேரில் போக முடியுமா? அந்த ராஜாவின் பரிபாலனத்திற்கு உட்பட்ட உத்தியோகஸ்தர்களிடம் குடிமக்கள் நெருங்கித் தங்களுக்கு வேண்டிய அனுகூலங்களைப் பெறுகிறார்கள். உத்தியோகஸ்தர் தாங்களாகச் செய்வதில்லை; அரசன் உத்தரவுப்படி ஜனங்களுக்கு அநுகூலம் செய்கிறார்கள். அரசன் தானே செய்கிறான் என்று அரசனிடத்தில் குடிமக்கள் நேராகப் போகமுடியாது" என்று காமகோடிப் பெரிய பீடாதிபதி எழுதியிருக்கிறார்; இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

"சந்நியாசிகள்தான் ஸாக்ஷாத் தெய்வத்தையே நேராக வழிபடலாம். மற்றவர்கள் தேவதைகளைப் பிரீதி பண்ணி தெய்வங்களுடைய அனுக்கிரகத்தினால் நன்மையடைய வேண்டும்" என்று எழுதியிருப்பது கீதை முதலான எல்லா சாஸ்திரங்களுக்கும், ஆதிசங்கரரின் பாஷ்யங்களுக்கும் முரண் பட்டது. எந்த ஆசிரமமாயிருந்தாலும், எந்த வர்ணமாயிருந் தாலும் பரமாத்மாவான தன்னையே நேரே சரணடையலாம் என்றும், அப்படித்தன்னை அடைபவர்களுக்கே மோக்ஷம் கிடைக்கும் என்றும், மற்ற தெய்வங்களை உபாஸிப்பது அறிவு குறைந்தவர்கள் செய்யக்கூடியது என்றும், அவர்களுக்கு மோக்ஷம் கிடைக்காதென்றும், அல்பாஸ்திர பலன்களே கிடைக்குமென்றும் கீதை முதலானவற்றில் எம்பெருமானே பல இடங்களில் கூறியிருக்கிறான். பராசரர் வியாஸர் முதலான மஹர்ஷிகளும் அப்படியே வலியுறுத்துகிறார்கள். ஆதிசங்கரரும் தமது கீதாபாஷ்யத்தில் அப்படியே முழங்குகிறார். ஆகையால் பீடாதிபதி கூறியிருப்பதின் முதற்பகுதி இவ்வனைத்துக்கும் முரண்பட்டது. 'ஒரு பெரிய ராஜா' என்று தொடங்கும் பிற் பகுதியில் கூறியிருப்பது சரியானது. அந்தப் பெரிய ராஜா வாயிருப்பவன் தானே என்று கீதையில் கண்ணன் பல இடங் களில் கூறுகிறான். ஆதிசங்கரரும் தமது பாஷ்யங்களில் நாராயணனாகிற வாஸுதேவனே எல்லா தெய்வங்களுக்கும் மேலான பரமாத்மா என்று பல இடங்களில் முழங்கியிருக்கிறார். இவற்றால் பெரிய பீடாதிபதியும் அவரது சிஷ்யர்களும் சந்தர்ப் பத்துக்குத்தக்கபடி செய்துவரும் த்ரிமூர்த்திஸாம்யவாதம், ஐக்யவாதம், உத்தீர்ணவாதம் சிவபரத்வவாதம், சக்திபரத்வ வாதம், ஷண்மதஸ்தாபனவாதம் முதலான அசட்டு வாதங்கள் அடிபட்டுப் போகின்றன.

*K. A. பார்த்தசாரதி, சென்னை - 44*

*86 ஜூன் '86 'கலைமகள்' இதழில் 'உயர்வு தாழ்வு எது?' என்னும் தலைப்பில் காமகோடிப் பெரியவர் "சைவம் வைஷ்ணவம் ஆகிய இரண்டும் ஒன்றுதான்' என்று குழப்புகிறார். இதுபற்றி 'கலைமகள்' ஆசிரியருக்குக் கடிதம் எழுதியும் பயனில்லை. பெரிய வரின் நோக்கத்தை விளக்கவேண்டுகிறேன்.*

நீங்கள் உங்கள் கடிதத்தில் உணர்த்தியிருப்பதுபோல் "ஒரு குல ஸ்த்ரீக்குத் தன்னுடைய புருஷனும் அண்டை வீட்டு ஆண்பிள்ளைகளும் ஒன்றுதான்" என்று சொல்லுவதை ஒத்தது– "சைவர்களும் வைஷ்ணவர்களும் சிவனையும் விஷ்ணுவையும் ஒன்றாக நினைக்கவேண்டும். சைவமும் வைஷ்ணவமும் ஒன்று தான்" என்று குழப்புவது. இதை எத்தனை தடவை எடுத்துச் சொன்னாலும் பீடாதிபதியும் அவரை நடமாடும் தெய்வமாக்கி விட்ட பத்திரிகைகளும் தாங்களும் குழம்பி, பொதுமக்களையும் குழப்பும் இந்தத் தடுமாற்றத்திலிருந்து விடுபடப் போவதில்லை. இப்படிக் குழப்புவதில் பீடாதிபதிக்கு உள்நோக்கம் ஒன்று உண்டு. தனக்குரிய மதமான அத்வைதத்தைப் பற்றிப் பேசுவதை விடுத்துப் பெரும்பாலும் சைவசாக்த சமரச வாதங்களை முன்னுக்குப்பின் முரணாகப் பேசுவதிலிருந்தே இந்த உண்மை நோக்கத்தை உணர்ந்துகொள்ளலாம்.

இதைச் சற்று விளக்குகிறோம். "உலகம் பொய். ப்ரஹ்மமும் ஜீவனும் ஒன்றே. ப்ரஹ்மத்தை மாயை மறைப்பதால் உலகத் தோற்றம் உண்டாகிறது" என்னும் அத்வைத மதம் இன்று நாட்டில் செல்லாக் காசாகிவிட்டது. பீடாதிபதிகள் உள்பட எவரும் இம்மதத்தைக் கடைப்பிடிப்பதில்லை. அதனால் அத்வைத மதத்தைக் கடுமையாகக் கண்டித்துச் செல்லாக்காசாக்கிவிட்ட வைஷ்ணவர்களின் மதத்தை அழிக்க வேண்டும் என்னும் உள்நோக்கத்தோடேயே பீடாதிபதி முன்னுக்குப்பின் முரணாகவும் பாமர ரஞ்சகமாகவும் சிவபரத்வ வாதம், சக்தி பரத்வ வாதம், தேவதாஸாம்ய வாதம், ஐக்கிய வாதம் முதலானவற்றைப் பேசி நூல்களாக வெளியிடுவதோடல்லாமல் அவ்வப்போது தமக்கு வசப்பட்ட 'கல்கி' 'கலைமகள்' முதலான பொதுஜனப் பத்திரிகைகளில் அவற்றை வெளியிடச் செய்து மக்களைக் குழப்புகிறார். 'ஹரேகிருஷ்ண' இயக்கப்பாணியில் வைஷ்ணவர்கள் அனைவரும் ஒருமுகமாகப் பிரசாரம் செய்தால்தான் இந்த துஷ்ப்ரசாரத்தை முறியடிக்க முடியும். மிகவும் வேறுபட்ட கடவுட் கொள்கைகளையும் வேதாந்தக் கொள்கைகளையும் உடைய பல மதங்களைக் கடைப் பிடிக்கும் மக்களுக்கு "இந்துக்கள்" என்று பெயர் வைத்து

அவர்களுடைய மதங்கள் அனைத்துக்கும் மொத்தமாக "இந்து மதம்" என்று வெளிநாட்டான் பெயர் சூட்டியதைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு சைவத்தையும் வைஷ்ணவத்தைம் அழிப்பதற்கு அரும்பாடுபடுகிறார் பெரியபீடாதிபதி. "நமக்குள் சைவர்கள் வைஷ்ணவர்கள் என்று வேறாகச் சொல்லிக்கொண்டிருந்தாலும் வெள்ளைக்காரன் நமக்கு "ஹிந்துக்கள்" என்று பெயர் வைத்தானோ நாம் வாழ்ந்தோம். அவன் வைத்த பெயர் நம்மைக் காப்பாற்றுகிறது' என்று பீடாதிபதி இக்கட்டுரையில் எழுதியிருப்பது மேலே விளக்கப் பட்ட அவரது உள்நோக்கத்தைத் தெளிவாகக் காட்டுகிறது. "உலகம் பொய், ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று' என்று கூறும் அத்வைதமதமும், "உலகம் உண்மை ஜீவர்கள் ப்ரஹ்மத்துக்கு தாஸபூதர்கள் (அடியார்கள்)" என்று கூறும் த்வைத விசிஷ்டாத்வைத மதங்களும், சிவனைப் பரம்பொருளாகக் கொண்டு தத்வஹித புருஷார்த்தங்களை ஒருவிதமாக வர்ணிக்கும் சைவமதமும், விஷ்ணுவைப் பரம்பொருளாகக்கொண்டு தத்வஹித புருஷார்த்தங்களை வேறுவிதமாக வர்ணிக்கும் த்வைத விசிஷ்டாத்வைத மதங்களும் ஒன்றாக முடியாது என்பது சிறிது அறிவு உள்ளவர்களுக்கும் விளங்கும். வைஷ்ணவர்கள் விழிப்புடன் இருந்து "எல்லா மதங்களும் ஒன்று" என்று கூறும் இந்த மாயாவாதிகளின் மாயவாதத்தைத் தகர்த்தெறிந்தாலொழிய அடுத்த நூற்றாண்டில் சைவ வைஷ்ணவ மதங்கள் அழிக்கப்பட்டுவிடும்.

*K A. தேவராஜன் சென்னை-1.*

*87. ஜூலை 8-ம் தேதி "கலைமகள்" இதழில் வேதமாகிய தரு என்னும் தலைப்புள்ள கட்டுரையில் "வேதம்தான் பரமாத்ம ஸ்வரூபம்" என்று தொடங்கி, பல குழப்ப வாதங்களைச் செய்திருக்கிறார் காமகோடிப் பெரியவர். அந்தக் குழப்பங்களை நீக்கி உண்மையைத் தெளிவுபடுத்த வேண்டுகிறேன்.*

"வேதம்தான் பரமாத்ம ஸ்வரூபம் என்று எல்லா ஆசாரியர்களும் சொல்லியிருக்கிறார்கள்" என்று எழுதுகிறார் பீடாதிபதி. இது தன்னுடைய அத்வைத மதத்தையே அறியாமல் பேசுவதாகும். அத்வைத மதத்தில் வேதமும் பொய்யானதாகும்; நிர்விசேஷசின்மாத்ரமொன்றே உண்மையான பரம்பொருளாக

ஒப்புக்கொள்ளப்படுகிறது. மற்ற ஆசார்யர்களும் வேதத்தைப் பரம்பொருளைத் தெரிவிக்கும் பிரமாணமாக ஒப்புக்கொள்கிறார்களே தவிர பரம்பொருளாகக் கூறவில்லை. ப்ருஹதாரண்யக உபநிஷத்தும் வேதத்தைப் பரம்பொருளின் மூச்சுக் காற்றாகவே பேசிற்று. பரமாத்மா பிரமனை முதலில் படைத்து அவனுக்கு வேதங்களை உபதேசித்ததாக மற்றொரு உபநிஷத் வாக்யம் கூறுகிறது. 'வேதத்தை ரக்ஷிக்கவேண்டும்' என்று பலகால் வலியுறுத்துகிறார் பீடாதிபதி. ஆனால் அதன் உண்மையான பொருளைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று ஓரிடத்தில் கூடச் சொல்லவில்லை. வேதாத்யயனம் செய்பவர்களில் மிகத் தாழ்ந்தவர்கள் யார்? என்று கணக்கிடும்

''கீ₃தீ, ஶீக்₄ரீ, ஶிர:கம்பீ, ததா₂ லிகி₂தபாட₂க: |
அநர்த்த₂ஜ்ஞோ அல்பகண்ட₂ஶ்ச ஷடே₂தே
பாட₂காத₄மா: ||"

என்னும் சுலோகத்தை எடுத்து ''கீதி என்றால் பாடுகிறவன். சீக்ரி - வேகமாக மெயில் மாதிரி சொல்லுகிறவன். சிர: கம்பி - தலையை ஆட்டுகிறவன், அப்படியே லிகித பாடக: - எழுதிக் கொண்டு படிக்கிறவன்; அநர்த்தஜ்ஞ:-அல்பகண்ட₂:-தொண்டையில்லாதவன் ஆகிய ஆறு பேரும்'' என்று அதற்குப் பொருள் கூறியிருக்கிறார். ஆறு பேரில் ஒன்றான 'அநர்த்தஜ்ஞன்' என்பதற்குப் பொருள் கூறவில்லை கூறினால் 'அர்த்தத்தைப் புரிந்து கொள்ளாமல் வேதத்தை அத்யயனம் செய்பவனும் மிகத் தாழ்ந்தவன்' என்னும் உண்மை வெளியாகிவிடும்.

''ஸ்தா₂ணுரயம் பா₄ரவஹ: கில அதீ₄த்ய வேத₃ம்
ந விஜாநாதி யோர்த்த₂ம் |
யோர்த்த₂ஜ்ஞ இத் ஸகலம் ப₄த்₃ரமஶ்நுதே ஸ நாகமேதி
ஜ்ஞாநவிதூ₄தபாப்மா ||

[வேதத்தை அத்யயனம் செய்தும் எவனொருவன் அதன் பொருளை அறியவில்லையோ, அவன சுமைதாங்கியாகிறானன்றோ. எவன் பொருளை அறிகிறானோ அவன் ஸகல மங்களங்களையடைகிறான். ஜ்ஞானத்தால் பாபம் நீங்கப் பெற்றவனாய் அவன் ஸ்வர்க்கத்தை அடைகிறான் என்று வேதத்தை அத்யயனம் செய்வதைக் காட்டிலும் பொருளை அறிந்து கொள்வதே முக்கியம் என்று பிரமாணங்கள் பேசின. '' நாலு

வேதத்தையும் அத்யயனம் செய்தவனுனாலும் அதன் பொருளான வாஸுதேவனை அறிந்து கொள்ளாதவன் வேதமாகிற பாரத்தைச் சுமக்கும் பிராம்மணக் கழுதையே" என்று மற்றொரு பிரமாணம் பேசிற்று. வேதத்தை மூலமாகக் கொண்ட அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம், சைவம், வைஷ்ணவம் என்னும் மதங்கள் எல்லாம் ஒன்று என்று குழப்ப வேண்டும் என்னும் நினைவோடு எழுதுகிறாராகையாலே அர்த்தஜ்ஞானத்தை வலியுறுத்தாமல் விட்டுவிடுகிறார். உண்மையில் அர்த்த ஜ்ஞானத்தை வலியுறுத்தினால் மூற்கூறியமதங்களில் எது வேதத்துக்கு உண்மைப் பொருளை விளக்குகிறதோ அதுவே உண்மையான வைதிக மதம் என்று தெரிந்திடும். 'மதங்கள் ஒன்று' என்னும் வாதம் அடிபட்டுப்போய்விடும். அதனாலேயே அர்த்தஞானத்தின் முக்கியத்தைச் சொல்லாமல் மூலத்தையே வலியுறுத்திச் சொல்லுகிறார். "வேதத்தை மறந்துவிட்டு, திருவாய்மொழி தேவாரம் படித்துப் பிரயோஜனமில்லை" என்றும் எழுதுகிறார். ஒன்றுக்கொன்று முரணாயிருக்கும் திருவாய்மொழி தேவாரம் ஆகியவற்றில் எது வேதத்தின் உண்மைப் பொருளைச் சொல்லுகிறது என்று ஆராய்ந்து அதைக் கைக்கொள்வதாலேயே வேதத்தை அத்யயனம் செய்தது பயனுடையதாகும் என்னும் உண்மையை மறைத்து விடுகிறார். வைஷ்ணவர்கள் இந்தப் பொய்ச் சமரச வாதத்தில் மயங்காமல் "வேதத்துக்கு முரணாகப் பேசும் தேவாரம் முதலானவற்றால் சொல்லப்படும் சைவமதமும் அத்வைதம் முதலான மதங்களும் உண்மையான வைதிக மதங்கள் அல்ல. விசிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவ மதமே உண்மையான வைதிக மதம்" என்று உணர்ந்து அதில் உறுதியுடன் இருக்கவேண்டும்.

*R*. ராஜகோபாலாச்சாரி, பேராசிரியர், காரைக்கால் மற்றும் பலர்.

*88. 24—8—86 'கல்கி'யில் "அமைச்சர் தரிசித்த அழியாத திருமேனி" என்னும் தலைப்பில் முதல் பக்கத்தில் வெளிவந்துள்ள செய்தியில் "ஸ்ரீரங்கம் உடையவர் சன்னிதியில் மூலவர் திருமேனி பாதுகாக்கப்பட்ட ஸ்ரீராமாநுஜரின் உடலே" என்று மத்திய அமைச்சர் திரு V. V. சுவாமிநாதன் கூறியிருக்கிறார். அதை ஸ்ரீரங்கவாஸியும் சென்னை மாம்பலம் அஹோபில*

*மடம் ஓரியண்டல் பள்ளியின் நிர்வாகியுமான வாசுதேவா சாரியார் ஆமோதித்திருக்கிறார். இது உண்மையா?*

இது அப்பட்டமான கட்டுக்கதை. ஸ்ரீரங்கம் உடையவர் மூலவர் திருமேனிக்குப் பச்சைக் கர்ப்பூரம் குங்குமப்பூ சாத்தும் அந்தரங்க கைங்கர்யத்தைப் பலமுறை செய்திருக்கும் ஸ்ரீ உ. வே. சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசாரியார் ஸ்வாமி இப்போது திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருக்கிறார். அவர் "உடையவர் திருமேனி சுதையினாலானதே" என்று அடியேனிடம் கூறியுள்ளார். இப்போதும் அவரிடம் விசாரிக்கலாம். 'கல்கி'யில் வெளிவந்துள்ள செய்தியில் பல பிழைகள் உள்ளன. "ஸ்ரீராமாநுஜர் உடல் அறுநூறாண்டுகளாக ஸ்ரீரங்கம் கோவிலில் பாதுகாக்கப்பட்டு வருகிறது" என்று எழுதியிருப்பது அடியோடு பொருந்தாது. ஸ்ரீராமாநுஜர் பரமபதமடைந்து இப்போது சுமார் 850 வருஷங்கள் ஆகின்றன என்பது அனைவரும் அறிந்தது. எம்பெருமான் ஞானியின் திருமேனியை மிகவும் விரும்புவான் என்பது ப்ரஸித்தமானது. அந்த முறையில் ஸ்ரீரங்கநாதன் உடையவருடைய திருமேனியைத் தன்னுடைய வஸந்தோத்ஸவ மண்டபமாயிருந்த இடத்தில் திருப்பள்ளிப் படுத்தும்படி (அடக்கம் செய்யும்படி) கட்டளையிட, அப்படியே செய்தார்கள் என்றே வரலாற்று நூல்கள் அனைத்திலும் காணப்படுகிறது, 'அவருடைய திருமேனி உட்கார வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகிறது' என்று எந்த நூலிலுமில்லை அவர் திருப்பள்ளிப்படுத்தப்பட்ட இடத்தில் இருக்கையால் இங்குள்ள ராமாநுஜர் திருமேனி "தானான திருமேனி" என்று அழைக்கப்படுகிறது. "வருஷத்துக்கு ஒரு தடவை ஸ்ரீரங்கநாதர் (உத்ஸவர்) ராமாநுஜரைக் கண்டுவிட்டு சன்னிதிக்குப் போகுமுன் கால்களைக் கழுவிக்கொண்டுதான் செல்வார். இறந்தவர் வீட்டுக்குச் சென்று வந்ததால்" என்று அமைச்சர் கூறியிருப்பதும், "ராமாநுஜர் சன்னிதிக்கு நாம் போனால் மறுபடி கால் அலம்பிக்கொண்டுதான் ரங்கநாதரைத் தரிசிக்கச் செல்ல வேண்டும்" என்று வாசுதேவாசாரியர் கூறியிருப்பதும் தவறான செய்திகள். வருஷத்தில் நடக்கும் மூன்று ப்ரஹ்மோத்ஸவங்களிலும் கடைசி நாளன்று ஸ்ரீரங்கநாதர் உடையவர்

சன்னிதி முன்மண்டபத்துக்குச் செல்கிறார். உடையவர் (உத்ஸவர்) அங்கு வந்து அவரை எதிர்கொண்டழைத்து இளநீர் ஸமர்ப்பித்து உபசரிக்கிறார். அதற்குப் பின் ஸ்ரீரங்கநாதர் சன்னிதிக்கு எழுந்தருளும்போது ஆர்யபடாள் வாசலில் ஸ்ரீபாதம் தாங்குவார் திருவடிகளில் தீர்த்தம் சேர்த்த பிறகு உள்ளே எழுந்தருளுகிறார். இந்த வழக்கம் உத்ஸவத்தின் பொருட்டு கர்ப்பகிருகத்திலிருந்து 10 நாட்களாக வெளியே எழுந்தருளியிருந்த பெருமாள் உத்ஸவம் முடிந்து கர்ப்ப கிருகத்துக்கு எழுந்தருளுவதற்கு முன் நடக்கிறது. "வெளி யில் சுற்றிவிட்டு வந்தவர்கள் வீட்டுக்குள் நுழையும்போது காலலம்பிக்கொண்டே வீட்டினுள் செல்ல வேண்டும்." என்ற சாஸ்திர விதியையொட்டி இது நடக்கிறது. எம்பெருமா னுரைப்போன்ற ஞானியைத் திருப்பள்ளிப்படுத்தியிருக்கும் இடம் மிகப் புனிதமானது. அங்கு செல்வதால் யாருக்கும் எந்தத் தீட்டும் கிடையாது. 'நம்மாழ்வாரைத் திருமேனியோடு பரமபதத்திற்கே அழைத்துச் செல்லவேண்டும்' என்று விரும் பிய எம்பெருமான், உடையவரைத் தன் கோயிலுக்குள் திருப்பள்ளிப்படுத்தச் சொல்லிக் கட்டளையிட்ட எம்பெரு மான், உடையவர் சன்னிதிக்கு முன் மண்டபத்திற்கு வந்த தற்காக ஒருநாளும் திருவடி விளக்கி (காலலம்பி)க் கொள்ள மாட்டான், ஆசாரமுடைய எந்தப் பெரியோரும் இதுவரை உடையவர் சன்னிதிக்குப் போய்விட்டுப் பெருமாள் சன்னிதிக்குப் போகுமுன் காலலம்பிக்கொண்டு சென்றதாக நாம் கேள்விப்பட்டதேயில்லை. (ஸங்க்ராந்தியன்றைக்கும், கனுவன் றைக்கும் நம்பெருமாள் உடையவர் ஸன்னிதிக்கு எழுந்தருளி விட்டுத் திரும்பும்போது கால் அலம்புவதில்லை, இதுவே இக் கருத்தை உறுதிப்படுத்த போதுமானது- ஸ்ரீதாசார்யன் ஆசிரியர்.)

*S- முரளி அந்தணல்லூர்*

***89.** 'கல்கி' பத்திரிகை இப்போது தில்லை கோவிந்தராஜப்பெரு மாள் திருமேனியைப் பெயர்த்துக் கடலிலிட்ட குலோத்துங்க சோழனின் மதவெறிச்செயலை நியாயப்படுத்துவதற்காகப் பொய்க் கற்பனைகளைப் புகுத்தி ராமாநுஜரைத் தலைவராக*

கொண்ட வைஷ்ணவர்களைக் கொலைகாரர்களாகச் சித்திரித்து கோவி. மணிசேகரன் எழுதிவரும் "மாண்புமிகு முதலமைச்சர்" என்னும் நாவலை வெளியிட்டுவருகிறது. இதை விமர்சிக்க வேண்டுகிறேன்

ஆழ்வார்கள் நாயன்மார்கள் காலத்தில் 'சிற்றம்பலம்' (சிறியகோயில்) என்னும் பெயரில் நடராஜனுக்கு ஒரு சிறு கோயிலும், 'திருச்சித்திர கூடம்" என்னும் பெயரில் சிறு கோயிலுக்கருகிலேயே கோவிந்தராஜனுக்குப் பெரிய கோவிலும் இருந்திருக்கிறது என்று அவர்கள் பாடல்களிலிருந்தே விளங்குகிறது. "சிவனுக்கும் பார்வதிக்கும் நடனமாடுவதில் போட்டி ஏற்பட, திருமாலை நீதிபதியாயிருக்க இருவரும் வேண்டிக்கொண்டு நடனமாட, திருமால் சிவனுக்குச் சாதகமாகத் தீர்ப்புவழங்கி அடங்காப்பிடாரியான தில்லை மாகாளியை ஊருக்கு வெளியே விலங்கிட்டுச் சிறையிலடைத்தார்" என்று வழங்கிவரும் தல புராணமும், கோவிந்தராஜன் உயர்ந்த ஸ்தானத்தில் படுத்துக்கொண்டிருப்பதும், அவரது கால்மாட்டில் தாழ்ந்த இடத்தில் இருந்துகொண்டு சிவன் நடனமாடுவதும், அக்காலத்தில் விஷ்ணு கோவிலான திருச்சித்திர கூடமே முக்கியமான பெரிய கோவிலாகவும், சிவன் கோவிலான 'சிற்றம்பலம்' சிறிய கோவிலாகவும் இருந்திருக்கின்றன என்று காட்டுகின்றன. ஸ்ரீராமானுஜர் காலத்தில் சிவனுக்கு நிலைபெற்றிருந்த இச்சிறுமை கண்டு வயிறெரிந்த (இரண்டாம்) குலோத்துங்கசோழன் 'சிவன் கோயிலை விரிவுபடுத்துகிறேன்' என்று சொல்லிக்கொண்டு தில்லை கோவிந்தராஜன் மூலவர் திருமேனியைப் பெயர்த்துக் கடலில் எறிந்து விட்டான் என்னும் உண்மை அவனுடைய அவைப்புலவரான ஒட்டக்கூத்தரால் தக்கயாகப்பரணியில் 777 வது தாழிசையில்

"முன்றில் கிடந்த கருங்கடல் போய்
முன்னைக்கடல் புகப்பின்னைத் தில்லை
மன்றிற்கு இடம் கண்ட கொண்டல்"

என்று பாடப்பட்டுள்ளது. இரண்டாம் குலோத்துங்கன் செய்த இச்செயல் தென்னாட்டின் மீது படையெடுத்து

வந்த இஸ்லாமிய தளபதிகள் கூடச் செய்யத் துணியாத படுபாதகச் செயலாகும். ஒட்டக்கூத்தரே பாடிவிட்டதால் இச்செயலை அவன் செய்யவில்லை என்று சொல்ல இடமில்லை. அதனால் பொய்க் கற்பனைகளைப் புகுத்தி ஸ்ரீ ராமானுஜரைத் தலைவராகக்கொண்ட வைஷ்ணவர்களைக் கொலைகாரர்களாக அபாண்டமாகச் சித்திரித்துக் குலோத் துங்கன் செய்த படுபாதகச்செயலை நியாயப்படுத்த முயல கின்றார் கோவி. மணிசேகரன். ஸ்ரீ ராமானுஜரால் தூண்டப் பட்டு வைணவன் ஒருவன் 'ஜோதி' என்னும் நாட்டியக்காரி மீது குறுவாளை எறிந்ததாகவும், அது குறிதவறி சேக்கிழார் மீது பாய்ந்துவிட்டதாகவும், கற்பனைக் கதையைக் கொண்டு செல்கிறார் இந்நாவலாசிரியர். தில்லை கோவிந்தராஜப் பெருமா ளுடைய மூலவர் திருமேனியைப் பெயர்த்துக் கடலிலெறிந் ததை ஸ்ரீ ராமானுஜர் மறைந்திருந்து பார்த்தார் என்றும், அவருடைய இதயம் நெருப்பாக எரிகிறது என்றும், உடனே வைணவர்களைக்கொண்டு கடலிலிருந்து சிலையை மீட்டு வண்டி யொன்றில் ஏற்றித் திருப்பதிக்கு அனுப்பினார் என்றும் மணி சேகரனின் கற்பனைக்குதிரை தறிகெட்டுப்பாய்கிறது. வரலாற்று நாவல் எழுதுகிறவர்கள் வரலாற்று நூல்களுக்கு முரண் படாத வகையிலேயே கற்பனையைக்கொண்டு செல்ல வேண் டும். திரு. மணிசேகரன் தம்முடைய நாவலுக்கு ஆதாரமாக 'சோழர்' வரலாறு, ஒட்டக்கூத்தர் எழுதியவை, கோயிலொழுகு, திவ்யசூரி சரிதம், இராமானுஜர் கதை" ஆகியவற்றைக் காட்டு கிறார். இவற்றில் 'சோழர் வரலாறு' என்பது சதாசிவ பண் டாரத்தார் என்னும் சைவ ஆராய்ச்சியாளர் சமீப காலத்தில் எழுதியது. 'அதில் அவர் முடிவுகட்டியுள்ளவை அனைத்தும் வரலாற்றுச் சான்றுகளுக்குப் பொருந்தாதவை' என்று மூதறிஞர் ஸ்ரீ பி. ஸ்ரீ. ஆசார்யா அவர்கள் தமது "ஸ்ரீ ராமானுஜர்' என்னும் நூலில் (சாகித்ய அகாடெமி பரிசுபெற்றது) விரிவாக நிலைநாட்டி யுள்ளார்.

கோயிலொழுகு, குருபரம்பரை நூல்கள் ஆகியவற்றிலும், திவ்யசூரி சரிதத்திலும், சைவர் எழுதிய சோழர் வரலாற்றிலும், சைவரான ஒட்டக்கூத்தர் எழுதியவற்றிலும் ஸ்ரீ ராமானுஜர்

வைஷ்ணவர்களைக் கலகம் செய்யத் தூண்டினார் என்பதற்கு ஒரு சான்றும் கிடையாது. கடலில் எறியப்பட்ட கோவிந்த ராஜரின் மூலமூர்த்தியை நீந்தி எடுத்துவரச் செய்து ஸ்ரீ ராமானுஜர் திருப்பதிக்கு அனுப்பிப் பிரதிஷ்டை செய்வித்தார் என்பதற்கும் இந்நூல்களில் எந்தச் சான்றுமில்லை. ஆறுயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தில் "திருச்சித்திரகூடம் அழிந்தது. அங்கிருந்த உத்ஸவர் திருப்பதிக்கு எழுந்தருளினார் என்று சிலர் வந்து ராமானுஜரிடம் சொல்ல, அவர் மிக வருந்தி, திருப்பதிக்குச் சென்று மூலத்திருமேனியையும் அமைத்து கோவிந்த ராஜர் உத்ஸவரை மூலவரோடு அங்கு ப்ரதிஷ்டை செய்வித்தார்'' என்றே காணப்படுகிறது. கடலில் எறியப்பட்ட மூலவர் திருமேனி அலைகளால் கரையில் சேர்க்கப்பட்டு, அதைச் சில மீனவர்கள் பாதுகாத்து வைத்திருந்தார்கள் என்றும், சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு குலோத்துங்கன் செய்த அக்கிரமத்துக்குப் பரிகாரம் செய்யவேண்டும் என்று நல்லெண்ணங்கொண்ட ஓர் அரசன் உத்ஸவத் திருமேனியைப் புதிதாக அமைத்து. முன் இருந்த இடத்திலேயே மூலவரையும் உத்ஸவரையும் பிரதிஷ்டை செய்வித்தான் என்றும் ஆதார பூர்வமான செய்தி சிதம்பரத்தில் இன்றும் வழங்குகிறது. உயர்ந்த ஸ்தானத்தில் கோவிந்தராஜர் சயனித்திருப்பதையும், அவர் கால்மாட்டில் தாழ்ந்த இடத்தில் நடராஜர் நடனம் புரிவதையும் நாம் இன்றும் காண்கிறோம். இந்த வரலாற்று உண்மைகளுக்கெல்லாம் மாறாகப் பலபல பொய்க் கற்பனைகளைப் புகுத்தி, நாவல் எழுதிவருகிறார் திரு கோவி. மணிசேகரன். இதை வரலாற்று நாவல் என்பதைவிட வரலாற்றுக் கொலை நாவல் என்பது பொருந்தும்.

*S. ரகுவீரன், M,A. MEd மதுராந்தகம்,*

*90. நான் பல ஊர்களில் ஸ்ரீவைஷ்ணவப் பிரசாரம் இலவசமாகச் செய்துவருகிறேன், சில சமயங்களில் இதர தேவதா ஸன்னிதிகளில் உபந்யாஸம் செய்ய வேண்டியுள்ளது. விஷயம் ஸ்ரீவைணவம் பற்றியே; இப்படிச் செய்வதைத்*

தவிர்ப்பதா அல்லது தொடர்வதா? அப்படிச் சென்றால் ஸன்னிதி ப்ரதக்ஷிணம் பண்ண வேண்டிய நிர்ப்பந்தம் சில சமயங்களில் ஏற்படுகிறதே. விஷ்ணு அந்தர்யாமி என விஷ்ணுவை எண்ணிப் பிரதக்ஷிணம் செய்வதா? சில திவ்ய தேசங்களில் (காஞ்சீ சித்ரகூடம்—சிதம்பரம்) நமது ஆர்ச்சைக் குரிய மூர்த்திகள் இதர தேவதாலயங்களில் உள்ளனவே! அங்கு எப்படி நடந்து கொள்வது? பாரத உபந்யாஸங்களில் 'பாசுபதாஸ்த்ரம் பெறல்' போன்ற இடங்களில் இதர தேவதை களைத் துதி செய்யவேண்டியுள்ளதே! இதற்காக பாரத உபந்யாஸத்தை விடுவதா? அடியேனைத் தெளிவாக்கப் பிரார்த்திக்கிறேன்.

சித்ர கூடத்தில் (சிதம்பரத்தில்) ஸ்ரீகோவிந்தராஜனை ஸேவிக்கச் செல்லும்போது மற்ற பல தெய்வங்களின் கோயில் களைப் பிரதக்ஷிணம் செய்யவும் நேருகிறது. இது எம்பெரு மானுடைய சேவைக்குச் செல்லும்போது செய்வதாகையாலே தோஷமில்லை. 'அந்த தேவதைகளைப் பிரதக்ஷிணம் செய்ய வேண்டும்' என்ற எண்ணத்துடன் பிரதக்ஷிண நமஸ்காரங் களைச் செய்வதே தோஷமாகும். அது போலவே ஸ்ரீவைஷ்ணவ பிரசாரம் செய்யும்போது மற்ற தெய்வங்களை நமஸ்காரம் செய்யாமலும் அவற்றின் ப்ரஸாதங்களை வாங்கிக் கொள்ளா மலும் ஸ்ரீவைஷ்ணவ ப்ரசாரம் செய்வதில் தோஷமில்லை. காஞ்சி யில் கள்வனும், நிலாத்திங்கள் துண்டத்தானும் வைஷ்ணவே தரர்களால் ஆராதனம் செய்யப்படுவதால் அங்கு நாம் சேவிக் கச் செல்வதில்லை. இதிஹாஸபுராணங்களில் வரும் இதர தேவ தாஸ்துதிகளைச் சொல்லும்போது, நாராயண பரத்வத்துக்கு விரோதமில்லாமல் அந்த தேவதைக்கு உள்ள பெருமைகளை விளக்கிச் சொல்வதில் தவறில்லை.

V. செந்தாமரைக்கண்ணன். ஸ்ரீரங்கம்.

**91.** செப்டம்பர் மாத (1986) 'ஸப்தகிரி' இதழில், பக்கம் 22ல் 'ஓம் விகடாய, நம'," என்னும் தலைப்பில் கீழ்க்கண்டவாறு எழுதப்பட்டுள்ளது, "காஞ்சீபுரத்தில் ஸ்ரீஏகாம்பரேஸ்வரர்

ஆலயத்தில் 'விகடசக்கர விநாயகர்' என்ற பெயருடன் ஒரு விநாயகர் இருக்கிறார். தக்ஷன் யாகம் செய்தான். பரமேஸ்வரனை யாகத்துக்கு அழைக்கவில்லை. பார்வதி அவமதிப்புக்குள்ளானாள். சிவன் வெகுண்டு யாகத்தை அழிக்கும்படி வீரபத்திரரைப் பணித்தார். வீரபத்திரரும் தக்ஷனின் யாகத்தை அழிக்கச் சென்றாராம். தக்ஷனுக்கு உடந்தையாயிருந்த மகாவிஷ்ணு தன் சக்கரத்தை வீரபத்திரர் மீது பிரயோகித்தார். அதனை வீரபத்திரர் தரித்திருந்த கபாலம் கவ்விக் கொண்டதாம். அதனைத் திரும்பிப் பெற விஷ்வக்ஸேனர் வீரபத்திரர் முன் விகடக் கூத்தாடினார். அனைவரும் சிரித்தனர். கபாலமும் சிரித்தது. திருமாலின சக்கரம் வெளியே வந்தது. விஷ்வக்சேனர் அதனை எடுத்துக் கொள்வதற்கு முன்பே விநாயகர் எடுத்து அதனை மறைத்துக் கொண்டாராம். இப்போது விநாயகரை மகிழ்விக்க அவர்முன் விகடக் கூத்தாடி சக்கரத்தைத் திரும்பப் பெற்றாராம் விகடக் கூத்தைக் கண்டு மகிழ்ந்து சக்கரத்தினைத் திருப்பி அளித்ததால் 'விகடச் சக்கர விநாயகர்' என்று பெயர் வந்ததாம். இது உண்மையா?

நம் நாட்டில் ஒரு சில நூற்றாண்டுகளுக்குள் 'ஸ்தல புராணக்கதைகள்' என்னும் பெயரில் இது போன்ற ப்ரம்மாண்டப் புளுகுக்கதைகள் ஆயிரக்கணக்கில் கற்பிக்கப் பட்டுள்ளன. வேதங்களிலும் அதை விளக்க வந்த மனு முதலான ஸ்ம்ருதிகளிலும், ஸ்ரீராமாயணம், மகாபாரதம் என்னும் இதிஹாஸங்களிலும், ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலான ஸாத்விக புராணங்களிலும் பறைசாற்றப்பட்டுள்ள விஷ்ணு பரத்வத்துக்கு முரணானவையாகையாலே இக்கட்டுக்கதைகள் காக்காகூடப் பொருட்படுத்தவை, அடிமுட்டாள்கள் தவிர வேறெவரும் இக்கதைகளை நம்ப மாட்டார்கள். எவ்வளவோ முறை எடுத்துக்கூறியும் இத்தகைய கதைகளை வெளியிட்டுக் கொண்டேயிருக்கிறது ஸப்தகிரி. இத்தகைய கட்டுரைகளைக் கண்டித்து ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆயிரக்கணக்கான கடிதங்களை ஸப்தகிரிக்கு எழுதினால் விமோசனம் பிறக்கலாம்.

*P. மோகன்ராஜ் கொழிஞ்சம்பரா, கேரளா.*

*92. ஜோசியம் ஜாதகம் பார்ப்பது ஆகியவைகளின் சம்பந்தமாக வைஷ்ணவர்கள் கொள்ள வேண்டிய நடைமுறை என்ன? புத்திரதோஷம் இருப்பதாகவும், இதற்குப் பிற கடவுளரின் கோயில்களுக்குச் சென்று பரிகாரம் தோஷநிவ்ருத்தி செய்துவரவேணும் என்றும் கூறுகிறார்கள். "மறந்தும் புறந்தொழாமை' உடைய வைஷ்ணவர்கள் இச்சமயத்தில் செய்ய வேண்டுவது என்ன?*

ஜாதகம் பார்த்து விவாகம் செய்வது சாஸ்திர அடிப்படையில் நீண்டகாலமாகச் செய்யப்பட்டுவரும் நடைமுறை. மிக அவசியமான சந்தர்ப்பங்களில் தவிர மற்ற சமயங்களில் சோதிடம் பார்ப்பதை விலக்கியிருப்பது நல்லது. உத்தம ஸ்ரீவைஷ்ணவர்கள் எந்த தோஷத்துக்கும் பரிகாரம் செய்ய முற்படமாட்டார்கள். அவ்வளவு உறுதி இல்லாதவர்கள் "மறந்தும் புறந்தொழாமை"க்கு விரோதமில்லாமல் பகவத் ஸந்நிதிகளில் அர்ச்சனை முதலானவற்றைச் செய்வதன் மூலமோ, பகவத்பரமான இதிஹாஸபுராணங்களிலுள்ள துதிகளையும் அருளிச்செயல் பகுதிகளையும் பாராயணம் செய்தோ பரிகாரம் தேடலாம்.

லாடபுரம் ஸ்ரீநிவாஸன், புதுடெல்லி.

*93. ஸ்ரீராமாநுஜ வேதாந்த கேந்த்ரத்தாரால் வெளியிடப்பட்ட ஆண்டாள் பற்றிய நூலொன்றில் பின்வரும் கருத்துக்கள் காணப்படுகின்றன. அவற்றை ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏற்பார்களா? என விளக்க வேண்டுகிறேன். அக்கருத்துக்களாவன :—(பக்கம் 101 ஆங்கிலம்) பரம்பரையாக என்ன காரணம் சொல்லிவந்தாலும் இப்போது காணப்படும் நாலாயிரதிவ்யப்ரபந்தம் ஆழ்வார்களுடைய வார்த்தைகளைத் தெரிவிப்பது என்றும், முழுமையானது என்றும் கொள்ளமுடியாது. பிற்கால முயற்சி என்றே கொள்ளவேண்டும். (பக்கம் 163 ஆங்கிலம்) கோகுலத்தில் கோபிகளைப்போலே காத்யாயனீ வ்ரதத்தை அனுஷ்டிக்கத் தீர்மானித்தாள் ஆண்டாள். (பக்கம் 13 தமிழ்) " 'கருப்புவில்*

*மலர்க்கணைக் காமவேளைக் கழலிணை பணிந்து' என்று மன்மதனைப் பரதேவதையாக எண்ணி அவன் காலிலே விழுந்து" (பக்கம் 17 தமிழ்) "உள்ளே தூக்கக் கலக்கத்தில் உள்ளவளை(னை) அறிவுறச் செய்து கையைப் பிடித்திழுத்து..."*

ஆண்டாள் பற்றிய இப்புத்தகம் நமக்கு வரவில்லை. அதனால் பக்கம் 17 தமிழிலுள்ளதை ப்ரகரணத்தைப் பார்க்காமல் விமர்சிக்க இயலாது. பக்கம் 163 ஆங்கிலத்திலுள்ளது திருப்பாவையிலுள்ள பாட்டுக்களில் ஒரு பதத்தாலும்கூட ஆசரிக்கப்படவில்லை. "எப்பாவாய்" என்ற இடத்தில் "பாவை' என்னும் பதத்திற்கு அழகுநிறைந்த பெண்ணான ரதியைப் பொருளாகக் கொண்டு "நாச்சியார் திருமொழியில், காமனை ஆச்ரயிப்பதற்கு முன் ரதியை ஆச்ரயிக்கிறாள்" என்னும் நிர்வாஹமுமுண்டு. 'பாவை' என்னும் பதத்துக்குக் "காத்யாயனியைப்பொருளாகக் கொண்டால்," ட்ராட்ய த்வரையாலே காத்யாயனியை ஆச்ரயிக்கிறாள் என்று உரையிட இடமுண்டு. பக்கம் 18 தமிழில் சொல்லியிருப்பதில் ஆண்டாள், மன்மதனைப் பரதேவதையாக எண்ணி அவன் காலிலே விழுந்ததாகக் கூறியது மிகத் தவறு. காதலர்களைச் சேர்த்துவைக்கும் தேவதை என்றெண்ணியே ஆண்டாள் மன்மதன் காலில் விழுகிறாள். பரதேவதையாக எண்ணினாள் என்பதற்கு நாச்சியார் திருமொழி முதல் திருமொழியில் ஒரு பதங்கூட ஆதாரமாயில்லை. பக்கம் 101 ஆங்கிலத்தில் சொல்லியிருப்பது மிகவும் அபத்தமானது. இதை எழுதியிருப்பவர் திவ்யப்ரபந்தத்தையோ ஆழ்வார்களையோ, திவ்யப்ரபந்தத்துக்கு அமைந்த அற்புதமான வியாக்கியானங்களையோ அடியோடு அறியாதவர் என்று விளங்குகிறது. இத்தகைய வாக்கியங்கள் ஆண்டாளைப் பற்றிய ஒரு கருத்தரங்கின் தொகுப்பில் இடம்பெற்றது மிகவும் வருந்தத்தக்கது.

*V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.*

*94 பிப்ரவரி '87 கலைமகளில் "கருணைக் கடல்" என்னும் தலைப்பில் காமகோடிப் பெரியவர் எழுதிய கட்டுரை ஒன்று காணப்படுகிறது. ஸௌந்தர்யலஹரி சுலோகங்களைக்கொண்டு மும்மூர்த்திகளுக்குமேல் 'காமேசுவரன் காமேசுவரி' என்று*

இரண்டு தத்துவங்கள் இருப்பதாகக் கதைக்கிறார். "பகலொளி மாதிரி சுத்தஸ்படிக நிறமாகவுள்ள பரப்பிரம்ம ஸ்வரூபத்திட மிருந்து முதல் தோன்றியது சக்தி; சிவப்பு வர்ணம். அந்த சக்தி வெளிப்பட்டவுடனே மஞ்சள், நீலம், ஸ்வர்ணம் போன்ற பல வர்ணங்கள் ரூபங்கள் உண்டாகின்றன உருவமில்லாத பரமாத்ம ஸ்வரூபத்திடமிருந்து தோன்றியது பராசக்தி. நல்ல சிவப்பு நிறம், எல்லாவற்றையும் காட்டிலும் உயர்ந்தது பிறவற்றைப் பாதிக்காத நல்ல சிவப்பாக இருக்கிறது. மூன்று மூர்த்திகள் மூன்று சக்திகள் ஆவிர்பவித்தன. பராசக்தி பரப்பிரம்மத்தைத் தனக்கு வர்ணமில்லாத சுத்தஸ்படிக ஸ்வயம்ப்ரகாசமாகக் காமேசுவரன் என்னும் பெயருடன் நாதனாக அமைத்துக் கொண்டாள். ஒரு புருஷன் ஒரு ஸ்த்ரீயாக ஆறு படைப்புக்கள் இரண்டிரண்டாக சிவனும் சரஸ்வதியும் சேர்ந்து ஆவிர்பவித் தார்கள். பிரம்மாவும் இலட்சுமியும் சேர்ந்து ஆவிர்பவித்தார் கள். விஷ்ணுவும் பார்வதியும் சேர்ந்து ஆவிர்பவித்தார்கள். ஒரு பெண்ணும் ஓர் ஆணுமாக ஒரே சமயத்தில் இரட்டையாக ஆவிர்பவித்தனர். ஆகையால் இவர்கள் இரண்டு பேர்களும் ஒருவர்க்கொருவர் ஸஹோதர ஸஹோதரிகள் அண்ணன் தங்கை என்று அர்த்தம்" என்று நிறங்களைக்கொண்டு த்ரிமூர்த்தி உத்தீர்ண ப்ரம்மவாதம் செய்கிறார். இதை விமர்சிக்க வேண்டு கிறேன்.

"முதலாவார் மூவரே" "முதலாம் திருவுருவும் மூன்றென்பர்" என்று ஆழ்வார்களாலும், "த்ரயோ தேவாஸ்துல்யா:" என்று ஸ்ரீபராசரபட்டராலும், "ஆத்மைக்யம் தேவதைக்யம்" என்று வேதாந்ததேசிகராலும் த்ரிமூர்த்திஸாம்யவாதம், ஐக்யவாதம், உத்தீர்ணவாதம் ஆகிய வாதங்கள் அடியோடு தகர்க்கப்பட்டிருக்கின்றன. பலவேதவாக்கியங்களிலும், ஆயிரக்கணக்கான இதிஹாஸ புராணவாக்யங்களிலும், பல்லாயிரக் கணக்கான வடமொழி தென்மொழிக் காவியப்பாடல்களிலும் 'திருமாலாகிற நாராயணன் ஒருவனே பிரளயகாலத்தில் இருந்தான்' என்றும், 'அவனுடைய நாபீ கமலத்தில் (உந்தித் தாமரையில்) பிரமன் தோன்றினான்' என்றும், 'அவனிட

யிருந்து உருத்திரன் முதலான எல்லா தேவர்களும் தோன்றினர் என்றும் முழங்கப்படுகிறது. ஆதிசங்கரரின் கீதா பாஷ்யம் முதலானவற்றிலும் இது நிலைநிறுத்தப்பட்டது. அப்படியிருக்கும்போது ஆதிசங்கரர் பரம்பரையில் வந்ததாகச் சொல்லிக்கொள்ளும் காமகோடிபீடாதிபதி அவர் காலத்துக்குப் பின் பலநூற்றாண்டுகள் வரையில் எவராலும் கையாளப்படாத பிற்காலக் கற்பனையான 'ஸௌந்தர்யலஹரி' என்னும் சாக்த நூலைக்கொண்டு பரப்பிரம்மத்தையும் மும்மூர்த்திகளையும் வர்ணங்களோடு ஒன்றாக்கி எழுதுவது சிறுபிள்ளைத்தனமானது. ஸகலப்பிரமாணங்களுக்கும் முரணானது. ஆதிசங்கரர் பாஷ்யங்களுக்கு முரணானது. எல்லாப் பிரமாணங்களும் பிரமனை லக்ஷ்மீ நாராயணர்களின் பிள்ளையாகக் காட்டுகின்றன. இவர் பிரம்மாவின் தங்கை இலட்சுமி என்பது விலவறச் சிரிக்கத் தக்கது, சிவனும் ஸரஸ்வதியும், விஷ்ணுவும் பார்வதியும் அண்ணன் தங்கை என்பதும் அத்தகையதே. கிருஷ்ணாவதாரத்தில் திருமாலின் நியமனத்தாலேயே யசோதைக்குப் பெண்ணாகப்பிறந்து, துர்க்கை கண்ணனுக்குத் தங்கையானாள் என்பது தவிர விஷ்ணுவும் பார்வதியும் வேறொரு தத்துவத்துக்குப் பிறந்து அண்ணன் தங்கையானார்கள் என்பதற்கு எந்த ஆதாரமும் கிடையாது. வேதங்களிலோ ஸாத்விக சாஸ்த்ரங்களிலோ பழைய தென்மொழி வடமொழி நூல்களிலோ இவருடைய கூற்றுக்கு ஏதேனும் ஆதாரம் காட்டினாலொழிய இவருடைய அபத்தவாதம் அறிவாளிகளால் ஏற்கப்படாது காற்கடைக்கொள்ளப்படும்.

*ஸ்ரீ ராம்பன்னம் பாஷ்யகாராசாரியர் ஸ்வாமி, சென்னை-5*

*95 31—5—87 'கல்கி'யில் "எப்போது ஓயும் நாமச் சண்டை" என்னும் தலைப்பில் எழுதப்பட்ட கட்டுரையினிடையே "வடகலை தென்கலை வித்தியாசம் என்ன?" என்னும் தலைப்பில் காவல்பாக்கம் யஜ்ஞவராஹநாதாச்சாரியர் தம் கருத்தைத் தெரிவித்துள்ளார். இதுபற்றி விமர்சிக்க வேண்டுகிறேன்.*

'எப்போது ஓயும் நாமச்சண்டை' என்னும் கேள்விக்கு "சிருங்கேரி காமகோடிச் சண்டை என்று ஓயுமோ, அவர்களிடையேயுள்ள ஐந்துமடமா? நான்குமடமா? முதலான சண்டைகள் என்று ஓயுமோ அன்று நாமச் சண்டையும் ஓயும்" என்பது நமது பதில். ஆனால் காமகோடி பக்தர்களால் நடத்தப்படும் 'கல்கி' 'கலைமகள்' 'துக்ளக்' முதலான பத்திரிகைகளில் வைஷ்ணவர்களிடையேயுள்ள சண்டையைப் பெரிதாக எழுதுவார்களேயொழிய ஊருக்கு ஊர் சந்தி சிரிக்கும் சிருங்கேரி காமகோடிச் சண்டையைப்பற்றி எழுதமாட்டார்கள் விஷ்ணுகோயிலில் எந்தத் தொடர்புமில்லாத அந்தணல்லூர் ஸ்மார்த்தர்கள் அவ்வூரிலுள்ள வைஷ்ணவர்களிடமுள்ள விரோதத்தாலே தங்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயத்தில் தலையிட்டு, ஆதாரங்களைக்காட்டி நீதிமன்றங்களில் வெல்ல வழியில்லாமையாலே, வழக்கு நடந்துகொண்டிருக்கும்போதே 'தராசு' பத்திரிகையில் தாறுமாறாக எழுதவைத்தார்கள். தங்களுக்குப் பாதகமான தீர்ப்பைப் பெற்ற பின்பு தாங்கள் செய்திருக்கும் அப்பீலில் (மேல்முறையீட்டில்) தீர்ப்பு வரும்வரையில் காத்திருக்கப் பொறுமையில்லாமல் இப்போது காமகோடிப் பத்திரிகையான 'கல்கி'யைத் துணைக்கு அழைத்திருக்கிறார்கள். வழக்கு விசாரணையிலிருக்கும் போது 'கல்கி' இதில் தலையிட்டதே கோர்ட்டை அவமதிப்பதாகும். அப்பிழையை நாம் செய்யப்போவதில்லை, தென்கலை வடகலைபற்றிக் கருத்து வெளியிட நினைத்தால் 'கல்கி' பத்திரிகை நடுநிலைமையோடு ஒரு தென்கலை வித்வானின் கருத்தையும் ஒரு வடகலை வித்வானின் கருத்தையும் வெளியிட்டிருக்க வேண்டும். நடுநிலைமையில்லாமையாலே 'கல்கி' அப்படிச் செய்யாமல் ஆராய்ச்சி வல்லமையில்லாத ஒரு வடகலை நபரின் கருத்தைமட்டும் வெளியிட்டிருக்கிறது. இவருடைய கருத்துக்கள் உண்மைக்கு மிகவும் முரண்பட்டவை என்பதை விளக்குவோம்.

இவர் தமது சிறு குறிப்பின் தொடக்கத்திலேயே இராமாநுஜர் 10-ம் நூற்ருண்டின் இறுதியில் வாழ்ந்தவர் என்று எழுதுகிருர். ஸ்ரீ ராமாநுஜருடைய காலம் கி.பி. 1017 முதல் கி.பி. 1137 வரை என்பது ஆராய்ச்சியாளர் அனைவரும் இசைந்ததொன்ருகும். இதிலிருந்தே இவருடைய ஆராய்ச்சியின் தரம் விளங்குகிறது. அடுத்தபடியாகப் பூர்வாசார்யர்கள் காலத்தில் தென்கலை வடகலை எல்லாம் கிடையாது என்கிருர். பெருமாளுடைய திருமண் கஸ்தூரிதிலகம்தான் என்றும் 'U வடிவம்தான்' என்றும் குறிப்பிடுகிருர். ஸ்ரீ வைஷ்ணவர்கள் எந்தவிதமான திருமண்காப்பைப் பூர்வாசார்யர்கள் காலத்தில் இட்டுக் கொண்டிருந்தார்கள் என்பதுபற்றி இவர் எழுதவில்லை. ஸ்ரீ வேதாந்த தேசிகர் பாதுகா ஸஹஸ்ரத்தில் திருமண் U வடிவில்தான் இருக்கும் என்று குறிப்பிட்டிருப்பதாக எழுது கிருர். எந்த ஶ்லோகத்தில் என்று குறிக்கவில்லை. ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய திருமண்காப்பு U வடிவிலிருப்பதாகப் பாதுகா ஸஹஸ்ரத்தில் எங்கும் குறிப்பிடப்படவில்லை. வேதாந்த தேசிகர் தமது ஸச்சரித்ரரக்ஷை என்ற நூலில் இரண்டாம் அதிகாரத்தில் 'எம்பெருமானுடைய அர்ச்சாவதாரத் திருமேனி யில் பலவிதமான அமைப்பில் ஊர்த்வபுண்ட்ரங்கள் உள்ளன' என்றும், 'அவை அலங்காரத்திற்காகவாகையால் எப்படி வேண்டுமானலும் இருக்கலாம்' என்றும், 'அதேமாதிரிதான் பாகவதர்கள் திருமண்காப்பு சாத்திக்கொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை' என்றும், 'ஶ்ருதி முதலான ப்ரமாணங்களைக் கொண்டு பார்க்கும்போது பரமைகாந்திகள் பகவானுடைய இடைவெளியுள்ள திருவடிகளின் ஆகாரத்தில் திருமண்ணை யும் அவற்றினிடையே லக்ஷ்மீதேவியைக் குறிக்கும் ஸ்ரீசூர்ணத் தையும் திருமண்காப்பாக இட்டுக்கொள்ள வேண்டுமென்றும் அது தண்டாகாரமாய் (தடியைப்போல் நீண்டு) இருக்கவேண்டு மென்றும், ருஜுவானதாய் (நேரானதாய்) இருக்கவேண்டு மென்றும் தேறுகிறது' என்றும் நிலைநாட்டியுள்ளார். ஒரு திருவடியின் ஆகாரத்துடன் இருக்கும் U வடிவில் அமைந்த நாமம் தண்டாகாரமாக இருக்கிறது என்றும், நடுவில் ஸ்ரீ தேவி

இருக்கலாம்படி இடைவெளியுள்ளது என்றும் எப்படிக் கூறமுடியும்? U வடிவில் வளைந்திருக்கும் நாமத்தை ருஜுவான (நேரான) திருநாமம் என்று எப்படிக் கூறமுடியும்? வேதாந்ததேசிகர்—திருநாமம் வளையாமல் நேரானதாயிருக்க வேண்டுமென்று ப்ரஹ்மாண்ட புராணத்திலும், மரீசிஸம்ஹிதையிலும், பாரமேஷ்ட்யஸம்ஹிதையிலும், ப்ரஹ்ம ராத்ரத்திலும் முழங்கப்பட்டுள்ளதாக ப்ரமாணங்களை எடுத்துக்காட்டியிருப்பதற்கு இவர் என்ன பதில் சொல்ல முடியும்? அஷ்டாதசரஹஸ்யகர்த்தாவாய் ஆசார்யாக்ரேஸ ரான பிள்ளை லோகாசாரியரை 'பிள்ளை லோகாச்சாரி' என்று பலமுறை குறிப்பதிலிருந்து இவர் தென்னாசார்யர்களிடம் மிகுந்த த்வேஷங்கொண்டவர் என்று விளங்குகிறது. 'வேதாந்தாச்சாரி' என்று தேசிகரையோ 'சங்கராச்சாரி' என்று ஆதிசங்கரரையோ இவர் எழுதுவாரா? எழுதினாலும் 'கல்கி' பத்திரிகை அதை வெளியிடுமா? அஷ்டாதச ரஹஸ்யத்தை 'அஷ்டாசதரஹஸ்யம்' என்றும், ஸமாச்ரயணத்தை சமாச்சரணம்' என்றும் எழுதுவதிலிருந்து இவருடைய ஸம்ப்ரதாய அறிவு மிகவும் மோசமானது என விளங்குகிறது. விளாஞ்சோலைப்பிள்ளையைப்பற்றி இவர் எழுதும் கதை முழுப் பொய்யானது. எந்த நூலிலும் இதற்கு ஆதாரமில்லை. அஷ்டாதசரஹஸ்யத்தில் "பெருமாள் திருமண் காப்பு அஷ்டமீ சந்திரனில் அமிர்ததாரை பெருகினாற் போல் இருந்தது" என்று குறிப்பிட்டுள்ளதாக இவர் எழுதுகிறார். " அஷ்டமீ சந்திரன் U வடிவம் என்பது குறிப்பிடத்தக்கது" என்றும் இவர் எழுதுகிறார். இதுவும் இவ ரது ஆராய்ச்சியின்மையையே காட்டுகிறது. அஷ்டாதச ரஹஸ்யத்தில் ஒன்றான அர்ச்சிராதிகதியில் மூன்றாவது ப்ரகர ணத்தில் பிள்ளைலோகாசார்யர் அருளியிருப்பதின் கருத்தாவது:— "பெருமாளுடைய திருநெற்றி அஷ்டமீசந்திரன்போலே அரை வட்டவடிவில் இருக்கிறது, அதிலே விழுகின்ற திருக்குழல்கள் (கேசபாசங்கள்) அஷ்டமீ சந்திரனில் அம்ருத தாரை விழு வதுபோல் இருந்துகொண்டு திருநாமத்தை மறைப்பது

காட்டுவதாயுள்ளது" என்பதாகும். இக்கருத்தைப்புரிந்து கொள்ளாமல் திருநாமமே அஷ்டமீசந்திரன் வடிவுள்ளது என்று பொருள் கொண்ட இவருடைய ஆராய்ச்சியின்மையை என்னென்பது? எந்தத் திருமண்காப்பும் அஷ்டமீசந்திரன் போன்று அரைவட்டமாக இருப்பதில்லையே! சந்திரன்போன்ற முகத்தில் மேல் பாதியான நெற்றியை அரைவட்டமென்று குறிப்பதல்லவோ பொருத்தம். "அஷ்டமீசந்திரனிலே அம்ருத தாரை விழுந்தாற்போலே திருநெற்றியிலே அசைந்து விழு கின்ற குழல்களையும்" என்றல்லவோ அங்கு வாக்யத்தில் அந்வயம்! கடைசியாக இவர் "ராமாநுஜர் காலத்தில்கோயில் களைக் காப்பாற்றவும் பூஜைகளைச் செவ்வனே கவனிக்கவும் ஆட்கள் தேவைப்பட்டனர். அப்போது வைஷ்ணவ சமயத் தில் ஏராளமானவர்களைச்சேர்த்து இந்தப்பணிக்கு அனுப்பி வைத்தார் ராமாநுஜர். பெரும்பாலான கோயில்களில் தென் கலை ஆதிக்கம் இருப்பது அதனால்தான்" என்று எழுது கிறார். ஆக, ராமாநுஜர் கோயில்களைக் காப்பதற்குத் தென் கலையார்களையே நியமித்தார் என்றும், வடகலையார்கள் ராமா நுஜரால் கோயிலைக் காக்க நியமிக்கப்பட்டவர்கள் அல்லர் என் றும் இவரே ஒப்புக்கொள்கிறார் என்று விளங்குகிறது. பெரும் பாலான கோயில்களில் தென்கலை ஆதிக்கம் இருப்பதை இவரே ஆதாரமாகக் காட்டுகிறார். ஒருசில கோயில்கள் வடகலையாயிருப் பதும் சமீபகாலத்தில் வடகலையார்கள் அக்கோயில்களை ஆக்ர மித்ததாலேயே என்பது சொல்லாமலே விளங்கும். வடகலையா யிருக்கும் திவ்யதேசங்கள் இன்ன இன்ன காலத்தில் வடகலையா ரால் ஆக்ரமிக்கப்பட்டன என்பதை அந்தந்த திவ்யதேசங்கள் பற்றி சுமார் நூறு வருடகாலமாக ஏற்பட்டுள்ள கோர்ட்டு வழக்குகளே நிரூபிக்கின்றன. இவர் எழுதியிருக்கும் சிறுகுறிப் பில் இப்பகுதியொன்றே ஸாரமானதும் உண்மையானதுமாகும்.

S. முரளி, அந்தணல்லூர்

*96. மே '87 'கலைமகள்' மாத இதழில்* "*நான்காவது பேரானந்தம்*" *என்னும் தலைப்பில் காமகோடிப் பெரிய*

பீடாதிபதி ஆதிசங்கரர் பெயரில் சுமத்தப் பெற்ற "ஸௌந்தர்யலஹரி" ச்லோகம் ஒன்றை எடுத்துக்கொண்டு "மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்டவள் சக்தி" என்னும் மாயவாதத்தைப் புரிகிறார். அதோடு நில்லாது 'சிவன்தான் ஸீதை' என்றும் 'பார்வதிதான் ராமன்' என்றும் ஏதோ ஒரு ராமாயணத்தில் எழுதியிருப்பதாகவும், ஸீதையாயிருக்கும் சிவனைப் பூசிப்பதற்காகவே ராவணன் அவளைத் தூக்கிக்கொண்டு போனான் என்றும், ராமன் ஸ்த்ரீயே என்பதற்கு வால்மீகி ராமாயணத்தில் ஆதாரமிருக்கிறது என்றும் கதை அளக்கிறார். இவற்றின் பொய்ம்மையை அம்பலப்படுத்த வேண்டுகிறேன்.

ஸௌந்தர்யலஹரியில் சொல்லப்பட்டிருக்கும் மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்ட சக்திவாதம் ஆதிசங்கரரின் பாஷ்யங்களுக்கு முரண்பட்டது. ஆதிசங்கரர் தம் பாஷ்யங்களில் நூற்றுக்கணக்கான இடங்களில் 'நாராயணன் ஒருவனே எல்லா தேவர்களையும் படைத்து ரக்ஷித்து அழிக்கும் பரம்பொருள்' என்று முழங்கியிருக்கிறார். இதை தம்முடைய 'சங்கரரும் வைணவமும்' என்னும் நூலில் விரிவாகக் காட்டியிருக்கிறோம், எடுத்துக்காட்டாக ஓரிடம் காட்டுவோம் இங்கு.

ஆதிசங்கரரின் கீதாபாஷ்யத்தின் தொடக்கத்தில் உள்ள சுலோகத்தில் "நாராயணனே ஸ்தூலமான அனைத்துலகிற்கும் அதற்கு மூலமான மூலப்ரக்ருதிக்கும் மேம்பட்டவன்" என்று முழங்கியிருக்கிறார். அடுத்தபடியாக "ஆதிகர்த்தா நாராயண:" [நாராயணனே படைப்புத்தொழில் செய்யும் அனைவர்க்கும் முதல்வனாயிருப்பவன்] என்று தம் பாஷ்யத்தைத் தொடங்குகிறார். இதற்கு முரணாக 'அந்த நாராயணனையும் சக்தி படைக்கிறாள்' என்று ஸௌந்தர்யலஹரியில் பிதற்றியிருப்பவர் ஆதிசங்கரரின் துரோஹியாயிருக்க முடியுமே தவிர ஆதிசங்கரராயிருக்கமுடியாது என்பது சிறுவர்களுக்கும் விளங்கும். ஆனால் தொண்ணூறுவயதைக் கடந்த பீடாதிபதி திருப்பித்திருப்பி எழுதுவதின் மூலம் இந்தப் பொய்யை

மெய்யாக்கப் பார்க்கிறார். இனி ராமாயணத்தைப்பற்றி எழுதி யிருப்பதைக் காண்போம். பார்வதியே ராமன் என்றும், சிவனே ஸீதை என்றும் ஏதோ ஒரு ராமாயணத்தில் எழுதியிருக்கிறதாம். அந்த ராமாயணத்தின் பெயர்கூட இவருக்குத் தெரியவில்லை. எவனோ ஊர்பேர் தெரியாத ஒருவன் பெயர் தெரியாத தொரு நூலில் எதையோ எழுதினால் அது எப்படி அறி வாளிகள் ஏற்கத் தக்க ப்ரமாணமாகும் என்பதைக்கூட உணர மாட்டாத இவரது அறிவை என்னென்பது! இந்த அபத்தப் பிதற்றலுக்கு "ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்" என்னும் வால் மீகி சுலோகத்தை ஆதாரமாகக் காட்டுவது நகைக்கத்தக்கதா யுள்ளது. ஸ்ரீராமபிரான் தன்னைக்காட்டுக்குக் கூட்டிக்கொண்டு போகமாட்டேன் என்று சொன்னதாலுண்டான ரோஷத்தாலே "கூட அழைத்துக்கொண்டுபோய் மனைவியைக் கூட ரக்ஷிக்க மாட்டாத உம்மை என் தகப்பனார் ஆண் வேஷம் பூண்ட பெண் என்றல்லவோ நினைப்பார்" என்று கூறிச் சீண்டி விடுகிறாள் சீதாப் பிராட்டி — தன்னைக் காட்டுக்கு அழைத்துப் போகவேண்டுமென்பதற்காக. இதைக் கேட்ட புருஷோத்த மனான ராமபிரானும் தனுக்குற்று அவளைக் காட்டுக்கு அழைத்துச் செல்கிறான். வால்மீகி ஸ்ரீராமபிரானைப் புருஷோத் தமன் என்று பல இடங்களில் முழங்குகிறார். 'தேவாதிதேவன்' என்று பறைசாற்றுகிறார். அப்படிப்பட்ட பரமபுருஷனைப்பெண் என்று பிதற்றி அதற்கு வால்மீகியை ஆதாரமாகக்காட்டுவது இவருக்குச் சிறிதும் நேர்மை இல்லை என்பதையே வெளிப் படுத்துகிறது.

வே. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம், மற்றும் பலர்.

*97. ப்ரபவ ஆனி ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் ஸ்ரீ அழகியசிங்க ரின் அமுதமொழியில் "இந்தப்பரமாத்மாவைப்போல் ஸகல விதமான கல்யாணகுணங்களையுடைய மற்றொரு ப்ரஹ்மம்—மற் றொரு பரமாத்மா இருக்கிறது. அந்தப் பரமாத்மா யார் என் றால் அதுதான் மஹாலக்ஷ்மியாக ஒரு பெண் உடலைத் தரித்துக் கொண்டிருக்கிறது. அந்த பகவான் பர்த்தாவாகவும் இம்*

மாதிரியான மகாலக்ஷ்மி பத்னியாகவும் விளங்குகிறுள்'' என்றும், ''எம்பெருமானை 'வானிளவரசு' என்று சொல்லுவது அவனை விடப் பெரிய அரசு மகாலக்ஷ்மிதான்; பகவான் இளவரசு என்னும் கருத்தை உடையது' என்றும் எழுதப்பட்டுள்ளது. இது ஸ்ரீராமாநுஜதர்சனமோ அல்லது தேசிகதர்சனமோ ஆகுமா?

இது ஸ்ரீ ராமாநுஜதர்சனமும் ஆகாது. ஸ்ரீ தேசிகதர்சனமும் ஆகாது. இருவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விசிஷ்டாத்வைததர்சனமும் ஆகாது. ''ஸகல சேதநாசேதன விசிஷ்டமான ப்ரஹ்மம் ஒன்றே. அதுவே தனக்கு ப்ரகாரமான மற்ற எல்லாப் பொருள்களுக்கும் ப்ரகாரியாயிருப்பது'' என்பது விசிஷ்டாத்வைததர்சனத்தின் அடிப்படைக் கொள்கையாகும். இரண்டு ப்ரஹ்மம்—இரண்டு பரமாத்மா என்று ஸ்ரீமதழகிய சிங்கர் கூறுவதுபோல் கொண்டால் 'ஸகலசேதநாசேதனங்களையும் ப்ரகாரமாகக்கொண்டவை இரு தத்துவங்கள்' என்று ஏற்படும். இது விசிஷ்டத்வைதமாகுமேயொழிய விசிஷ்டாத்வைதமாகாது. ''அதா₂தோ ப்₃ரஹ்மஜிஜ்ஞாஸா'' என்னும் ப்₃ரஹ்மஸூத்ரத்தின் முதல் ஸூத்ரத்துக்குப் பதா₃ர்த்த₂ம் அருளுகையில் 'ப்₃ரஹ்ம ஶப்₃தே₃ந ச...புருஷோத்தம: அபி₄தீ₄யதே; ஸ ச ஸர்வேஶ்வர ஏவ; அதோ ப்₃ரஹ்மஶப்₃த₃ஸ் தத்ரைவ முக்₂ய வ்ருத்த:; தஸ்மாத₃ந்யத்ர தத்₃கு₃ணலேஶயோகா₃தௌ₃பசாரிக:.. அதஸ்ஸர்வேஶ்வர ஏவ ஜிஜ்ஞாஸாகர்மபூ₄தம் ப்₃ரஹ்ம'' என்று ப்₃ரஹ்மம் புருஷோத்தமனே என்றும், ஸர்வேச்வரனே என்றும், அவனொருவனிடமே ப்₃ரஹ்மஶப்₃த₃ம் முக்கியமான பொருளையுடையது என்றும், ''மற்ற எவரிடமும் அவனுடைய பெருமைகளில் ஒரு சிறிதே இருக்கையால் அவர்களை 'ப்₃ரஹ்மம்' என்று சாஸ்த்ரங்கள் வழங்குவது ஔபசாரிகமே'' என்றும் மிகஅழுத்தமாக முழங்கியிருக்கிறுர் ஸ்ரீபா₄ஷ்யகாரர். 'நாரீணாம் உத்தமை'யான ஸர்வபூ₄தேஶ்வரி எப்படிப் புருஷோத்தமனாகவோ ஸர்வேஶ்வரனாகவோ ஆகமுடியும்? ஆகையால், ஸ்ரீமதழகியசிங்கர்

எழுதியிருப்பது ஸ்ரீராமானுஜதர்சனம் ஆகமுடியாது. இது தேசிகதர்சனமுமல்ல என்பதை இனி நிரூபிப்போம். கீதா பாஷ்யத்தின் தொடக்கத்தில் பாஷ்யகாரர் "அநவதி₄காதி ஶயாஸங்க்₂யேய கல்யாண கு₃ணக₃ண ஸ்ரீ வல்லப₄:" [எல்லை யற்ற மேன்மையையுடைய எண்ணிக்கையற்ற கல்யாண குணங்களை உடைய பெரியபிராட்டியாருக்கு இனியவன்] என்று அருளியுள்ளார். இவ்விடத்தில் ஸ்ரீ வேதாந்ததேசிகர் தம் தாத்பர்ய சந்த்ரிகையில்,

"*அநவதி₄காதிஶயத்வவசநாத், ஈஶ்வரவ்யதிரிக்தாஶேஷ சே₂தனஸ்யாபி ததை₃ஶ்வர்யஸ்ய ஈஶ்வராபி₄மதத்வாத் ந த்₃வைராஜ்யாதி₃தோ₃ஷ: । 'அஸ்யேஶாநா ஜக₃தோ விஷ்ணுபத்நீ" இதி விஷ்ணுபத்நீத்வவேஷேண ஹி ஸர்வஸ்ய ஜக₃த: இயம் ஈஷ்டே । 'ஈஶ்வரீம் ஸர்வபூ₄தாநாம்' இத்யத்ரது யத்₃யபி ஸர்வபூ₄தாநாமிதி ப்ரதிஸம்ப₃ந்தி₄ நிர்தே₃ஶாத் ஸ்த்ரீப்ரத்யயாநுஸாரேண ஈஶ்வர பத்நீதி விவக்ஷா ந ஶக்யா ததா₂பி வாக்யாந்தரப₃லாத் அர்த்த₂ஸ்ய ததா₂த்வஸித்₃தி₄:*" [இவளுடைய கல்யாணகுணங்கள் எல்லையற்ற மேன்மையுடையவை என்று கூறுகையால் ஈஶ்வரனைத்தவிர்ந்த மற்ற அனைவர்க்கும் இவள் ஈஶ்வரி என்று விளங்குகிறது. ஆயினும் இவளுடைய ஈஶ்வரத்வம் எம்பெருமான் உகந்ததாகையால் ஈஶ்வரர்கள் இருவர் என்னும் குற்றமும், அதிலிருந்து விளையும் மற்றும் பலகுற்றங்களும் உண்டாக மாட்டா. யஜுர்வேதத்தில் [4, 4. 12 57] 'விஷ்ணுவின் பத்னியாகையால் இவள் உலகுக்கு ஈஶானியாயிருக்கிருள்' என்று விஷ்ணுவுக்குப் பத்தினியாய் இருப்பதாலன்றோ இவளுக்கு உலகை நியமிக்கும் ஈஶ்வரத்வம் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீஸூக்தத்தில் 'எல்லா ஜீவராசிகளுக்கும் ஈஶ்வரியை" என்று கூறியிருக்குமிடத்தில் 'ஸர்வபூ₄தாநாம்' என்று வ்யஸ்தமாக (பிரித்து) ப்ரயோகம் செய்திருக்கையாலே 'ஈஶ்வரீ' என்னும் பதத்துக்கு ஈச்வரபத்னி என்று கருத்துரைக்க முடியாதாகிலும், முன் எடுத்த யஜுர்வேத வாக்யத்தையொட்டிப் பார்க்கும்போது இங்கும் ஈஶ்வரபத்னியாயிருப்பதாலேயே

இவள் அனைத்துயிர்க்கும் ஈசானையாயிருக்கிறாள் என்றே கருத்துரைக்கவேண்டும்] என்று பாஷ்யத்துக்கு விளக்கம் அருளியுள்ளார். இதிலிருந்து 'இரண்டு ப்ரஹ்மம்-இரண்டு பரமாத்மா' என்பது வேதாந்த தேசிகதர்சனமுமல்ல என்று கல்வெட்டாகத் தேறுகிறது. ஸ்ரீவேதாந்த தேசிகருடைய மற்ற க்ரந்தங்களைப் பார்த்தாலும் அவர் நாராயணனொருவனையே ப்ரஹ்மமாகவும், ஸ்ரீ தேவியை அவனுக்கு சேஷபூதையான ஈச்வரியாகவுமே கருதினார் என்று நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். பிராட்டியைப் பரப்ரஹ்மமான நாராயணனுக்குப் பரதந்த்ரையாய் ஈச்வரகோடியில் சேர்ந்தவளாக அவர் திருவுள்ளம் பற்றியிருக்க முடியுமே தவிர அவளை ப்ரஹ்மமாகவோ பரமாத்மாவாகவோ கருதியிருக்கவேமுடியாது என்பது முன் எடுத்த தாத்பர்ய சந்த்ரிகா ஸ்ரீ ஸூக்திகளிலிருந்து தெளிவாக விளங்குகிறது.

'வானிளவரசு' [3-6-3] என்று பெரியாழ்வார் தம் திருமொழியில் அருளியுள்ளார், 'இளவரசன்' என்பதற்கு வயதுக்கு வராத அரசன் (மைனர்) என்று பொருள். அரசன் வயதுக்கு வராமலிருக்கும்போது வயதில் மூத்தவர்களான மந்திரிகள் அரசுக்காரியங்களைக் கவனித்துக்கொள்வது உலக வழக்கம். அதுபோல் வானிளவரசான பரமபதநாதனுடைய ஜகந்நிர்வாஹகார்யங்களை ''விண்ணாட்டவர் மூதுவர்'' எனப்படும் வயதில் மூத்த மந்திரிகள் போன்ற ஸேனைமுதலியார், திருவனந்தாழ்வான், பெரிய திருவடி முதலான நித்ய ஸூரிகள் கவனித்து வருவார்கள் என்று 'வானிளவரசு' என்னும் பதத்துக்குப் பல இடங்களில் கருத்துரைக்கிறார்கள் நம் பூர்வாசார்யர்கள். ''திருவனந்தாழ்வான் மடியிலும் ஸ்ரீஸேநாபதியாழ்வான் பிரம்பின் கீழிலும் பெரியதிருவடி சிறகின் கீழுமாய்த்து இத்தத்வம் வளருவது'' என்று பட்டர் அருளிச்செய்த தாசவும் எடுத்திருக்கிறார்கள். பெரிய பிராட்டியாரை வ்ருத்த மந்திரிகள் ஸ்தானத்தில் கொள்வது வயதில் மிகுந்த எம்பெருமானைவிட வயதில் குறைந்தவளான பெரிய பிராட்டியை வயதில் மூத்தவளாகக் கற்பிப்பதாகுமாகையால் ரஸிகர்களால் ஏற்கத்தக்கதன்று.

S. முரளி, அந்தணைல்லூர்

98. 15—8—87 சுதந்திரதினத்தன்று சென்னை தொலைக் காட்சியில் 'வால்மீகி' பற்றிய ஓர் நாடகம் ஒளிபரப்பப்பட்டது. அந்த நாடகத்தில் 'அடிமுடிதேடிய கதை' என்னும் கட்டுக்கதை வசனத்தில் புகுத்தப்பட்டது. ஸ்ரீ மகாவிஷ்ணுவே வேடனாக வந்து அன்றில் (க்ரௌஞ்ச) பறவைகளில் ஆண் பறவையைக் கொன்று வால்மீகியிடம் சாபம் பெற்றாரென்றும். ராமன் ஸீதை முதலான ராமாயண பாத்திரங்கள் எல்லாம் வால்மீகியின் கற்பனையில் உதித்தவையே என்றும் காட்டப்பட்டது. இவற்றுக்கு இதிஹாஸ புராணங்களில் ஏதேனும் ஆதாரமுண்டா?

எந்த ஆகாரமும் கிடையாது. நாடகம் நடத்துகிறவர்களும், தொலைக்காட்சி நிர்வாகிகளும் வைஷ்ணவ விரோதிகளாயிருக்கையாலே இத்தகைய அபத்தங்கள் பிரசாரம் செய்யப் படுகின்றன. அன்பர்கள் பலர் இவற்றைக் கண்டித்துச் சென்னைத் தொலைக்காட்சி நிலையத்துக்குக் கடிதம் எழுத வேண்டும்.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம் (2 கேள்விகள்)

99. 12-7-87 'கல்கியில்' காமகோடிப் பெரியவர் "எல்லா தர்மத்துக்கும் வேரான வேதம் வேரைப்போலவே வெளியே தெரியாமல், அதாவது எல்லாரிடமும் புழக்கத்துக்கு வராமல் அதை ரக்ஷிப்பதற்கான கடும் நியதிகளைப் பின்பற்றும் சிலரிடமே மறைந்திருக்கவேண்டும் என்ற உயர்ந்த கருத்தைச் சொல்லும் வார்த்தைதான் மறை. 'மறை' என்பதைப்போல் வேத லக்ஷணத்தைப் பளிச்சென்று சொல்கிற நேர்வார்த்தை ஸம்ஸ்கிருதத்திலேயே இல்லை" என்று எழுதியிருக்கிறார். இது சரியா?

இது சரியல்ல. 'மறை' என்னும் தமிழ்வார்த்தை "[illegible]" என்று வடமொழியில் வேதத்துக்கு வழங்கும் வடமொழிப் பெயரின் நேர்மொழிபெயர்ப்பேயாகும். வேதத்திற்கு வடமொழியில் அல்லது தமிழில் உள்ள எல்லாப் பெயர்களுக்குமே மற்ற மொழியில் நேர் வார்த்தைகள் உண்டு "வேதயதீதி வேத:"

என்னும் வ்யுத்பத்தியாலே வேதம் தன்பொருளைப் புண்ணி யம் செய்த நல்லவர்களுக்குப் புலப்படுத்துவதாகையாலே வட மொழியில் 'வேதம்' என்னும் பெயர் ஏற்பட்டது. சங்க இலக்கியமான பரிபாடலில் இதற்கு நேர்மொழிபெயர்ப் பாக "புலம்" என்னும் சொல்லாலே வேதம் வழங்கப்பட் டது. "புலமும் பூவனும் நாற்றமும் நீ" என்று முதற்பரி பாடலில் வழங்கியது காண்க. 'சாதயதீதி சந்த:' என்னும் வ்யுத்பத்தியாலே, பாபம் செய்த தீயவர்களுக்குத் தன் பொருளை மறைக்கையாலே 'சந்த:' என்று வடமொழியில் வேதத்திற்குப் பெயர் ஏற்பட்டது. இதற்கு நேர்மொழிபெயர்ப் பாயமைந்ததே 'மறை' என்னும் தமிழ்ப்பெயர். ஆகையால் 'மறை' என்னும் தமிழ் வார்த்தைக்கு நேரான ஸம்ஸ்க்ருத வார்த்தையில்லை என்று பீடாதிபதி கூறியது தவறேயாகும். "மறையாய நால் வேதத்துள் நின்ற மலர்ச்சுடரே" [திருவாய் 3-1-10] என்று நம்மாழ்வார் சிலருக்குத் தன் பொருளை மறைப் பதும் சிலர்க்குத் தன் பொருளைப் புலப்படுத்துவதுமான தன்மைகள் வேதத்திற்கு இருப்பதையிட்டே 'வேதம்' 'மறை' என்று இருபெயர்கள் அமைந்திருக்கின்றன என்று காட்டினார். "ஒரு பதிவ்ரதையான ஸ்த்ரீ தன் அழகைக் கண வனுக்குக் காட்டுவதுபோலே வேதம் சில புண்யசாலி களுக்கே தன்பொருளைக்காட்டுகிறது" என்று ஒரு வேதவாக் யம் கூறுகிறது. இதற்கு நேர்மாறாக "அந்தப்பதிவ்ரதை மற்ற வர்களுக்குத் தன் அழகை மறைப்பதுபோலே வேதமும் தன் பொருளைப் பாபிகளுக்கு மறைக்கிறது" என்னும் அர்த்தமும் வெளிப்படையானதேயாகும். இவ்வர்த்தத்தையே 'சந்த:' என்னும் வடமொழிச் சொல்லும் 'மறை' என்னும் தமிழ்ச் சொல்லும் குறிப்பதாகக்கொள்வது மிகப்பொருத்தமானது. "சிலரிடமே மறைந்திருக்கையால் மறை" என்று பீடாதிபதி கூறும் பொருளைக் கொண்டாலும் 'சந்த:' என்னும் வட மொழிப் பதம் அப்பொருளையும் கூறவல்லதேயாகையால் 'மறை' என்னும் தமிழ்ப் பதம் 'சந்த:' என்னும் வடமொழிப் பதத்தின் நேர்மொழிப்பெயர்ப்பே என்பதில் ஐயமில்லை. இதைப் போலவே 'ஆம்நாயம்' [ஆசார்யன் வாயால் உச்சரிக்கப்பட்டே

பரவுவது] என்று வேதத்திற்கு அமைந்த வடமொழிப் பெயரை, பரிபாடலில் சங்ககாலச் சான்றோர் "வாய்மொழி" என்று மொழிபெயர்த்தனர். 'ஶ்ருதி' [சிஷ்யன் காதால் கேட்பதனாலேயே பரவுவது] என்னும் வேதத்துக்குள்ள வட மொழிப் பெயரும் அவர்களால் 'கேள்வி' என்று தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. "அநாதி₂வாக்" என்று வேதத்திற்கு வடமொழியிலுள்ள பெயர் "முதுமொழி" என்று அவர்களால் தமிழில் மொழிப்பெயர்க்கப்பெற்றது. மற்றும் சிலவும் உண்டு.

*100, 6—7—87 கல்கி இதழில் காமகோடிப் பெரியவர் "ஸ்ரீவேதாந்த தேசிகரைப் பின்பற்றும் வடகலைக்காரர்கள் 'மர்க்கட கிசோர' நியாயத்தை அனுசரித்து நாம்தான் விடா முயற்சியுடன் ஸ்வாமியை விடாமல் பிடித்துக்கொண்டிருக்க வேண்டும் என்கிறார்கள். ஸ்ரீமணவாளமாமுனிகள் ஸ்ரீபிள்ளை லோகாசார்யார் ஆகியவர்களைப் பின்பற்றும் தென்கலைக்காரர்கள் 'மார்ஜார இசோர' நியசயப்படி நாம் எந்த முயற்சியும் இல்லாமல் கிடந்தால் போதும். ஸ்வாமியே நம்மை ஆட்கொண்டு விடுவார் என்கிறார்கள்" என்று கூறியிருக்கிறார். இதுசரியா?*

இது சரியே, ஆனால் 'இசோர' என்பதற்குப் பதிலாக 'கிஶோர' என்று இருக்க வேண்டும். பல இடங்களில் 'இசோர' என்று விழுந்திருப்பது அச்சுப்பிழையாயிருக்க லாம். வடமொழியில் 'கிஶோர' சப்தம் குழந்தை யையும் குட்டியையும் குறிக்கும். நந்தகுமாரனை 'நந்த கிஶோரன்' என்று குறிப்பது பிரசித்தம். அதுபோல் 'மர்க்கட கிஶோரம்' என்று குரங்குக்குட்டியையும் 'மார்ஜாரகிஶோரம்' என்று பூனைக்குட்டியையும் குறிப்பதே சரியானது. யஜ்ஞ மூர்த்தி என்ற பெரிய அத்வைத ஆசார்யர் எம்பெருமானாரால் வெற்றிகொள்ளப்பட்டு அவருக்குச் சீடராகி "அருளாளப் பெருமாள் எம்பெருமானார்" என்று பெயர் பெற்றவர், தமது 'ஞானசாரம்' என்னும் நூலில் "சாதகம்போல் நாதன் தனதருளே பார்த்திருத்தல் கோதில் அடியார் குணம்" என்று அருளியிருக்கும் சாதக நியாயம் மார்ஜாரகிஶோர நியா யத்தை ஒத்திருப்பது உணரத்தக்கது.

(ஸுதர்சனர் பதிலில் ஒன்பதாவது சதகம் முற்றிற்று)